உ



# முருகன் பாடல்

## ஆறாம் பகுதி



தெட்சணத்தார் வேளாளர் மகமை
பரிபாலன சொசைட்டி லிமிட்டெட்
98, ஜிந்துப்பிட்டி தெரு
கொழும்பு-11, இலங்கை.

உரிமை பதிவு
ஆங்கீரச ஆவணி
திருவள்ளுவராண்டு 2023
1992 ஆவணி

ஆறு பகுதிகள் கொண்ட ஒரு தொகுதியின் விலை.

இலங்கையில் : ரூபா 2100/-
இந்தியாவில் : ரூபா 900/-
பிறநாடுகளில் அமெரிக்க டாலர் 50/-

ஆறாம் பகுதி உருவாக அணி செய்தவர்:
திரு. சு. அசோகன் அவர்கள்.
255, செட்டியார் தெரு, கொழும்பு - 11.

ஒளிஅச்சுக்கோப்பு, அச்சிடல்:

*காந்தளகம்,* 4, முதல்மாடி, 834, அண்ணாசாலை, சென்னை-600 002. தொலைபேசி: 834505, 8250050.

பாட்டு முதற் குறிப்பு அகராதி
பாட்டுடைக் கோவில் அகராதி
பாட்டுத் தலைப்பு அகராதி
ஆசிரியர் அகராதி
என்பன
ஆறாம் பகுதியில்
இறுதிப் பக்கங்களாக உள.
தொகுப்பின் பொருளடக்கம்
முழுமையும் எல்லாப் பகுதிகளிலும்
முன் பக்கங்களில் உள.

# நூலாக்கம்

**பதிப்பாசிரியர்:** சித்தாந்தச் செம்மல், சைவசித்தாந்த மாமணி வித்துவான் இரா. அம்பை சங்கரனார் ஆசிரியர், ''சித்தாந்தம்'' சென்னை. **நூல் தொகுப்பு சேகரிப்பில் உதவி, ஆலோசனை:** க. முத்துக்குமாரசுவாமி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்; புலவர் வெ.சா. ஏகாம்பரம், புலியூர், சென்னை; சி.என். சிங்காரவேல், சி.ஐ.டி. நகர், சென்னை; ந. ஜெயராமன், மேற்கு மாம்பலம், சென்னை; க. சோமசுந்தரம் பிள்ளை, இந்திரா நகர், சென்னை; சாது தங்கவேல் சுவாமிகள், பாம்பன் சுவாமிகள் திருமடம்; புலவர் அ. வைத்தியநாதன, விழுப்புரம்; புலவர் கோ. கதிர்வேல் முதலியார், ஆரணி; புலவர் ந. தண்டபாணி, புதுவண்டிப்பாளையம்; சுப. ஆவுடையப்ப தேசிகர், அம்பாசமுத்திரம்; மு.சு. சங்கர், திருநெல்வேலி; பீக்கே குமாரசாமிக்கவுண்டர், வெள்ளக்கோவில்; புலவர் வி. அண்ணாமலை முதலியார், பங்களூர்; மயிலங்கூடலூர் க. நடராசன், யாழ்ப்பாணம்; க. சொக்கலிங்கம், நாயன்மார் கட்டு, யாழ்ப்பாணம்; க. சண்முகலிங்கம், சைவபரிபாலன சபை, யாழ்ப் பாணம்; முனைவர் நா. சுப்பிரமணியன், யாழ்ப்பாணம்; புலவர் த. கனகரத்தினம், வெள்ளவத்தை, கொழும்பு; க. கந்தசாமி, கொழும்புத் தமிழ்ச் சங்கம், கொழும்பு; மு. கணபதிப்பிள்ளை, மறவன்புலவு, சாவகச்சேரி; வீரகேசரி, கொழும்பு; ஐ. குலவீரசிங்கம், கோலாலம்பூர், மலேசியா; க. ஆறுமுகம், கோலாலம்பூர், மலேசியா; ஈ.வி. சிங்கன், சிரங்கூன் தெரு, சிங்கப்பூர்; ப. படையாட்சி, ரோஸ்கில், மொரிசியசு; பீக்கே நாயுடு, தென் இந்திய சன்மார்க்க ஐக்கிய சங்கம், நந்தி, பிஜி; ஐ.தி. சம்பந்தன், இலண்டன்; கே. எஸ். நடராசா, கனடா; முனைவர் ஆ. கந்தையா, சிட்னி, ஆஸ்திரேலியா. **நூலாக்கம், அகராதி, சுட்டி, குறிப்பு:** முனைவர் நா. சுப்பிரமணியன், முதுநிலை விரிவுரையாளர், யாழ்ப்பாணப் பல்கலைகக் கழகம், யாழ்ப்பாணம். **நூலாக்கம், மெய்ப்பு, மேற்பார்வை:** புலவர் வெற்றியழகன், சென்னை. **ஒளிஅச்சுக்கோப்பு, கணிப்பொறிப் பணி:** க. இரவி, கோ. பார்த்தசாரதி, க. சாந்தி, ம. இராசப்பா, மூவை ந. சுந்தரராசன், அ. ஜெயராஜசிங்கம், சென்னை. **பக்கமாக்கல்:** ஓவியர்கள் சந்திரஹாசன், பூவரசு, சென்னை. **படச்சுருள் எதிர்மறை:** சக்தி வண்ண ஆய்வகம், சென்னை. **அச்சிடல், கட்டுவேலை:** ஸ்ரீ பாலாஜி கிளாசிக்ஸ், சென்னை. தங்க அச்சு, விநாயகா டைஸ்டாம்பு, சென்னை. **அலுவலக உதவி:** செ. மணிமேகலை, அ. ஜெயராஜ சிங்கம், செ.ரா. ஷோபனா, அ. ஸ்ரீனிவாசன், பெ. ஜெகநாதன், சென்னை. **நிதிக்கட்டுப்பாடு:** தெ. அருணாசலம், சென்னை. **பொதுத்தொடர்பு: இணைப்பு,** மேற்பார்வை தெ. ஈஸ்வரன், கொழும்பு. **தயாரிப்பு:** க. சச்சிதானந்தன், மறவன்புலவு, சாவகச்சேரி.

# பொருளடக்கம்

| வரிசை எண் | நூல் | பக்க எண் |
|---|---|---|

## முதல்பகுதி

## இரண்டாம் பகுதி



## மூன்றாம் பகுதி



## நான்காம் பகுதி

## ஐந்தாம் பகுதி



## ஆறாம் பகுதி

உ

# மயிலம் முருகன் பிள்ளைத்தமிழ்

## திருவாரூர் வைத்தியநாத தேசிகர்

### கணபதி காப்பு

#### வெண்பா

சீர்மயிலோன் மேற்பிள்ளைச் செந்தமிழைக் கூறுதற்குப்
பார்மயல்சூழ் வல்வினைகள் பாறவே—வோர்மருப்பு
நேரான முக்கண்ணு மிந்துசடை மேற்றரித்த
காரானை மாமுகத்தோன் காப்பு. 1

### 1. காப்புப் பருவம்

#### கணபதி

உள்ளங் களித்தெந்தை வார்சடைக் கானத்
துலாவித் துளைக்கை நீட்டி
யுயர்கற்ப கத்தழை முறித்துக் கவுட்சார
லூதுவண் டோச்சி வேணி
வெள்ளந் திளைத்துப் படிந்தாடி வல்லபையின்
வியன்முலைக் கோடு ழக்கும்
விகடகட தடகும்ப நடனகுஞ் சிதசரண
வேழத்தை யஞ்ச லிப்பாம்
பள்ளம் புகும்புன லெனக்குற மடக்கொடிப்
பைந்தொடிப் பேதை நனியிற்
பாயாத வேங்கையாய் நீழல்செய் தவள்கனிப்
பவளவா யூறல் பருக
கள்ளங் கொளுங்கிழக் கோலமேற் கொண்டுநீ
காட்டுகென வேட்டு நிற்குங்
கந்தனைச் சந்தனச் சோலைசூழ் மயிலைக்
கடம்பனைக் காக்க வென்றே. 2

## முருகன்

பஞ்சூட்டு பதுமமும் பதுமத்து நீலமும்
நீலோற் பலங் கிழித்த
பைந்தோட்டு வள்ளையு மணந்த குஞ்சரியைப்
பசுங்கொடிக் குறமா தினைச்
செஞ்சூட்டு சேவலங் கொடியையொரு நொடியிலெண்
டிசையெலாஞ் சூழு மயிலைச்
செவ்வேலை யணிகொண்ட வேலனைப் பணிவதே
தினம்வேலை யாகி நிற்பாம்
பிஞ்சூட்டு மதியமு நறையூட்டு மத்தமும்
பிணையூட்டு கங்கை யாறும்
பெட்பூட்டு பாசறுகு முட்பூட்டு பேழ்வாய்ப்
பெரும்பாந்த ளூட னணிந்த
நஞ்சூட்டு மணிமிடற் றான்மகிழ வுமைமாது
நற்கொங்கை யமு தாட்டநீ
ணகையூட்டு மணிமயிலை வளர்முருக னைப்பரவு
நந்தமிழ்க் கவி தழையவே. 3

## நெடுமால்

### வேறு

சீர்கொண்ட புகழ்மயிலைச் செல்வனைக்காங் கையனைச்
சிவஞான தேசிகனார் சிந்தைகுடி கொண்டு
வேர்கொண்ட வேலவனை ஞாலமெலா மீன்ற
வெற்பரசி தந்தகந்த வேளையென்றும் புரக்கப்
போர்கொண்ட மால்யானை வாசவனுக் குதவி
புத்தமுதும் பருக்காக்கிப் பொழிகதிர்மா மணியுந்
தார்கொண்ட கருங்கூந்தற் செய்யதிரு மாதுந்
தனக்கெனக்கொண் டயனையுந்தி தந்தநெடு மாலே. 4

## சிவபெருமான்

### வேறு

இகலியடு கதமுறுகி மனமிறுகி யெதிர்குறுகு
மவனைமுடு கியசரண பங்கயத் தோட்டின
ரிளநிலவு பொழிமதியு வரியுடல ரவுநதியும்
மிதழிகொடி யறுகொடணி செஞ்சடைக் காட்டினர்

இமையவரு முனிவரரு மெவரும்வழி வழிமொழியு
மெழுதரிய பழமறையெ னும்புகழ்ப் பாட்டின
ரிளகியிரு விழியருவி சொரியவொரு பணியுழுவை
யினிதுதொழு தகமகிழு மம்பலக் கூத்தினர்
புகல்பிறிது மிலையபய மபையமென வழுதழுது
பொருமவிட மிசைவதுசெய் தும்பரைக் காத்தவர்
புகழுமடி யவரிடர்கண் முழுதுமடு பவரநகர்
புனிதர்மழு வலரமலர் வெண்பொடிப் பூச்சினர்
புளகமெறி தரவிமலை களபவள ரிளமுலைகள்
புணருமனு பவருரக கங்கணக் காப்பினர்
புதியசத தளவனச மிசையவனு மவனையருள்
புயலுமறி வுறவரிய நம்பரைப் போற்றுதும்
அகருவொடு தகரநறை யளவளக வெயினர்குல
வரிவைமுலை யமுதொழுகு மம்புயத் தூர்த்தனை
யவனிமுழு வதுநொடியில் வருகலப மயில்கடவு
மறுமுகனை யுறுதுணையை வண்கதிர்ச் சேப்பனை
யளிகுமிறி யுழுதுமடல் வழியுமது நுகரமுகை
யவிழுமரு வமலிதரு கடம்பலர்ச் சூட்டனை
யறுவர்தன தடமொழுகு மதுரமிகு மமுதமினி
தயிலுமுரு கனையுருகு மன்பருக் காத்தனை
மகரசல நிதிகுறுக வசுரர்குல பதிமறுக
மதுகையயில் சிறிதுபணி கொண்டகைக் கேர்ப்பனை
மதுரையினி லொருபனுவ னெறிமுறையி னுறுபொருளை
மரபினுணர் மதிவலனை யம்பரக் காப்பனை
வகுளமிடை கமழமுகு ளமலரமண மிசைகுலவி
வளர்பழநி யரசையுயர் செந்திலிற் சேர்ப்பனை
வருடைகுதி கொளமணிகள் சிதறிவெயில் விடுகுடுமி
மயிலைமலை தழையவரு கந்தனைக் காக்கவே. 5

## பார்வதி

நீடுமா யிரகோடி யண்டமு மண்டத்தி
னிலவுநவ கண்ட வைப்பும்
நேமிப்பொ ருப்பும்வட கோதண்ட சிகரமு
நெட்டுததி யும்போன் றநின்
னாடுநா யகனாட லோய்ந்தபின் மீளவு
மவையெலா மங்கு ரிப்ப
வருள்பொழி கடைக்கண்வைத் தருள்புரியு மன்னைதனை

யாதிபரை யைப்பரவு வாம்
கேடுமீ னமுமடா துவாபட்டு வட்டாது
கிட்டினர்க் கமுத மூறி
கெம்பீர முற்றாறு முகமருவி மணிவெயில்
கிளர்வேலை யைப்பி ணங்கி
யோடுநா வாய்க்குமெட் டாதுபங் கம்படா
தொளிமுத்தி யாம்பெற் றிட
வுயர்மயிலை மலைவந்த வானந்த வாரியை
யுரைக்குநங் கவித ழையவே. 6

## பிரமன் - வயிரவன் - இந்திரன்

வரியளி யினங்குழுமி யேடவிழ்த் திசைபாட
வரிசைபெறு பரிசி லெனவே
வாசப் பொகுட்டுப் பொலன்கட்டி யேந்துமொரு
வனசபீ டத்தி லயனைப்
புரியுரக கங்கண பணாமணிகள் திசையெலாம்
புதுவெயி லெறித்தா லுமெய்
போர்த்தகஞ் சுகமிரு ளெறிக்கும்வயி ரவனைப்
புரந்தரனை யேற்றி நிற்பாம்
இருசிறை விரித்துக் குவித்துப் புடைத்துதர
மெக்கியிறு மாந்து செஞ்சூட்
டெழில்பெற்ற சென்னிசிறி தேகவித் திருளகல
விரவிதனை வரவ ழைக்கும்
ஒருதுவச மீதுயாத் தாடன்மயில் கூவிவரு
மும்பர்சே னாதி பதியை
யோங்குமயி லாசல முகந்தகாங் கேயனை
யுரைக்குநங் கவித ழையவே. 7

## சூரியன்

அள்ளிருட் படலங் கிழித்துவிட் டெறியுமோ
ராயிரங் கிரணம் வீசி
யாழிவட் டஞ்சூழ நேமிவட் டங்குலவு
மவனிநெடு வட்ட மெல்லாம்
வள்ளமென் கமலங்கள் பொறியவிழ்த் தளிகுலம்
வாய்மடுப் பப்ப சுந்தேன்
மடற்கடை முறுக்குடைந் தொழுகவுதை யஞ்செயும்
வானிரவி யைத்து திப்பாம்

உள்ளநெக் குருகியிரு வழியையு மடைத்துமற்
றொருவழியி னைத்தி றந்தே
வோங்கார மீதெழ வெழுப்பியா தாரங்க
ளோராறை யுங்க டந்து
தெள்ளுபுத் தமுதூறு மானந்த வாரிதி
திளைத்திதைய கமல மலரத்
தென்மயில மலைவந்த கந்தவே ளைப்பரவு
செந்தமிழ்க் கவித ழையவே. 8

## வேறு

### துர்க்கை

நயகுண விலாசச் செருக்கினால்
நலியுமல ரேவைத் துரக்குமோர்
செயவனிதை தாளைப் பழிச்சியே
தினமு முடிசூடிச் செழித்துமே
அயிலை நெடுமாவைப் பிளக்கவே
யருளிவிடு வாளைத் தருக்கியே
மயிலைமலை வாழக் களிப்பினால்
வருமுருக வேளைப் புரக்கவே. 9

### சப்த மாதர்கள்

நிலனிடந்தொரு கொம்பினிற் சேர்த்தவள்
நிலவணிந்த கருங்குழற் கோற்றொடி
நிலைபெறும்படி யண்டரைக் காப்பவள்
நிமலன்முன்பு பதம்பெயர்த் தார்த்தவள்
இலகுபங்கய விஞ்சைநற் பார்ப்பனி
இனிதருந் தமுதந்தரற் கேற்றவள்
இகல்பொருங்கணி வெண்கரிக் கோர்கிளி
யினைஞர்தஞ் சரணங்களைப் போற்றுதும்
அலகிலும்பரு மும்பர்பொற் காக்களு
மகிலவண்டமு மெண்டிசைத் தேர்களும்
அரியமுண்டக வம்புயத் தோட்டனு
மரவுவெம்புலி கண்டமெய்க் கூத்தனும்
அலையுமுந்து தடங்கடற் கூட்டமும்
வரமிகுந்த னிடந்தனிற் போற்படை
மகனெடும்பதி கண்டுயக் காட்டிய
மயிலைவந்த கடம்பனைக் காக்கவே. 10

## குபேரன் - முப்பத்துமூவர் - ஐயனார்

வேறு

கதலிக் கனியுஞ் சர்க்கரை யுஞ்செங்
கன்னற் பொழிபாலுங்
கருணையி னருள்செய் திவைபோ லச்சுவை
கனிதந் தினிதாயே
மதுரித் தழுதொழு கும்படி நம்மேல்
வடிதமிழ் பாடுகென
வரமுத வியமயி லைக்கிரி வேளை
மகிழ்ந்து புரந் தருள்வார்
குதலைக் கிளவித் திருமா தஞ்சொற்
கொடிமதி லளகையர் கோன்
கொடியணி தேரும் விமானமும் விடையுங்
கொற்றம் பெறவூரும்
அதிர்பொற் கழல்புனை தேவர்க ணால்வகை
யாம்பதி னொருமூவர்
அகிலமு மகில சராசர முங்காத்
தருள்புரி வையனுமே. 11

## 2. செங்கீரைப் பருவம்

பான்மாரி பெய்துடல் வழிந்தென்ன நீற்றொளி
பழுத்தசெம் மேனி யெம்மான்
பங்கேரு கக்கரங் கூப்பிநின் றேத்தலும்
பரிவுரைத் தன்ன வர்க்கும்
வான்மாரி பொய்ப்பினும் பொய்யாத காவேரி
மாநதி கொணர்ந்து தந்த
மலயமா தவனுக்கு மவனிவட் டத்தடரும்
வன்கலிக் கோடை தணியத்
தான்மாரி பெய்தன்ன நிதிமாரி பெய்யுமிரு
தாமரைச் செங்கை யாளி
தயவாளி சிவஞான தேசிகர்க் கும்பழஞ்
சதுர் மறைப் பொருள்வி ரித்துத்
தேன்மாரி பெய்தென்ன வுரைத்தகுரு தேசிகா
செங்கீரை யாடி யருளே
தென்மயிலை தழையவரு சேனாப தித்தலைவ
செங்கீரை யாடி யருளே. 12

வையமீ ரேழுமொரு நொடியில்வல மாகவரு
வாகைபுனை தோகை யாட
வல்லசுரர் வாகுவிட மாடவல மாடுநின்
வாரணத் துவச மாடப்
பையரா நெளியப் பதம்பெயர்க் குங்கரிப்
பருமணிக் கெண்டை யாடப்
பற்றியே றுந்தகர்த் திருகுபுரி கோட்டிற்
பசும்பொனல காட வனசக்
கையில்வே லமராட வரைவடமு மெம்படைக்
கலனுமினி தாட நுதலிற்
கட்டுமொரு பொற்சுட்டி யாடவா டக்கனக
குண்டலங் காதி லாட
செய்யவாய் மழலையமிழ் தூறன்மார் பாடநீ
செங்கீரை யாடி யருளே
தென்மயிலை தழையவரு சேனாப தித்தலைவ
செங்கீரை யாடி யருளே. 13

வைக்கத் தகாதென்று மதியாத குலவேடர்
மதகரி மருப்பு வாங்கி
வன்கா னிறுத்திமுக டிலைவேய்ந்து வள்ளிதனை
வைத்தவித ணங்க டோறும்
ஒக்கப் படிந்துவீழ் கிளிகடந் தவள்திரிந்
தோலிடு புனங்க டோறும்
உளமூச லாடவன் னவளூச லாட்டயரு
முயர்மரச் சூழ றோறும்
பக்கத்தில் வருமென்ன காண்பரென வோடிப்
பதுங்கிப் பொதும்பர் தோறும்
பாவையவள் புனல்பருகு பைஞ்சுனை யிடந்தோறும்
பல்காலு மேந டந்து
செச்சச் சிவந்தவிரு சரணார விந்தனே
செங்கீரை யாடி யருளே
தென்மயிலை தழையவரு சேனா பதித்தலைவ
செங்கீரை யாடி யருளே. 14

துங்கமால் வரைபுரையு மயிராவ தப்பகடு
துன்னுகா னஞ்செ லாமற்
சுரர்சிறைக் கூடம்பு காமல்விண் டலமெலாந்
தூளிபட் டழிவு றாமற்

கொங்கையா ருந்தருத் தறியுணா தமுதமுங்
கொள்ளைபோ காம லிந்த்ரன்
கும்பிட்டு நில்லாமல் யிந்த்ராணி மங்கலக்
குலரத்ன பணிவி டாமற்
சங்கமோ லிட்டதிர மேலிட்ட வல்லசுரர்
சமரிட்ட வெங்க ளத்துத்
தாருகா சூரனொடு கிரவுஞ்ச கிரியைநொடி
தகர்த்துவரு கென்று பதுமச்
செங்கைவேல் பணிகொண்ட வணிகொண்ட சேவகா
செங்கீரை யாடி யருளே
தென்மயிலை தழையவரு சேனாபதித் தலைவ
செங்கீரை யாடி யருளே. 15

மாநாக மெட்டின் பணாமணி மழுங்காமல்
வரைமார்பின் மணிம ழுங்க
வானமணி மாசூர வாசைதொறு மேகட்டு
மத்தமால் யானை யெட்டு
மானாது மும்மதம் பொழியுங் கவுட்குண்
டடைப்பப் புடைத்தெற் றிநீ
டம்புரா சிகளேழும் வற்றிக்கு ழம்புபட
வவுணர்குல மடமா தரார்
ஊனாடல் வேற்கண் புதைப்பக் கொடுஞ்சம
ருழந்தெதி ரெழுந்த சூர
னுள்ளமும் புலரவாய் புலரமுக மும்புலர
வுலகமுழு தும்ப ரந்து
சேனாப ராகந் திளைப்பவமர் பொருமுருக
செங்கீரை யாடி யருளே
தென்மயிலை தழையவரு சேனாபதித் தலைவ
செங்கீரை யாடி யருளே. 16

வேறு

எம்முடை வல்வினை யிருகட லுடனோ
ரெழுகட லுஞ்சுவற
யீறி லிடும்பை யெனுங்குவ டுடனெதி
ரிகல்குவ டுந்தகர
மும்மல வேருட னடல்புரி வெஞ்சூர்
முதலெவ ரும்பொருது

முரிபுரு வக்கடை சிறிது குனித்து
முனிந்தடு சங்க்ராம
நம்மினு மிவனதி கம்மென வளிகூர்
நளினப தத்துணைகள்
நமவென வினிது வணங்கி மறைப்பொருள்
நவில்கென வுபதேசத்
தைம்முக னுக்கரு ளறுமுக குருபர
னாடுக செங்கீரை
யணிதரு மயிலையில் வருமுரு கன்குக
னாடுக செங்கீரை. 17

சோதி தருங்கன கத்திரு நாடுஞ்
சுரருஞ் சுரர்பதியுந்
துளவ மணங்கமழ் புயமுழு தானுந்
துளைநா ளப்பதுமப்
போதில் வருஞ்சது ரானன னுந்திகழ்
புரிநூல் முனிவரரும்
பூதல மும்மெழு பாதல மும்படு
புன்கண் ணவைதீரப்
பாதி சிவந்தொரு பாதியு மென்னப்
பச்சென விச்சையுடன்
பவளக் கிரியைத் துவளப் பொருது
பகுந்து கலந்தருளும்
ஆதி பரம்பரை யருளிய சண்முக
னாடுக செங்கீரை
யணிதரு மயிலையில் வருமுரு கன்குக
னாடுக செங்கீரை. 18

நறுமலர் குடுமி வகிர்ந்து புனைந்து
நலந்திகழ் வித்தேமு
நானநெய் பூசி மணிச்சிறு சுட்டி
நயந்து தரித்தேமு
மிறுகிய காதலி னுன்னைய ழேலென
வினிதி னணைத்தேமு
மிலகுபொ னரைவட மைம்படை யார
மெடுத்தணி தந்தேமும்
மறுவின் மணிச்சிறு தண்டை சதங்கை
வனைந்து பணிந்தேமு

வண்பது மத்தொரு தொட்டி லசைத்திரு
வருமுலை யமுதருளு
மறுவரு மன்னைய ரனைவரு மகிழ்வர
வாடுக செங்கீரை
யணிதரு மயிலையில் வருமுரு கன்குக
னாடுக செங்கீரை. 19

## வேறு

எங்களுயி ருக்குயி ரெனும்படி சிறந்தா
யின்பா லன்பாக
வெங்குநிறை வுற்றுமெ மருங்கினி லிருந்தா
ளெந்தாய் வன்பால
வெங்கள்பொழி யத்துணர் விரிந்தலர் கடம்பா
வெஞ்சூர் பஞ்சாகி
விண்டமரி னுக்குடைய முன்சம ருடன்றே
வென்கா ணுந்தீர
தங்கள்குறை யற்றதென வும்பர்பணி யுந்தாள்
தந்தா ளுஞ்சீல
தந்திதரு பொற்றொடி யரும்பிய தனந்தோ
யசைந்தா டுந்தோள
திங்கள்முடி வைத்தவர் பயின்றதிரு மைந்தா
செங்கோ செங்கீரை
செம்பொன் மயிலைக்கிரி யுகந்துவளர் கந்தா
செங்கோ செங்கீரை. 20

ஐங்கரவ னுக்கிளைய தம்பியெனு நம்பா
வந்தார் சிந்தார
வண்டர்சர ணத்துணைப ணிந்திட வணைந்தே
யன்பார் செந்தூர
பங்கய மலர்த்தவி சயன்செயல் புரிந்தே
பண்டாளுந் தேவ
பந்தமற முத்திநெறி தந்தருள் பொழிந்தே
பண்போ தும்போத
வெங்கரி யுகைத்துவரு மிந்திர னயர்ந்தே
வெங்கோ தம்போத
விண்டல நடுக்கமுற வந்தம ருடன்றே
வென்றே நின்றாடுஞ்

சிங்கமுக னுக்குமொரு சிங்கமென வந்தாய்
செங்கோ செங்கீரை
செம்பொன் மயிலைக்கிரி யுகந்துவளர் கந்தா
செங்கோ செங்கீரை. 21

## 3. தாலப்பருவம்

அரும்புக் கருணை மாரிசொரிந்
தன்பு பூண்டோ ரனைவருக்கு
மாண வாதிப் பாசங்க
ளகற்றித் தாபத்திரை யந்தணிய
விரும்பு போலு மனங்களையு
மிளக்கி யுளக்கண் கொடுத்தருளி
யீடேற் றுதற்கே யெழுந்தருளு
மெங்கள் செல்வச் சிவஞானி
கரும்பு பொழிந்த செழும்பாலே
கனியில் வடித்த கொழுஞ்சாறே
கண்டு கேட்டுண் டுயிர்த்துற்றுக்
களிக்கு மமுதே யென்றென்று
விரும்பி னுகரும் பேரின்ப
விளைவே தாலோ தாலேலோ
வீறு மயிலை மலையின்மணி
விளக்கே தாலோ தாலேலோ. 22

வள்ளன் மௌலி மீதேறி
மலர்ந்த விதழி நறுந்தெரியல்
மாற்றா யிரம்பெற் றொளிதழைத்து
வயங்கும் பசும்பொற் சரக்காக
வள்ளி யணிந்து தும்பை யம்போ
தடுத்த வெள்ளிக் குவையாக
வருகே யசைந்து பணங்கள் விரித்
தாடு மரவந் துடுப்பாகப்
பிள்ளை மதிய மோடுமொரு
பீடார் தோணி யதுவாக
பெரிது மோட்டி வேணியந்தார்
பிணித்துக் களித்துத் திளைத்தாடி
வெள்ளை நதியில் விளையாடும்
வேலா தாலோ தாலேலோ

வீறு மயிலை மலையின்மணி
விளக்கே தாலோ தாலேலோ. 23

வழியும் புனல்பெய் யொருகலசம்
வயிறு வாய்த்த குறுமுனிக்கு
வடநூற் கடலு மமுதொழுக
வடித்த மதுரத் தமிழ்க்கடலு
முழுதும் புகட்டி யதுவன்றி
முடவெண் டிரைகள் சுருட்டியெறி
முன்னீர்ப் பரவை யொருமுறையின்
முற்றும் பருக வருளுதவி
யழிவில் பொருளாய்ப் பரஞ்சுடரா
யாதி நடுவந் தமுமன்றி
யகண்டா கார சின்மயமா
யமர்ந்த முக்கட் பெரும்பெருமான்
விழியொன் றினில்வந் தீராறு
விழிகள் படைத்தாய் தாலேலோ
வீறு மயிலை மலையின்மணி
விளக்கே தாலோ தாலேலோ. 24

வேறு

மந்தா கினிதன் மகவே மகவான்
வானத் தரசாள
வருகே சரியே பணிபூ சுரர்தம்
வாழ்வே வாழ்வுதரு
மெந்தா யகமே யெளியே முயிரே
யிமைய மடக்கொடித
னெழின்முக பங்கய மலரவு தித்த
விளங்கதி ரேகதிர் சூழ்
சிந்தா மணியே யிருகண் மணியே
தேவர்சி காமணியே
தெள்ளா ரமுதே கள்ளார் நீபத்
தெரியல் புனைந்தருளுந்
தந்தா வளமே மயிலைக் கரசே
தாலோ தாலேலோ
சமரவி பாடன குமர சடானன
தாலோ தாலேலோ. 25

ஒருசிற் பரனே தமிழ்விற் பனனே
வுலகமெ லாமுதவு
முமையவ ளுயிரே யெமையினி தாள
வுகந்தகிரு பாநிதியே
யருமைத் தனமே யொருமைக் கதியே
யவுணர் குலப்பகையே
யண்டர்க் குறவே தொண்டர்க் கிணையா
யருண்மழை மாரிபெயுங்
குருவித் தகனே யெழிலற் புதனே
குஞ்சரி மஞ்சரியுங்
கொடிய கிராதர் குலக்கொடி யும்புணர்
கோவே யாவினையும்
தருகற் பகமே மயிலைக் கரசே
தாலோ தாலேலோ
சமரவி பாடன குமர சடானன
தாலோ தாலேலோ. 26

உத்திப் பன்மணி ராசிகள் பற்பக
லுண்ட செழுங்கதிர்க
ளுமிழ்வது போலத் திசைதிசை தோறு
முதிர்ந்துக மீதுதுயி
னத்துக்கரதல னொருபா லொருபா
னாபிக் கமலத்தோ
னளினத் தவளணி மணியொரு பால்விழ
நாகா திபன்வெருவக்
கொத்திக் கடிதி னெடுத்துத றிக்களி
கொண்டணி தாடுமயிற்
குரகத மேறிப் பஃறணை யருவி
குதித்துக் குவடுதொறுந்
தத்துப் பொருமயி லைக்கிரி வருவாய்
தாலோ தாலேலோ
சமரவி பாடன குமர சடானன
தாலோ தாலேலோ. 27

உருவத் தனதட வமர மடந்தைய
ரொளிமணி நிரைவாரி
யுயர்சிக ரந்தவழ் மாலைவெள் ளருவியி
னூடு படிந்தாடச்

செருவித் தொழில்பயில் வனசர மங்கையர்
செங்கனி வாய்வெளிவரச்
சேல்பொரு விழிகள் சிவப்பச் சுரநதி
சென்று குடைந்தாடப்
பருவப் பசுமுட் புறவண் கனிதரு
பலவி னெடுஞ்சினையிற்
பைம்பொற் கரவில தைப்பட ரத்துணர்
பசிய கறிக்கொடிக
டருவிற் படரு மயிலைக் கிரியாய்
தாலோ தாலேலோ
சமரவி பாடன குமர சடானன
தாலோ தாலேலோ. 28

தூவுந் துளிமழை பொழிகரு மேகஞ்
சூழ மதக்கலுழி
சொரிகரி யாமென வானின் மடங்கல்
துடர்ந்து களப்பொதுளு
மாவும் பனசமும் வாழையு மீதுயர்
வழையுந் தழைச்சாரல்
வழியிற் குழியின் வந்து பதுங்கி
வதிர்ந்துவிண் ணிடைமேட
மேவும் பொழுதிரு கால்க ணிமிர்த்துகிர்
விட்டழல் விழிசுழல
வெம்புலி வாலை முறுக்கி யடித்தடல்
வெவ்வா யங்காந்து
தாவுங் குவடுயர் மயிலைக் கிரியாய்
தாலோ தாலேலோ
சமரவி பாடன குமர சடானன
தாலோ தாலேலோ. 29

வேறு

அழுதழுது கண்கள் பிசைந்தே
யோர்போ தோர்போதா
லனைமடியி ருந்து மகிழ்ந்தே
பால்வா யோடேதா
னெழுதரிய திங்கள் முகம்பா
ராநே ராயேபோ

ரிபமுக னணைந்து வழிந்தே
சோர்பா லாராமே
குழலிசையை வென்று செழும்பா
கோடே மாறாயே
குலவிவடி கொண்ட பசுந்தே
னேபோ லானாதே
மழலைமொழி கொஞ்சு குழந்தாய்
தாலோ தாலேலோ
மயிலமலை வந்த கடம்பா
தாலோ தாலேலோ. 30

அலகில் புகழ்கொண்டு சிறந்தாய்
வேறா யாகாமே
யகிலவுல கெங்கும் நிறைந்தாய்
நாவா லோதாமே
பலகலை தெரிந்து பகர்ந்தாய்
மீதூர் மாலாலே
பழியர் குலமங்கை புணர்ந்தா
யோர்நாண் மாறாமே
கலசமுனி யன்பை யுகந்தாய்
நீர்சூழ் பார்மேலே
கவுணியர் விளங்க மகிழ்ந்தாய்
வாளா மீளாமே
மலரயனை யஞ்ச மலைத்தாய்
தாலோ தாலேலோ
மயிலமலை வந்த கடம்பா
தாலோ தாலேலோ. 31

## 4. சப்பாணிப் பருவம்

இந்திரன் கனிவந்து வந்தனை புரிந்தன்பி
னென்னாளு மலர வென்ன
விந்தீ வரஞ்சுனைத் தந்தீ வரம்பெற்ற
விசைபெறு திருத்த ணியினு
மந்தரந் தொடுசிகர வொருபரங் குன்றினு
மலைவா யினுஞ்சி றந்த
வாவினங் குடியினு மேரகந் தன்னினு
மருவிபாய் குன்றந் தொறும்

சிந்துரந் திரிசோலை மலையினு மயிலையஞ்
செம்பொன்மால் வரைய கத்துஞ்
சிவஞான தேசிகன் சிந்தையினு மெளியனேன்
சேர்த்ததமிழ் மாலை தனிலுஞ்
சந்ததங் குடிகொண்டு பணிகொண்ட வருளாள
சப்பாணி கொட்டி யருளே
சமரபிணி முகவலவ குமரசர வணமுருக
சப்பாணி கொட்டி யருளே. 32

வானவரு மிந்திராணி முலைபாய மடல்விண்ட
மந்தார மாலை கமழு
மணிமார்பி னிந்திராதி யதிபதிக ளனைவரு
மகிழ்ந்துமலர் மாரி கொட்டக்
கானமரு மிருளோதி யரமாதர் கொங்கையிற்
கற்புரக் கலவை கொட்டக்
கலக்குமரி யாள்வலங் கொடடவமு தகுவியர்
கருங்கண்மழை மாரி கொட்ட
வூனமரும் வேல்முனை துளைத்தவழி யேயவுண
ருரமுமுர மிகுவா குவு
மொழுகுசெங் குருதிநீர் கொட்டநூ றாயிரத்
தொன்பதிம ரொடுபா ரிடத்
தானைமுழு துங்கொம்மை கொட்டமயி லச்சயில
சப்பாணி கொட்டி யருளே
சமரபிணி முகவலவ குமரசர வணமுருக
சப்பாணி கொட்டி யருளே. 33

முனிவே படைத்தமர் துடங்குவல் லசுரர்படை
முதுகுதந் தோட்டெடுப்ப
முரிதிரைக் கடல்பசுங் குருதிமா னதிபாய்ந்து
முற்றும் பெருக் கெடுப்ப
பனிவேய் நிகர்த்ததோட் பண்ணம்ப ணத்தியிகல்
பயில்குரவை யாட்டெ டுப்ப
பாகசா தனனாடல் வேல்கொடி யெடுப்பப்
பழஞ்சுருதி தலையெடுப்ப
வினிமே னமக்கோ ரிடுக்கண்ணு மில்லையென
விமையவர்கள் வாழ்த்தெடுப்ப
வெதிரேறு சூரன்முத லவுணர்மணி மௌலிபா
ரிடமெடுப் பக்க ளத்துத்

தனிவே லெடுத்தகை கொடுமயில மலையதிப
சப்பாணி கொட்டி யருளே
சமரபிணி முகவலவ குமரசர வணமுருக
சப்பாணி கொட்டி யருளே. 34

வெண்டா மரைத்தவள வெள்ளிமண் டபமேவு
மெல்லியலை நாவில் வைத்த
வேதியனை வேதமுடி வோதுகென வோதியவன்
வெண்ணரைக் குடுமி பெயரக்
கண்டார் நகைப்பப் புடைப்பதற் கொருமுறை
கவித்துக் குவித்தொ ருமுறை
காவற் றினைப்புன மருங்கெய்தி யெய்திய
கடும்பசி தணிப்ப வன்போல்
வண்டாடு கொந்தளக பந்தரிடு குறமாதின்
வாயெயிற் றூற லேய்ப்ப
வாக்குசெந் தேனோடு பசியதினை மாவிற்கு
வாயூறி யேவிரித்த
தண்டாம ரைக்கைகொடு மயிலமலை யதிபனே
சப்பாணி கொட்டி யருளே
சமரபிணி முகவலவ குமரசர வணமுருக
சப்பாணி கொட்டி யருளே. 35

நந்துபொரு களமதி னறுஞ்சாந்து பூசியு
நாட்டமஞ் சன மெழுதியு
நல்கெனச் சிவுகம்பி டித்துவச் சிரக்கச்சி
னகைமணி முடிச்ச விழ்த்தும்
பந்துபொரு மிளமுகுள தனயுகுளம் வருடியும்
பணிமுத்த வடமணிந்தும்
பாதசா லத்தினொடு கிண்கிணி திருத்தியும்
பைந்தூசு தனைநெ கிழ்த்தும்
இந்துநுத லிற்றிலக மிட்டுரத் தினச்சுட்டி
யெழில்பெறத் தூக்கி யிட்டு
மினமலர் புனைந்துவரி வண்டோச்சி யுங்காத
லெயினர்குல மாதின் புறத்
தந்துமகிழ் பன்னிருகை கொடுமயில மலையதிப
சப்பாணி கொட்டி யருளே
சமரபிணி முகவலவ குமரசர வணமுருக
சப்பாணி கொட்டி யருளே. 36

## வேறு

தண்டமிழ் விரகன் பரனொடு வாதுசெய்
சங்கத் தமிழ்நிபுணன்
சகல கலாதர னிறைவ னுரைக்குரை
தந்தருள் நக்கீரன்
கொண்ட லெனச்சந் தத்தமிழ் மாரிபெய்
கொற்றவ னருண கிரிக்
கோமா னெண்டிசை யளவுநெ டும்புகழ்
கொண்ட வருட் செந்தேன்
அண்டர்தெள் ளமுதொடு முக்கனி யூற
லளவிவ டித்தென்ன
வணிபெறு கவிதர மாலிகை நீபத்
தலர்மா லிகையினுடன்
கொண்டணி பன்னிரு பொற்புய பூதர
கொட்டுக சப்பாணி
குக்குட கேதன மயில நிகேதன
கொட்டுக சப்பாணி. 37

தஞ்சென வடிதொழு மடியர் கிருபாகர
தற்பத கேமவருட்
சத்திய குணோதய நித்திய நிராமய
சகலக லாநிபுண
வஞ்சினு மாறினு மெட்டினு மூன்றினு
மைம்பத் தொன்றினுமே
வறியு நிரந்தர புனித புரந்தர
வதுல துரந்தரிக
மஞ்சென மாரி பொழிந்து திவாகரன்
வடிவா யொளிவீசும்
வானவர் தேனமர் பொற்பமர் கற்பக
மஞ்சரி சூடுமொரு
குஞ்சரி வல்லப வல்லி மனோகர
கொட்டுக சப்பாணி
குக்குட கேதன மயில நிகேதன
கொட்டுக சப்பாணி. 38

அமரவ னாமய வசுரம னோபய
வகிலத யாசீல

வபயவ ரோதய வசுரநி ராகுல
வனகநி ராதார
சமரசி காவல வதுலம காபெல
சதுரநி ராகார
தருணச டாதர தனையவு மாசுத
சதமக னாதார
பமரவி யாகுல சனனநி திரோதக
பரோ திரோதான
பரமகு ணாலய வருள்புரி லீலைய
பரகதி தானான
குமரகிரு பாகர திமிரதி வாகர
கொட்டுக சப்பாணி
குக்குட கோதன மயில நிகேதன
கொட்டுக சப்பாணி. 39

## வேறு

மணமல ரைங்கணை யொருமத னன்புடை
மைத்துனன் முத்தேவ
வரமென வன்றளை யயன்விட வன்றருள்
வைத்திட நற்சீல
நிணமலி வெம்படை யவுணர் பயங்கர
நெட்டயி னெட்டூர
நிலவுல கெங்கணு நொடியில் வலங்கொளு
நிர்த்த மயிற்பாக
விணரவிர் சிந்துர விரைகம ழுந்தொடை
யிற்பொலி பொற்றோள
வெயினர் தருங்குல மடவரல் சந்தத
மிச்சைகொள் பொற்பாள
குணதர சங்கர குருபர ரஞ்சித
கொட்டுக சப்பாணி
குமர நிரந்தர மயில பயங்கர
கொட்டுக சப்பாணி. 40

அருணை நிறம்பெறு முருக சவுந்தர
வத்தகை மெய்ப்போத
வருணை பரங்கிரி பழநி யுகந்தரு
ளற்புத வித்தார

கருணை வழிந்தொழு கறுமுக பங்கய
கற்பக நற்றாம
கவுரித னம்பொழி யமுதம ருந்திய
கட்டழ குப்பால
பரவிய வும்பர்கள் பகைகெட மண்டமர்
பற்றிய மற்போர
பழைய தொழும்பின னிவனென வந்தருள்
பதுமப தத்தேவ
குரவம ணங்கமழ் வரைபொரு திண்புய
கொட்டுக சப்பாணி
குமர நிரந்தர மயில பயங்கர
கொட்டுக சப்பாணி. 41

## 5. முத்தப்பருவம்

ஊனாறு கப்புவா யிப்பிமுத் துப்புறு
மும்பறரு முத்தம் யாளி
யுகிரினா லூறுபடும் வேய்முத்த மெரிகதுவு
முரகன்வாய் முத்த மாலந்
தானாறு மதிமுத்த மறுவுண் டிருக்குஞ்
சலஞ்சலந் தருமுத்தமுந்
தாளதா மரைமுத்த மும்பங்க மெய்துமவை
தாமெவையும் யாம்வி ரும்பேந்
தேனாறு சந்தனப் பூனாறு சோலைசூழ்
தென்மயிலை தழைய வந்து
சிவஞான தேசிகற் கோதுமொரு மொழியுடன்
செல்வியுமை யவள்தி ருமுலை
பானாறு செங்குமுத வமுதச் செழுங்கனிப்
பவளவாய் முத்த மருளே
பருதிவெயில் விடுபசுங் குருதிவடி வேலவா
பவளவாய் முத்த மருளே. 42

கச்சுலா மிணைமுலை சுரந்தபா லமுதூட்டு
கார்த்திகை தனக்கொ ருக்காற்
கமலப் பணித்தொட்டி லிட்டழே லெனதோட்டு
கங்கைநங் கைக்கொ ருக்கா
லிச்சையா லிளவெநீர் வார்த்துதன் னுத்தரிய
மொத்தியீ ரம்பு லர்த்தி

யிருநிலக் காப்பணிந் துச்சிக்கு நெய்பூசி
யெரிமணிச் சுட்டி கட்டிச்
செச்சைமா லிகைபுனைந் தாகத்தணைத் தெங்கள்
செல்வமே யிருகண் மணியே
தெள்ளமுத மேயெனச் சீராட்டு பனிவரைச்
செல்வவன் னைக்கொருக்காற்
பச்சைமேற் காரங்கு லாவுமயி லைச்சயில
பவளவாய் முத்தமருளே
பருதிவெயில் விடுபசுங் குருதிவடி வேலவா
பவளவாய் முத்தமருளே. 43

ஆலிக்கு மன்பினால் வள்ளிதன தடமேந்தி
யசையுமிடை யொருக ணோக்க
வவளடியில் வன்பர லுருத்தாம லிருகண்க
டான்பார்த்து முன்ன டப்ப
வேலிக்கு மதயானை வெண்கோடு நட்டதினை
விளைகொல்லை யொருக ணோக்க
வேளையொரு கண்பார்க்க வொருகண்வே டரைநோக்க
விழிமொழிவ திருகண் வினவக்
கோலிக்கு மதுரமூ ரதரந் துடிப்பது
குறிப்பவோ ரிருகண் வாரக்
கும்பப் படாமுலைப் புளகநோக் கக்கலை
குலைந்ததொரு விழிபார்த் துமா
பாலிக்கு மகமகிழு முருகமயி லச்சயில
பவளவாய் முத்த மருளே
பருதிவெயில் விடுபசுங் குருதிவடி வேலவா
பவளவாய் முத்த மருளே. 44

கோடல்கமழ் சாரற் கொடிச்சியர் சிலம்பினெதிர்
கூவுகுர லொருசெ வியினா
குன்றுதவ ழருவியொலி யொருசெவியி னாற்களிறு
குளிறுகுர லொருசெ வியினா
லாடல்மயில் கதுவுமிசை யொருசெவியி னாலுழுவை
யார்ப்பரவ மொருசெ வியினா
லடல்வேட ரிரலையார்ப் பொருசெவியி னாற்கவ
ணதிர்ப்புமற் றொருசெ வியினா
லோடலென யோதுமுறை யொருசெவியினால்வீணை
யொருசெவியி னார்ப்பு னந்தோ

றோலமென வொருசெவியி னால்முருகி யத்தமா
மொருசெவியி னால்வள் ளிதன்
பாடலொரு செவியினா லேற்குமயி லச்சயில
பவளவாய் முத்த மருளே
பருதிவெயில் விடுபசுங் குருதிவடி வேலவா
பவளவாய் முத்த மருளே. 45

வேறு

வழியும் பசுந்தேன் பெய்ததினை
மாவிற் கேக்கத் தொருகுறத்தி
வளைக்கை யதனில் வாங்காமல்
மலையான் முலையா டரச்சுரந்தே
பொழியு மிரதமது தருவோம்
புதுப்பூங் காந்தள் புனையாமற்
பொன்பூத் தலர்ந்த கற்பகப்பூம்
போது புனைவோ மிவையல்லாற்
குழியும் வழியுந் திரிந்துகவி
கூறிக் கவிதை கொள்ளாமற்
கோடா துனக்கே தொழும்புபுரி
கோமான் வயித்திய னாதனன்பால்
மொழியுந் தமிழு முனக்கணிவோ
முதல்வா முத்தந் தருகவே
முகுந்தன் மருகா மயிலமலை
முருகா முத்தந் தருகவே. 46

சுற்றுங் கடலுங் குலகிரியுஞ்
சூழு நேமிப் பெருவரையுஞ்
சுடரா தபனும் நிசாசரனுஞ்
சொல்லும் வேதத் தொகுதிகளும்
பற்றுஞ் சமய நெறியாறும்
பார்நீர் முதலா மைம்பூதப்
பரப்பு மடையுங் கதிநான்கும்
பாசத் திரையமு மெழுத்தைந்தும்
மற்று மாறா தாரமுடன்
வழிக ளாறுந் தத்துவத்தின்
வகையா றாறு மான்மாவும்
வகுத்த கால மொருமூன்றும்

முற்றுங் கலந்துங் கலவாத
முதல்வா முத்தந் தருகவே
முகுந்தன் மருகா மயிலமலை
முருகா முத்தந் தருகவே. 47

பழுத்த நேச வடியர்செழும்
பாலே மதுரப் பசுந்தேனே
பாகே யோகை தருமமுதே
பலவின் வடித்த கொழுங்கனியே
வழுத்த வரிய பேரொளியே
வாழ்வே தூண்டா மணிவிளக்கே
மாறாக் கருணை பெருக்காறே
மனமுங் கடந்த சுகோதயமே
யழுத்த முடைய குணக்குன்றே
யருவே யுருவே யருவுருவே
யகண்டா கார சின்மயமே
யழியா வின்ப மகோததியே
முழுத்த சோதி யிளங்கதிரின்
முனையே முத்தந் தருகவே
முகுந்தன் மருகா மயிலமலை
முருகா முத்தந் தருகவே. 48

வேறு

கனியை யமுதுட னளவி யேனவர்
கவிதை சொலவருள் வைத்தவா
ககன தலைநிலை புகுத வொருவழி
கடவு ணுதல்விழி பெற்றவா
வினிய தமிழொடு சகல கலைகளு
மெளிதி னுதவிய வித்தகா
வெனது மனமதின் மருவி யனுதின
மினிதி னுறைதரு மற்புதா
பனிவெண் மதிரவி யவனி புனலனல்
பவனம் வெளியுயிர் மெய்ப்பரா
பழைய மதுரையின் மணியின் விலைதெரி
பவர்கள் குலபதி வர்த்தகா
வனிதை பரைசிவை மதலை யெனவரு
மைந்த பணிமணி முத்தமே

மயில மலைவரு முருக வரிதிரு
மருக பணிமணி முத்தமே. 49

தகுவர் வயிறெரி தவழ வடல்புரி
சமர வயில்விடு கொற்றவா
சனகன் முதலிய முனிவர் தவநிலை
தழைய விழைவுசெய் மெய்த்தவா
புகலி நகரியின் மதுர கவிபொழி
புகரில் கவுணிய விற்பனா
புலவு கமழ்கணை யெயினர் குலமகள்
புளக முலைபுணர் உத்தமா
திகுதி திகுதிதி திகுதி செககண
செகண வெனுமயி னிர்த்தகா
திமிர தினகர நிகர திரிபுர
தகனர் புனைபுனி தச்சடா
மகுட மணியென னிலவு பதயுக
வனக பணிமணி முத்தமே
மயில மலைவரு முருக வரிதிரு
மருக பணிமணி முத்தமே. 50

## 6. வாரானைப்பருவம்

பாடற் சுரும்பு குடைந்தாடும்
பதுமத் தவிசி னான்முகனைப்
பண்டைச் சுருதிப் பொருள் வினவிப்
பகரா னாக நரைக்குடுமி
சூடத் துடனே தகரமுடி
துளங்கப் புடைத்துச் சிறைப்புகுத்தித்
தொல்லைத் தேவ ரொருமூவர்
தொழுது வேண்ட விடுத்தருளி
நாடற் கரிய மறைமுதலை
நம்பன் கேட்ப வுரைத்தபடி
ஞாலம் புகுந்து சிறந்தசிவ
ஞானி யுணர முறைவிரித்து
மூடச் சமயம் பிணக்கமற
மொழிந்தாய் வருக வருகவே
முழுது மயிலா சலமுகந்த
முருகா வருக வருகவே. 51

சகமுஞ் சகமுன் றிவையுள்ள
சராச ரங்க ளெத்துணையுந்
தழைத்தே யரும்ப வருள்பூத்து
தாவா தேயங் கனிந்தினிதி
னிகழும் பரமு மவையெய்த
வென்று நீங்கா வுறுதுணையா
யிதைய கமலந் தனிலும்விழி
யிருதா மரைப்போ தினுமகலா
தகமும் புறமு மாகிநிறை
யன்னை முகத்தி னொடுதாதை
யைந்து முகமு மலரவுன
தருளூற் றிருந்த வாறுதிரு
முகமு மலர வெமதுகுல
முதலே வருக வருகவே
முழுது மயிலா சலமுகந்த
முருகா வருக வருகவே. 52

வேரிப் புதுப்பூ மலர்மாரி
விண்ணோர் சொரிய வல்லசுரர்
விழிநீர் பொழிய வழிமொழிந்து
விரிஞ்சன் முதலோ ரடிவணங்க
வாரித் தலமும் பாதலமும்
வானத் தலமு மனங்குளிர
மந்தா கினிவாழ்த் தெடுப்பவர
மகளிர் பல்லாண் டினிதிசைப்ப
சோரிச் சுடர்வேல் வெயில்விடச்செஞ்
சூட்டுச் சேவற் கொடியாடத்
தூண்டா விளக்கும் விளக்கடியிற்
றோன்றும் நீலப் பிழம்புமென
வூரிக் கலாப மயிற்கடவு
முதல்வா வருக வருகவே
முழுது மயிலா சலமுகுந்த
முருகா வருக வருகவே. 53

இளைத்த மருங்கு லுமைமடந்தை
யிருகைத் தலச்செம் பதுமத்து
மெறிநீர்க் கங்கா நதியகத்து
மெழுந்த செழும்பூஞ் சரவணத்தும்

வளைத்த மேருச் சிலையாளி
    வயங்கும் பால லோசனத்தும்
  மதுரம் பொழியு மருணகிரி
    வாக்கி னிடத்து மவனினிதிற்
றிளைத்த வனுபூ தியினுமறைச்
    சிரத்து மழியாச் சிதாநந்தச்
  செந்தேன் பரவைக் கடலகத்துஞ்
    சிறியேன் சிந்தைச் சிலாதலத்து
முளைத்த பவள விளங்கிளையின்
    முளையே வருக வருகவே
  முழுது மயிலா சலமுகந்த
    முருகா வருக வருகவே. 54

சுற்றும் பரவை யுலகமொரு
    துகளி னேந்தி யெறிந்தாடுந்
  துளப நறுந்தார்ச் சூகரம்போர்
    தோலையாப் பொருது பறித்திட்டுக்
கொற்றம் பறவை கொடுவந்து
    கொழுத்த மார்பின் வெண்கோடுங்
  கோமான் குடிலச் சடிலமுடிக்
    குழவி மதியப் பனிக்கோடுந்
தெற்று முரக மிறையெனவாய்
    திறப்பச் சேர்த்து மதுவகலத்
  திரும்பப் பிரித்து மிவ்வணஞ்
    செங்கைப் பதுமத் தலங்கொட்டி
முற்றும் விளையாட் டயருமிள
    முகையே வருக வருகவே
  முழுது மயிலா சலமுகந்த
    முருகா வருக வருகவே. 55

மறுவி லொருவாண் முகங்கதிர்கள்
    வழங்கி ஞாலத் திருள்மாற்ற
  வணங்கி யேற்று மார்வலர்க்கு
    வரங்க ளொருவாண் முகங்கொடுப்ப
வுறுதி புரியந் தணர்வேள்வி
    யோர்ப்ப யொருவாண் முகமதிபோ
  லொழிந்த பொருளே முறநாடி
    யொருவாண் முகமெண் டிசைவிளக்கச்

செறுனர் மடிய முறுக்கியொரு
திகழ்வாண் முகஞ்செங் களம்வேட்பச்
சிறுநுண் மருங்குற் குரவல்குற்
செல்வி யொடுவாண் முகமொன்று
முறுவ லரும்ப விரும்புமறு
முகவா வருக வருகவே
முழுது மயிலா சலமுகந்த
முருகா வருக வருகவே. 56

நகைத்தார் முடிவா னவர்க்கொருகை
நல்கி யேந்த வொருகையுக்கம்
நயந்து தழுவ வொருகைதுகி
னலஞ்சேர் குறங்கின் மிசையசையப்
பகைத்தார் முனையங் குசமொருகை
பரித்துக் கடவ விருகரந்தோற்
பரத்தோ டெஃகு வலந்திரிப்ப
பாணி யொன்று மார்பிலங்க
வகைத்தா ரொடுகை யொன்றிசைய
வான்மேற் றுடியோ டொருகைகொட்ட
மணியொன் றிரட்ட வொருகைமழை
வழங்க வொருகுஞ் சரிக்குமண
முகைத்தா ரொருகை சூட்டமகிழ்
மொய்ம்பா வருக வருகவே
முழுது மயிலா சலமுகந்த
முருகா வருக வருகவே. 57

களரி புகுந்த வவுணர்குலங்
களைந்தாய் வருக வருகவே
கானக் குறத்தி மணம்புணர்ந்த
கடம்பா வருக வருகவே
விளரி வரிவண் டுழுந்தாம
வேலா வருக வருகவே
விண்ணா டாள வமரர்சிறை
மீட்டாய் வருக வருகவே
தளிரி லெதிர்நின் றெமைப்புரக்குந்
தலைவா வருக வருகவே
சந்தத் தமிழ்பா டுதற்குவரந்
தந்தாய் வருக வருகவே

முளரி யனைய வாறுதிரு
முகவா வருக வருகவே
முழுது மயிலா சலமுகந்த
முருகா வருக வருகவே. 58

வேறு

விதுவு முரகமு நதியு மிடைசடை
விடைய னொருமகன் வருகவே
வினையின் வலிகெட வருள்பன்னிருவிழி
விரக னிருபமன் வருகவே
குதலை யமுதுகு மதலை கலைதெரி
குரிசி லதிசயன் வருகவே
குழல னடல்புரி தகர னெழில்பெறு
குமர குருபரன் வருகவே
பதும மலர்மிசை யவனை யிடுசிறை
பணிய விடுபவன் வருகவே
பழியர் குலமட வனிதை தனகிரி
படியு மழகினன் வருகவே
மதுகை யயில்கொடு புழுதி படவொரு
வரையை யெறிபவன் வருகவே
மயிலை நெடுமலை யதிப னரிதிரு
மருக னறுமுகன் வருகவே. 59

அதிரு மலைகடல் கதற வொருமுறை
யயிலை விடுபவன் வருகவே
யமரர் சிறைவிட வசுரர் குறைபட
வமரி னடுபவன் வருகவே
முதிரு மொருகிழ வுருவ னொருமழ
முருக னெனுமவன் வருகவே
முழுதும் வழிவழி யெமையு மடிமைகொண்
முதல்வ வுமைமகன் வருகவே
யெதிரும் யமபடர் மறிய மயின்மிசை
யிசைய வருபவன் வருகவே
யினிய கடலையெள் ளயிலு மிபமுக
னிளைய வடல்புரி வருகவே
மதுர கவிபுனை தருபன் னிருபுயன்
வனச பதயுகன் வருகவே

மயிலை நெடுமலை யதிப னரிதிரு
மருக னறுமுகன் வருகவே. 60

## 7. அம்புலிப்பருவம்

ஒருபரம் பரனுக்கு மொழியொன் றுரைத்ததனை
யொருநால்வ ருக்கு ரைத்து
வுற்றதொரு வடநிழலு கந்துறைதி நீயென்ன
யோதியோ தப்ப ரவைநீர்
பருகுகும் போதய முனிக்குமுத் தமிழையும்
பாலித்து மலையத் துநீ
பன்னிருவ ருக்கிசைத் தமருகென வேபணி
பணித்துப் பணிப்பா ரெலாந்
தெருளுமால் பாலரிய அட்டமா சித்தியுஞ்
சின்மயா நந்த நிலையுந்
தேருமெண் ணெண்கலையு நண்ணுவண் ணந்தந்து
சிவஞான தேசி கேந்திரற்
கருள்சுரந் துதவியவ னுனைவரவ ழைத்தன
னம்புலீ யாட வாவே
யணிபெற்ற மயிலைவரு முருகசர வணபவனோ
டம்புலீ யாட வாவே. 61

மீதுலா மமரருக் கமுதநீ யுதவுவாய்
வெய்யவே லேந்தி யிவனு
மேலிட்டு வல்லசுரர் கொள்ளைகொண் டுண்ணாமல்
வென்றிகொண் டமுதளிப்பா
னீதிலா னீயுங் கலாதர னெமக்கினிய
விவனுங் கலாத ரன்காண்
எம்பிரான் மகுடமணி நீயிவனு மவனுக்
கிரத்னதூ டப்பி ரபைகாண்
காதலா னீயுமலர் காவிக் குகந்தவன்
கங்கைநங் கைக்கு மிமைய
கன்னிக்கு மகவா னிவனுந் திருத்தணிக்
காவிக் குகந்த வன்கா
ணாதலா லிவனுக்கு நிகரானவை நீயிவனோ
டம்புலீ யாட வாவே
யணிபெற்ற மயிலைவரு முருகசர வணபவனோ
டம்புலீ யாட வாவே. 62

ஓகையா லிங்குவந் தனையாகி னுன்னுடைய
வொழியாத விரவொ ழிப்ப
னூதுலைப் பொங்குகன லென்னநெடு மூச்செறிந்
துரகனெயி றூன்ற வருநா
டோகையா லதுவுந் துரப்பனுன் னுடலுற்ற
துகளையுந் துகள்ப டுப்பன்
சூல்கொண்ட தேனிறா லெனவிவன் மலைக்குறவர்
தொடராம லுந்த டுப்பன்
வாகையால் வரைமத்து நட்டுநடு தறியாக
வையாம லுய்யும் வண்ண
மதுகைமா துலனுக் குரைத்தற்கும் வல்லவன்
மற்றவர மும்பெற லுமா
மாகையால் வருவதே கருமம்வடி வேலனுட
னம்புலீ யாட வாவே
யணிபெற்ற மயிலைவரு முருகசர வணபவனோ
டம்புலீ யாட வாவே. 63

நானாலு கலைதனக் கதிபநீ யிவனுற்ற
நானாக லைக்கு மதிபன்
நளினங்கள் குவியநீ வருவையிவ னமரர்முக
நளினங்கள் மலர வருவா
னூனாலு முடலத்து மறுவுண் டுனக்கெம
துயிர்க்குமுயி ராகு மிவனுக்
கொருமறுவு மின்றாகு மன்றியுங் கூரெயிற்
றுரகமுனை வந்து தொடருந்
தேனாலு நீபச் செழுந்தெரிய லானிவன்
சிகிவாக னங்கா ணலுந்
திசைதிசை முறிந்தோடு மாகையா னீயெங்கள்
செல்வனுக் கிணையல் லகா
ணானாலும் வருகவென வுனையழைத் தனனிவனோ
டம்புலீ யாட வாவே
யணிபெற்ற மயிலைவரு முருகசர வணபவனோ
டம்புலீ யாட வாவே. 64

செய்யநிற முடையசூட் டரிகுரற்கா லாயுதச்
சேவலங் கொடிவி சும்பிற்
சிந்துவெண் பொரியெனத் தாரா கணங்களைச்
சிதறக் கொறிக்கு மன்னா

ணொய்யமதி யாமுனையு நூக்கியது நுகர்தற்கு
நோக்கினு நோக்கு மன்றி
நொடியினுன தொளிகெடப் பருதியைக் கூவுகென
நுவலுவது மருமை யன்றால்
வெய்யகத ழொரிகதுவ நீயுற் பவித்திட்ட
வேலைவட் டப்பு ணரிமேல்
வெங்கால தண்டமு நடுங்கிமுன் புகலஞ்சும்
வேல்விடுப் பினும்வி டுக்கு
மையனிவன் வெகுளுமுன் வருவதே காரியம்
அம்புலீ யாட வாவே
அணிபெற்ற மயிலைவரு முருகசர வணபவனோ
டம்புலீ யாட வாவே. 65

இந்திர னல்லைநீ நாபியம் போதினி
லிருந்துலக மீரே ழையு
மீன்றநான் முகனல்லை யன்னவனை யுதவியுனை
யெறிகடல் கடைந்த ஞான்று
மந்த்ரகிரி மத்தென நிறுத்திடுந் தறியாக
வாசுகி பிணித்தி ழுத்த
மாலவனு மலையிவனை யொருமொழி வினாவிய
மகதேவ னல்லை நீயோர்
சந்திர னுன்னையிச் சங்க்ராம வேலவன்
றண்டிப்ப தருமை யன்றால்
சந்ததமு மங்களா காரமா கியநந்
தமக்குவழி பட்டொ ழுகுவா
னந்தரத் திரிவனோ வெனவரவ ழைத்தன
னம்புலீ யாட வாவே
யணிபெற்ற மயிலைவரு முருகசர வணபவனோ
டம்புலீ யாட வாவே. 66

முன்னவன் கடலைபொரி யவல்முதிரை
யெள்ளுண்டை
முக்கனிக் குவை சர்க்கரை
முக்கிய மகோதரன் பூதரம் பொருவேழ
முகவன்விக் கினமெ வைக்கு
மன்னவ னுன்னைவெஞ் சாபமிட் டதுதன்னை
மாற்றுதற் கின்ன முந்தான்

மாட்டாது புவியெலாங் கண்புதைப் பக்ககன
வட்டத் தலைந்து திரிவா
யின்னவன் பின்னவ னென்பதுந் தெரிவைநீ
யிருமூன்று வதன மெய்து
மெங்கள்குல மதலைக்கு நின்மீது கோபம்வரி
னெவரே தடுக்க வல்லா
ரன்னவவை செய்வதிவ னுக்கருமை யன்றுகா
ணம்புலீ யாட வாவே
யணிபெற்ற மயிலைவரு முருகசர வணபவனோ
டம்புலீ யாட வாவே. 67

கொண்டதொரு மறுவின்றி நிறைவின்றி னாளுமே
குறைவின்றி வாள ராவின்
கூரெயி றுகுக்கும்வெங் காளகூ டத்தினாற்
குலைகுலைந் துலைவ தன்றி
மண்டலமும் விண்டலமு மிரவொழிய தொழியாத
மலதிமிர படலத் தொடும்
வல்லிருளை யுந்துரந் தடுவதொரு மதிபிறிது
வரவழைப் பினும ழைப்பன்
புண்டரிக னைச்சிறையி லிட்டுநெட் டுததியும்
பூச்சக்ர வாள கிரியும்
புரதகன ருத்ரகோ தண்டவே தண்டமும்
புதிதினவ கண்ட வைப்பும்
அண்டமு மகண்டமுந் தரவும்வல் லவனிவனோ
டம்புலீ யாட வாவே
யணிபெற்ற மயிலைவரு முருகசர வணபவனோ
டம்புலீ யாட வாவே. 68

வேறு

கலையெ லாமுணர் நிபுண னற்றமிழ்
கருணை தந்தருள் குமரவேள்
கமல யோனிதன் முடிபு டைத்திடு
காத லன்குக னிகரிலா
னிலவ வாயிதழ் ஒருகு றத்தித
னிருத னங்களின் முழுகுவோ
னிரவி யாயிர முடியு தித்தென
வெழில்பெ றுந்திரு வுருவினா

னுலைவி லாதெழு புவிய ளித்தரு
ளுமைப ரம்பரை யருளுேவா
னுததிபோ லிரு கௌளின் மைக்கட
மொழுகு மைங்கர னிளவலான்
மலைக ணாயகன் வரவ ழைத்தனன்
வருக வம்புலி வருகவே
மயிலை வேலவன் வரவ ழைத்தனன்
வருக வம்புலி வருகவே. 69

தடம கோததி கதற மத்தெறி
தருக ரும்புயல் மருகனேழ்
சலதி யோடெழு தகுவ மைக்கட
றடிய வந்தருண் முருகவே
ளிடப கேதன னுதவு புத்திர
னெளிய னன்பையு மகிழுவோ
னிசைவ லார்துதி புனையும் வித்தக
னெதிரில் வென்றிகொ ளடலினான்
கடக மாமணி வெயிலெ றித்திடு
கனக வண்புய னுலகுசூழ்
கலப மாமயின் மிசையு தித்திடு
கதிரவன் பொரு திரைகுலாம்
வடப கீரதி மகன ழைத்தனன்
வருக வம்புலி வருகவே
மயிலை வேலவன் வரவ ழைத்தனன்
வருக வம்புலி வருகவே. 70

## 7. சிறுபறைப் பருவம்

உந்தா யிரங்கிரண கோடானு கோடிரவி
யுதையஞ்செய் தாலு மகலா
துற்றவா ணவதிமிர படலமுழு வதுமுடைய
வுடைதிரை திரைத்து மோதிப்
பிந்தாது கரைபொருஞ் சலராசி யுஞ்சிறுகு
பெற்றியிற் பெருகு சனனப்
பிழைவற்ற முற்றவிங் குனதுகரு ணாப்ரவாகம்
பெருக்காய் நிறைப்ப வான
மந்தா கினிக்குடில மகுட கோமளன்
வணங்கவுணர் வித்த வாய்மை

மவுனமொழி யாலுரைத் தெங்கள்சிவ ஞானிதன்
மணிமௌலி மீது வைத்த
செந்தா மரைக்கைத் தலஞ்சிவப் பூரநீ
சிறுபறை முழக்கி யருளே
செம்பொன்மயி லைக்கிரியு கந்தவடி வேலவா
சிறுபறை முழக்கி யருளே. 71

கொங்கவிழ் பசுந்துணர் விரிந்தகற் பகநிழற்
கோமகன் விழைவி னணியுங்
குருமணி யிழைத்தமுடி யோவிந்த்ர நீலக்
குவட்டுவளர் பவள மலையோ
பைங்கயல் குதித்துகளு மீரநெட் டோடையிற்
பாசடையி னிடைம லர்ந்த
பங்கயப் போதோ தடங்கண்வளர் மாயவன்
பாரவரை மார்பின் மணியோ
சங்கெறி தரங்கக் கருங்கடன் முகட்டெழுந்
தருண வருணப் பிரபைகூர்
தருபருதி யோவெனப் பொருதுவிரு திட்டசுரர்
சமரிட்டு முதுகிட் டபோர்
செங்கள முழக்கியதிர் மயிலேறு சேவகா
சிறுபறை முழக்கி யருளே
செம்பொன்மயி லைக்கிரியு கந்தவடி வேலவா
சிறுபறை முழக்கி யருளே. 72

மந்தார நந்தா வனத்திற்கு மததாரை
மயிறூக்கி யிட்ட தென்ன
வழியுமால் யானைக்கு மழிவுவந் தெய்தாமன்
மைந்தனுந் துஞ்சு றாமற்
சந்தாடு மணிமார்பி லொருவான காதல்
தரவைத்த திரும டந்தை
தரியலா ரில்லம்பு காமலொரு நான்முகத்
தனையண்மண வாட்டி கொட்டி
நந்தாமல் வானுலகு பாழ்பட்டு விளியாமல்
நலிவுபட் டஞ்சி யிந்த்ரன்
நடுநடுங் காமலுயிர் தந்தருளி யிந்த்ராணி
நயனார விந்தங் கணீர்
சிந்தாமன் மங்கிலியந் தந்துரட் சித்தவா
சிறுபறை முழக்கி யருளே

செம்பொன்மயி லைக்கிரியு கந்தவடி வேலவா
சிறுபறை முழக்கி யருளே. 73

பூவலங் குடுமிசூழ் காந்தளங் கண்ணியின்
புடைகுலவி யளியி னங்கள்
பொன்மார்ப மீதணி கடப்பமா லிகையுழுவைப்
பொறவண்டி னுடன்மு ழங்க
நாவலம் பொன்னினிற் புனைந்தகிண் கிணிநாக
நகைமணி குயின்ற தண்டை
ஞாலம்விற் குஞ்சிறு சிலம்புபொற் கழலினொடு
நளினபத யுகமு ழங்க
தூவலம் பனையவரி விழியரா மடந்தைமார்
தூயவாழ்த் தொலிமு ழங்கச்
சுருதிகொடு பரவமரர் துதிமுழங் கப்பசுந்
தோகைமே காரத் துடன்
சேவலங் கொடிமுழங் கச்செங்கை கொண்டுநீ
சிறுபறை முழக்கி யருளே
செம்பொன்மயி லைக்கிரியு கந்தவடி வேலவா
சிறுபறை முழக்கி யருளே. 74

பொங்கிவழி யினியபாற் கடல்வயிறு சூற்கொண்டு
பொழிகுடம் புரைசெ ருத்தற்
புரிமருப் பெருமைபாய் தலும்வெருக் கொண்டுபூம்
பொய்கையி னெழுந்து பூகத்
தங்கணுறு செம்பழுக் காயுதிர வாலினா
லடித்துமாங் கனிக ளிடறி
யளியும்ப லாப்பழங் கீண்டுதா ழைக்குலை
யலைத்துவரி வாளை பாய
பங்கய முறுக்குடையு மடவிதட விப்புதிய
பானலங் காடு ழக்கப்
பழனச் செழுஞ்சாலி வேலியங் கன்னலொடு
பகலிலை யரம்பை சாய்த்துச்
செங்கயல் குதித்தெழு முழங்குபா லிக்கிறைவ
சிறுபறை முழக்கி யருளே
செம்பொன்மயி லைக்கிரியு கந்தவடி வேலவா
சிறுபறை முழக்கி யருளே. 75

மிசைதரு சுவைக்கரும் பாலையா டரவமும்
வேலைபாய் மகர மேய்ப்ப
வேரிபா யோடையின் மேதிபாய் தமரமும்
வெள்ளைவாய் மள்ள மகளீ
ரிசைதர நடுங்குரவை யிடுதுழனி யுங்கழனி
யெதிருறப் புனலோ தையு
மீடுசார் போர்பல வழித்துவை நீக்கிநெல்
லேற்றுபண் டிகளி னொலியு
மசைநுகி நுசிப்பன்மங் கையரையா டவர்கண்மன
மயருமணி முழவி னார்ப்பு
மந்தணர்கள் வேள்வியம லையும்விழாக் கம்பலையு
மண்டகோ ளமும ளாவி
திசைதிசை முழக்கமிகு தொண்டீர நாடாள
சிறுபறை முழக்கி யருளே
செம்பொன்மயி லைக்கிரியு கந்தவடி வேலவா
சிறுபறை முழக்கி யருளே. 76

வானையுந் தொடனிவந் தண்டகோ ளகையளவு
வஞ்சக்கிர வுஞ்ச கிரியின்
மாயாத மாயனுன் பெருமுழக் கமுமும்
மதம்பாயு மவுண நீல
வானையின் முழக்கமுந் திசைநாக மெட்டுமெட்
டட்டநா கமமு மெட்டு
மதிர்முழக் கந்தணிய வெம்முழக் கஞ்செயு
மகாகே சரிமு ழக்குந்
தானையுங் கடல்குளிர நாண்சங்க மார்ப்பச்
சமர்க்கள மெதிர்ந்த வெய்ய
தறுகட் கொடுங்கொலைச் சூர்முழக் கமுநீடு
தானவ குலத்து வந்த
சேனையின் முழக்கமு மடங்கநீ செங்கைகொடு
சிறுபறை முழக்கி யருளே
செம்பொன்மயி லைக்கிரியு கந்தவடி வேலவா
சிறுபறை முழக்கி யருளே. 77

கானாறு செவ்விதழ்க் கோடல்கமழ் நெரிசுரி
கருங்குழற் கற்றை சரிய
காரளக பந்தர்மிசை மிசைவண்டு சுழலவாக்
கனனா வதங்க சறிய

வூனாறு வடிகணை விழிக்கடைகள் புடைபெயர
    வுபயதன பார மேரு
  வொளியார வடமாட வாடுதொறு மாடுதொறு
    மொருமருங் கிலுமி ரங்க
வானூறு படவுயரும் வேய்தந்த நித்திலம்
    மணிக்க வணில்வைத் தெறிந்து
  வளைகுரற் செந்தினைப் பைம்புனைத் திதணெறி
    வள்ளிபடி கள்ளை யோர்ப்புந்
தேனூறு மழலைக்கு வாயூறி நின்றவா
    சிறுபறை முழக்கி யருளே
  செம்பொன்மயி லைக்கிரியு கந்தவடி வேலவா
    சிறுபறை முழக்கி யருளே. 78

வேறு

தனபதி மகபதி பதியுடன் வருயிர
    தருமொரு வித்தகனே
  தமிழொடு வடகலை யெவையவை யவைதெரி
    சகல சனப்ரியனே
பனகரு முலகரு மமரரும் வழிபடு
    பதயுக சிற்கனனே
  பறிதலை யமணரை நடுகழு முனையிடு
    பலகவி விற்பனனே
மனகதி யதனினு மிகுகதி பெறுபொறி
    மயில்வரு மற்புதனே
  வரமடி யவர்பெற வருண்மழை பொழிதரு
    வசைமுகத் தினனே
தினகர செயதர திரிபுரை யருள்பவ
    சிறுபறை கொட்டுகவே
  திசைதிசை யடிதொழ மயிலையி லுறைபவ
    சிறுபறை கொட்டுகவே. 79

குறமட மகளிரு தனதட முழுகிய
    குணமலி பொற்புயனே
  குறுகலர் வயிறெரி தவழ்வுற முனையயில்
    குரைகடல் விட்டவனே
மறலிதன் விறல்கெட வடியவர் பயம்விட
    வருமொரு கொற்றவனே

வரகவி சொலுமவர் தமையிடர் செயுமவர்
மரபை யழிப்பவனே
யுறுதியொ டடியிணை பணிபவர் துயர்முழு
தொழிய வொழிப்பவனே
யுயிரினு மமுதினு மினியவ னெனமன
முருகுனர் கற்பகமே
திறலுடை யவுணரை யெதிர்பொரு தடுபவ
சிறுபறை கொட்டுகவே
திசைதிசை யடிதொழ மயிலையி லுறைபவ
சிறுபறை கொட்டுகவே. 80

## 8. சிற்றிற் பருவம்

இவ்வா றறிவ தோவல்ல
வின்ப துன்ப மவையல்ல
விரண்டோ வல்ல வொன்றுமல
யிருளு மல்ல வொளியல்ல
மூவ்வா றறிமண் டலமல்ல
மூலப் பகுதி யதுவல்ல
முடிவைம் பத்தொன் றெட்டாறு
மூன்றைந் திவற்றான் மொழிவதல்ல
செவ்வா றறியு மறிவல்ல
தேகேந் தியமு மல்லவெனச்
சென்று சென்றே யணுவணுவிற்
றேர்ந்து தேர்ந்து சிவஞானி
யவ்வா றறியுஞ் சீறடியா
லடியேஞ் சிற்றி லழியேலே
யனகா மயிலைக் கிரிமுருகா
வடியேஞ் சிற்றி லழியேலே. 81

கூறுஞ் சதுர்மா மறையனைத்துங்
குண்ட லினியு மாறாறாய்க்
கோதத் தத்துவ ராசிகளுங்
கொடிய பாசத் திரயங்களுடன்
வேறும் புகலத் துவாவாறும்
விளைந்த வின்ப வீடேழு
மேவு மட்ட சித்திகளும்
வியன்சத் திகளோ ரொன்பானுந்

தேறுஞ் சாக்கிர சுவப்னமுதற்
றிசைகள் பத்து மெட்டெட்டாய்த்
தெரிந்த கலைஞா னமுஞ்சமையச்
சிலுக்குங் கடந்தா தாரங்க
ளாறுங் கடந்த சீரடியா
லடியேஞ் சிற்றி லழியேலே
வனகா மயிலைக் கிரிமுருகா
வடியேஞ் சிற்றி லழியேலே. 82

கும்போ தயமா முனிமௌலி
குலரத் னமதா யொருமுக்கட்
கோமான் மணிபெற் றிருமார்பிற்
குலவுஞ் சாம்பூ நதவணியாய்ப்
பைம்போ தகத்தோன் சூடமணிப்
பங்கே ருகமாய்ச் சங்காழி
படைத்த முகுந்தன் றந்தொளிரப்
பதும ராக வங்கதமா
யெம்போ லடியர் தங்களுக்கு
மிந்திரா திபர்க்கும் வானவர்க்கு
மெல்லை போயச் சதுர்மறைக்கு
மெவர்க்கும் புகலா யிருக்குமுன
தம்போ ருகத்தாள் சிவப்பூர
வடியேஞ் சிற்றி லழியேலே
யனகா மயிலைக் கிரிமுருகா
வடியேஞ் சிற்றி லழியேலே. 83

பார முனக்கே யெனப்பணிந்து
பதபுண் டரிகந் தனக்கேற்ற
பணிகள் பலவு மினிதாற்றிப்
பசியின் வருந்தா வகைவிரைந்து
நேர மிகவுஞ் சென்றதென
நின்று செங்கை விரனெரித்து
நிலையுங் கதவு மில்லாத
நிலைசா லட்டிற் றொழில்புரியுந்
தார மெனயா மருகணைந்து
சமைத்த சிறுசோ றுனக்கிட்டுச்
சந்த னாதி கொடுத்தெமது
தருண வருண தனதடத்தி

னார வடமு மெடுத்தணிவோ
மடியேஞ் சிற்றி லழியேலே
யனகா மயிலைக் கிரிமுருகா
வடியேஞ் சிற்றி லழியேலே. 84

கொடிய கயமா முகனசுர
குலங்கள் சூழ வீற்றிருக்குங்
கொடிநீண் மாயா புரியல்ல
குமைக்குங் க்ரவுஞ்ச கிரியல்ல
மடிவி லடர்ச்சூர் பொருமடங்கல்
வதனத் திளவ லுடனுறையு
மாகங் கிழித்து வளரிஞ்சி
வஞ்ச மகேந்திர புரியல்ல
வொடிவில் பரிவா லெழுமுறையு
முனக்கே யடிமைத் தொழில்பூண்டே
முனையே யன்றிக் கனவிலும்வே
றென்று நினையே முலைபெய்த
வடிசில் பதம்பார்த் திழிச்சுமுன
மடியேஞ் சிற்றி லழியேலே
யனகா மயிலைக் கிரிமுருகா
வடியேஞ் சிற்றி லழியேலே. 85

நினைய வரிய வொருகுடிலை
நிமிடத் தளவிற் பலகோடி
நிற்ப ரில்லா தவுமாக
நில்ல தொகுத்து நிலவுலகின்
முனைய நெடுங்கால் கொடுத்திருகை
மூட்டி வீணா தண்டநடு
மூரி விடங்க மினிதொழுக்கி
முரியாப் பழுவண் கழிநிறைத்து
வனைய நாடி நாடியெனு
மணிவார் கயிறு பிணித்திறுக்கி
மயிர்த்தோல் வேய்ந்து சுவர்த்தசையின்
வைத்தைம் பொறிச்சா ளரம்வகுத்த
வனைய சிற்றி லதுவன்றா
லடியேஞ் சிற்றி லழியேலே
யனகா மயிலைக் கிரிமுருகா
வடியேஞ் சிற்றி லழியேலே. 86

மதுவுண் டறுகா லஞ்சிறைய
வரிவண் டினமே ழிசைமிழற்று
மணிச்சூ ழியக்கொண் டையினெமது
மாலை பரியத் தாதுவன்றி
விதுவு நாணு மொளிமுகத்தின்
மீதுநறிய சிவிறிநீர்
வீசித் துரந்தா யரும்பமுலை
மெலித்தே யார வடங்கொண்டாய்
கதுவு மிடையிற் சிற்றாடை
கவர்ந்தாய் சிலகைக் கண்புதைப்பக்
கைகள் பிடிப்பச் சிலசிலவாற்
கழுத்தின் முழுத்தி யுகிர்வைத்தா
யதுவும் பொறுத்தே மீதுபொறே
மடியேஞ் சிற்றி லழியேலே
யனகா மயிலைக் கிரிமுருகா
வடியேஞ சிற்றி லழியேலே. 87

ஒன்று காத லுற்றவன்போ
லுகந்தே யெங்க ளுடனாடி
யொளிவெண் டரள வரிசிவிரைந்
துடினு வாரிக் கொடுதந்துஞ்
சென்று சாக மெனநீலச்
செழுமா மணிகள் சேர்த்திட்டுத்
திளைக்கு மிளவுப் பெனவச்சிரச்
சின்னந் தொகுத்துத் தந்தடுத்து
நன்று புரியும் பொற்பிதுர்க
ணயங்கொண் முதிரை யெனக்கொடுத்து
நல்ல வாறே பரிந்தடிசி
னாங்க ளமைக்கு முனஞ்சிதைத்தா
யன்று போல வின்றுபொறே
மடியேஞ் சிற்றி லழியேலே
யனகா மயிலைக் கிரிமுருகா
வடியேஞ் சிற்றி லழியேலே. 88

முன்னைச் சுருதி நான்கினுக்கு
முகநான் குடைய வொருவனுக்கு
முகுந்தன் றனக்கு மெட்டாத
முதல்வ னேயா னாலுமென்ன

வுன்னைப் பயந்த தாதைதன்னை
யொருவா றணுகி யெமதுகுறை
வுள்ள தெல்லா மறியவிரித்
துரைப்பே மவன்கேட் டுறானாகில்
மின்னைப் பொருவ வடித்தசுடர்
வேலா வுனக்கு முன்னவனாம்
வேழ முகனுக் குணர்த்துவோ
மீட்டு முறையிட் டுன்னுடைய
வன்னைக் குரைப்போ மினியமையே
மடியேஞ் சிற்றி லழியேலே
யனகா மயிலைக் கிரிமுருகா
வடியேஞ் சிற்றி லழியேலே. 89

ஊரார் பெருவீ டிழைக்குங்கா
னுன்முன் னவனைத் தொழுதிழைப்பர்
உகந்து சிறுவீடி யாமிழைப்பி
னுனது சரணந் தொழுதிழைப்போந்
தேரா யதுவு மொருகுறப்புன்
சிறுமி மிச்சிற் றினைமாநீ
தின்ற தனையா மினியறியத்
தெய்வ யானை தனக்குரைப்பேம்
பேரா யிரங்கள் பெற்றபிரான்
பெற்ற பிள்ளை யானாலென்
பெரிய விமயப் பேராட்டி
பெற்ற பெருவாழ் வானாலென்
ஆரா னாலெ னினிப்பொறே
மடியேஞ் சிற்றி லழியேலே
யனகா மயிலைக் கிரிமுருகா
வடியேஞ் சிற்றி லழியேலே. 90

## 9. சிறுதேர்ப்பருவம்

தொக்கிட் டெதிர்ந்தமர் தொடங்கிநிரு பகன்முதற்
சூரர்வெங் காமனாதி
தொல்லைப் பழம்பகையை யிதயரண களமதிர்
தூறையிட் டாடலிட்டு
நெக்கிட்ட விழமுட்டி வெட்டிவெட் டிச்சங்க
நிரைநிரை முழக்கவஞ்ஞு

னேராது முதுகிட்டு நின்றிடப் புருகுடி
நெறிப்பினால் வாகைகொண்டு
புக்கிட்ட முப்புவன வட்டத்தி னுங்கருணை
பொழிசெயத் தம்பம்நாட்டிப்
போதகன் சிவஞான தேசிகன் மும்மதம்
பொழியும்வே ழங்கள்கட்டுந்
திக்கெட்டு ஞானச்சக் கரமொன் றுருட்டிநீ
சிறுதே ருருட்டியருளே
தென்மயில மலைவாழ வந்தகரு ணாகரா
சிறுதே ருருட்டியருளே. 91

கரிசித்திர காயம்வல் லுளிகரடி புள்ளிக்
கலைகோட்டு மானிரும்பைக்
காச்சித் திருக்கியிட் டனமருப் பிரலையடு
கண்டீர வாதிவெருவப்
புரிசித்திர மயில்கடவி வேட்டமேற் கொண்டுபுகழ்
பொம்மையினும் விளையாடவிப்
புவியுளோ ரனைவருங் கண்டுதொழ வந்துட்
புகுந்துவாழ் வுற்றகோலம்
பரிசித்த வளவில்வே திக்குமாக் குளிகையிற்
பாரெலாம் புனிதமாக்கும்
பாதபங் கேருகச் சதாசிவச் சிவஞானி
பங்கயக் கண்கள்குளிரத்
தெரிசித் துளக்கமல மலரவருள் வைத்தவன்
சிறுதே ருருட்டியருளே
தென்மயில மலைவாழ வந்தகரு ணாகரா
சிறுதே ருருட்டியருளே. 92

மேடத்தை யுள்ளிட்ட ராசியொடு புசனிட்ட
மிக்கவுடு ராசியுதிர
வெயில்விட் டெறிக்கும்ரவி மண்டலம் வெருக்கொள்ள
வெண்டிங்க ணடுநடுங்க
கூடத்திரி கூடத்தி னுடனண்ட கூடமுங்
குப்புரச் சக்கரவாளக்
குன்றமுங் கிடுகிடென வாயிரங் குடுமிவட
கோதண்ட சிகரமிடிய

வாடற் கொலைக்களத் தமராடு தானலாந்
தமரா யிரங்கவந்த
மாடவெஞ் சூரனு மஞ்சியே நெஞ்சூச
லாடவிசை கொண்டுகொத்திச்
சேட்டப்ப ணாடவிவ ணக்குசிகி ரதவலவ
சிறுதே ருருட்டியருளே
தென்மயில மலைவாழ வந்தகரு ணாகரா
சிறுதே ருருட்டியருளே. 93

கதறக்க ருங்கடற் சேறுபட வேயுண்டு
ககனவட் டத்தெழுந்த
காளமே கக்குலமு மீளக் குமட்டிக்
கனைத்தெதி ரெடுப்பவுடல
முதறப் பதைத்தவுணர் நடுநடுங் கக்கிரண
மோராயி ரங்கள்வீசு
முதையா தபக்கடவு ளுந்திங்கண் மண்டலத்
துடனுடுக் கணராசியும்
பதறத் தலைத்தலை கிடந்திருட் படலம்
பறித்தெறிந் தொளிபரப்பும்
பலவெறுங் கைரத்ன பந்தியென வான்மறுகு
படர்குப்பை சிற்றடியினாற்
சிதறக் கிளைத்தெத்து சேவற்ப தாகையாய்
சிறுதே ருருட்டியருளே
தென்மயில மலைவாழ வந்தகரு ணாகரா
சிறுதே ருருட்டியருளே. 94

துஞ்சோரி கண்விழித் தாடுமா யிரகோடி
துண்டமுண் டக்கவந்தஞ்
சொரிசோரி யுண்டாட வண்டாடு கற்பகத்
தொடைசூடி வந்து வீரர்
நஞ்சோரி யிதுவென்ன நகையாட மிகையாட
நாகப்ப ணாமௌலியும்
நானிலமு நெறுநறென நெளியக்ர வுஞ்சகிரி
நகரக் கராசலமுகன்
நஞ்சோரி விழிகக்க மிக்கவே தண்டமு
மண்டமும் பொதிரெறிப்ப
வம்புரா சிகளஞ்சு றுக்கொள முறுக்கெயிற்
றடுசூர னாவியுண்டு

செஞ்சோரி கக்கியெதி ரேத்துமூ வடிவேல
சிறுதே ருருட்டியருளே
தென்மயில மலைவாழ வந்தகரு ணாகரா
சிறுதே ருருட்டியருளே. 95

பாவேந்தர் பாவுக்கு நிலையாது குவலயம்
பற்றாதெ னப்பரந்து
பாதாள மேற்றவும் வேதாள முற்றவும்
பருகவுங் குறைபடாது
மாவேந்தர் செங்குருதி யாறுபாய்ந் தோரேழு
மகரா லயஞ்சி வப்ப
வாசிதுண் டம்பட துண்டித்த தோவட்டம்
வட்டவா மையின்மிதப்ப
கோவேந்த ரசுரவன் குலவேந்தர் படுபிணக்
குன்றுகுன் றாகவீழக்
கூளியா டப்பத்திர காளியா டப்பசுங்
குடர்மாலை சூடும்வடிவேற்
றேவேந்த்ர லோகரட் சாபரண ரணதீர
சிறுதே ருருட்டியருளே
தென்மயில மலைவாழ வந்தகரு ணாகரா
சிறுதே ருருட்டியருளே. 96

சந்திரன் பலவேறு தாராக ணங்கள்சூழ்
தரவிமா னத்துலாவச்
சவிபெற்ற ரவிபுரவி யேழ்பூட்டி யேநெடுந்
தமனியத் தேர்செலுத்த
முந்தரன் பொருவிடையு கைப்பமா யோன்கருட
மூரிவா கனநடத்த
முளரிப் பொகுட்டயன் புள்ளூர முப்பத்து
முக்கோடி தேவர்வாழ்த்த
இந்திரன் பொற்பமைய ரம்பையர் மணிக்கவரி
யிருபுண்டை யிரட்ட வொற்றை
யிளநிலா மதிவட்ட வெண்குடை கவிப்பவீ
ரிருமருப் புப்பொருப்பு
சிந்துரங் கற்பகா டவிகடவி வலம்வரச்
சிறுதே ருருட்டி யருளே
தென்மயில மலைவாழ வந்தகரு ணாகரா
சிறுதே ருருட்டி யருளே. 97

மையுலா மேகபந் தியுமிந்து ரேகையும்
வாரீச முங்காவியும்
வடியிட்ட வமுதமுங் குமுதமுந் தவளமும்
வாரமுழு மணியூசலுந்
துய்யபூ கமும்வேயும் யாழுமென் காந்தருளுஞ்
சுகதுண்ட முஞ்சுரும்புந்
துணையரும் புடனுறும் பதனொழுகு கங்கைநிறை
துன்னுதிரை சுரியன்மின்னுப்
பையரா வாழைஞெண் டிளவரால் துலைபந்து
பவளநிரை முத்தமாம்
பஞ்சூட்டு மிலவமு மணந்தன்ன நடைவாய்த்து
பைம்பொனோ வியநிகர்க்கும்
தெய்வயா னைக்குமொரு வள்ளிக்கு மணவாள
சிறுதே ருருட்டியருளே
தென்மயில மலைவாழ வந்தகரு ணாகரா
சிறுதே ருருட்டியருளே. 98

வேறு

பலகலை யுந்தழை வேய்த விசும்பறை
பட்டார் காவாழப்
பகன்மண் டிலமொடு விண்டல மீதெழு
பணிமண் டிலநிலவக்
கலக மிடும்பகை நிசிசரர் சால
கடங்கடர் கிளையகலக்
கங்கா நதியுட னிமையம டக்கொடி
கண்டுக ளித்தாட
வலகில் சராசரம் யாவையு மலிவுற
வாரண நிலையெய்த
வறநா லெட்டுந் திசையெட் டினுமக
வாயிர பலகோடி
யுலகமெ லாம்வள ரச்சுடர் வேல
னுருட்டுக சிறுதேரே
யுயர்மயி லைக்கிரி வந்தருள் கந்த
னுருட்டுக சிறுதேரே. 99

அபைய மெனத்தே வரைமூ வரைவரை
யாசைபு ரப்பவரை

யந்தணர் முத்தீ முற்றத் தாக்கி
யமைத்தருள் பிறவாக்ய
வபையை யிலத்தையை தந்து நிரந்தரம்
வந்தனை செயுமன்பர்
மதுரித் தமுதொழுகப் புரிகவிவரு
வரகவி னாவலர்தஞ்
சபைபுகு தப்புரி தண்ணளி செய்து
தடங்கண் பொழிகருணை
தனையும் மறியா துனையுங் குறியாத்
தமியேன் முடிமீதும்
உபய பதத்துணை வைத்த கிருபாகர
வுருட்டுக சிறுதேரே
வுயர்மயி லைக்கிரி வந்தருள் கந்த
னுருட்டுக சிறுதேரே. 100

மயிலம் முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று

உ

# மாவைப் பிள்ளைத்தமிழ்

மு. கந்தையா

## காப்பு

ஓங்கார நாதமா யுள்ளூற் றுயிர்த்துவரு
மொருஞான விளைவ தாகி
உலகறிய நிகழ்கின்ற உற்பத்தி வடிவெலா
மொருதனது வடிவமாகி
நீங்காது மனசுபுரி சங்கற்ப மெழுதொறும்
நேர்நின்று விக்ன மாற்றி
நினைவினூ டொளிர்கின்ற நின்மல விநாயகனை
நித்தலும் பத்தி செய்வாம்
ஆங்கார மானவச் சூரனையு மயில்விட்
டழித்தவ னுளங்கி ழித்தே
யண்டருங் கொண்டாட வாடலொடு கூவல்புரி
யானந்த வடிவ மருளும்
பாங்கான வண்ணலைப் பழைமைதிகழ் மாவையம்
பதியுற் றமர்ந்த கோவைப்
பைந்தமிழ்க் குரவனைப் பரவுபிள் ளைத்தமிழ்
பண்புற் றிலங்க வினிதே.

## 1. காப்புப் பருவம்

### திருமால்

பாவனா தீதப் பழம்பொருளை நாடவோர்
பன்றியாய்ச் சென்றி டந்து
பகர்வரிய தொண்டினா லன்றிநம் மாணவப்
பரிசினா லொருவகை யினும்

ஆவதீ தன்றெனு மளப்பரிய வுண்மைக்கொ
ரளவுகோ லான நெடுமால்
அடியிரண் டிட்டுமூன் றுலகையு மளந்திட்ட
அவனருள் வேண்டி நிற்பாம்
தேவனா மொருசிவன் செங்கரத் துற்றருகு
தேவியுமை வதன நோக்கிச்
செங்கைக ளெடுத்தெறிந் தானந்த மெய்துமித்
தெய்விகக் குழவி பின்னாட்
காவனா யகனெனக் காக்குமங் கலமெனக்
கண்ணோடி நின்ற தேவர்
கன்னியர் பரிந்திடக் காண்பினிய மாவைவளர்
கந்தனைக் காக்க வென்றே. 1

## சிவபெருமான்

பேசுபிர பஞ்சமே மெய்பிரமம் பொய்யெனும்
பேதைலோ காய னோடு
பிரமமே மெய்வெறும் பொய்த்தோற்ற முலகெனும்
பேதவே தாந்தி நிற்கத்
தேசுபெறு சிவனுமெய் சிவனையறி காறுமச்
சிவனருளி வுலகு மெய்யென்
சித்தாந்த சைவநெறி வித்தாகி விளைவான
சிவனருள் போற்றி செய்வாம்
மூசுகர நீட்டியம் முதுகங்கை புனிதநீர்
முன்னவ னெடுத்து வார்ப்ப
முற்றத் திருந்தன்னை முகிழ்கருணை நீராட்டி
முச்சிநீ ரூதி யொற்றி
வீசுபுகை யூட்டிவெண் பொடிதிமிர்ந் தணிசெய்து
மேவுமிறை பிறைநி லவினில்
மெல்லென நிமிர்த்தழகு பார்த்திட விளங்கிவளர்
வேலனைக் காக்க வென்றே. 2

## உமாதேவியார்

ஐந்தொழி னிகழ்த்தவுறு மையற் கபின்னமா
யவனருட் பிரவா கமா
யச்சத்தி தத்வமுத லானபிரு திவிகா
றமைந்ததாத் விகங்க ளெல்லாஞ்

சொந்தமா யங்கங்கு வந்துவந் தின்பமே
துய்த்திடத் தலைய ளிக்குஞ்
சுத்தமங் களசொருப சித்தநிகழ் திருவான
தேவியருள் சிந்தை செய்வாம்
தொந்திவிழ வோடிவரு மைங்கரத் தும்பியைத்
துண்ணென வெருண்டு நோக்கித்
துள்ளித் துடித்தழத் தொட்டில் துளங்கிடத்
தும்பிமுக னோட்டெ டுக்கத்
தந்தையவ ணணையவுற் றிந்தநிலை காணெனத்
தாய்பரிந் தேற்ற ணைக்குந்
தனியிளம் பாலனாய்ச் சால்பினிய மாவைவளர்
சாமியைக் காக்க வென்றே. 3

## சித்திவிநாயகர்

மீதுலவு கார்முகில் மின்னுற் றொளிர்வதென
வெண்கோ டிலங்கி யொளிர
மேவுமம் முகிலினடு முழுமதி யணைந்ததென
மெய்யுருப் பண்பி வற்றால்
ஓதுல கெனப்பெரிய மோதக மணைத்தருளு
மொருதுதிக் கையி னோடு
மோவாது வந்துலவு முயர்சித்தி வேழமதை
யுள்ளத் திருத்தி யுணர்வாம்
தாதுமலி சோலைநுழை சந்திரற் கண்டுவிண்
சார் 'ரஷிய மதிய' மொன்று
தருமிசைத் தங்கிக் கிடந்ததென் றோடியணை
தருமமரர் சிறுவர் மாடே
போதுலவு கிளையெலாம் புடையலைய வேறியணை
பூசுரர் சிறுவ ரவர்மெய்ப்
பொன்னொளி படிந்தழகு மன்னுமெழில் மாவைவளர்
போதனைக் காக்க வென்றே. 4

## பிரமதேவர்

வாழியீ ரேழுலகு மற்றுள்ள புவனமும்
வந்துவந் துற்ப விக்கும்
வகைவேறு பட்டபல் லுயிர்கட்கு முலகுடல்
மாறிமா றிப்ப டைத்தே

ஊழிதோ றூழிநிக ழொருபெருஞ் செயலினா
லுடலுறுப் புள்ள மெல்லாம்
ஒக்கச் சிவந்தசெந் தாமரையி லுறைபிரம
னொண்மலர்த் தாள்ப ரவுவாம்
ஏழிசைக் கந்தருவ ரிசைபாட நாரதர்
யாழ்மீட்ட வின்ப மெய்தும்
எழுகோடி முனிவரர் பல்லாண்டு பாடவோ
ரெண்கோடி பூத மாட
ஆழியா னறுகெடுத் தாசீர் வதித்துய்ய
ஆணிப்பொன் மஞ்ச மேற்றி
அரமகளிர் கோதாட்ட வணிகிளரு மாவைவள
ரண்ணலைக் காக்க வென்றே. 5

## ஆறுமுகசுவாமி

நீடுகொடி மீதெழ நிவந்தகுடை நிரையெழ
நெடுந்தே ரிழிந்து நிமிர்வான்
நித்தில விதானமெழ நின்றசன மொய்த்தெழ
நிரந்தமலர் மழையு மெழவே
கோடுதுடி குமுறநற் குடமுழவு குமுறமுற்
கொட்டுமே ளங்கு முறமேற்
கொள்ளுபர வசமெழக் குலைகுலையு மன்பெழக்
கும்பிடும் வாய்ப்பு மெழுமா
றாடுபத் மீதெழ வடிப்புழுதி வானெழந
லம்மைநல மிம்மை யெழநின்
றாடியணி மாவையர சாண்டினி தமர்ந்துமகி
ழாறுமுக சாமி காக்க
தேடுமறை யொலியெழத் தெய்வவர கரவெழத்
திருமறை முழக்க மெழமெய்த்
தெய்வவொளி திசையெழச் சேர்ந்தினிய மாவைவளர்
சேந்தனைச் சிந்தை யுறவே. 6

## வைரவப் பெருமான்

சுட்டறி விறந்தசிவன் மட்டறு மறக்கருணை
சூழிருட் காளமுகி லாய்ச்
சுருளிருட் பத்தியொடு தெருளுமின் னுருமினொடு
தோன்றித் திகழ்ந்த தென்ன

வட்டித்த சடையினொடு நெட்டித்த சூலமொடு
வளரிரவு வந்து லாவி
வஞ்சர்த நெஞ்சதிர்ந் தஞ்சிட வுரப்பிவரு
வயிரவற் போற்றி செய்வாம்
வெட்டிப் பிளந்ததென வட்டப் பலாக்கனி
வெடித்தொழுகு மிரச மோடு
வெள்ளிலைக் கொடிவளர வள்ளிலைக் கதலிரச
மேவிக் கலந்து பாய்ந்து
முட்டச் செழித்துவளர் மட்டக் கருப்பிரச
மோடுற் றலைந்து பெருகும்
மூர்த்திதல மோடினிய தீர்த்தமுறு மாவைவளர்
முருகனைக் காக்க வென்றே. 7

## இலக்குமி தேவி

வடமொழித் திரிபொப்ப மாஇஷ்ட புரமதே
மாவிட்ட புரம தாகி
மருவிலக் குமிநயந் தென்றுமுறை புரமெனும்
வாய்மைதன் னால்நி கழவே
இடமுடைய வுலகெலா மின்பசா தனமான
வெவைவெயவையு மேற்ப நல்கி
இம்மைக்கு வாழ்வளித் தம்மைக் கறங்கூட்டு
மிந்திரை பதம்ப ணிகுவாம்
மடவரல் மாருதப் புரவீக வல்லிமறை
வல்லசா மிக்கு ருக்கள்
மந்த்ரமறி மாமேதை விஸ்வநா தக்கிழாஅர்
மற்றுமுளர் பக்தி லயமாய்க்
குடதிசைக் கோபுர மெழுந்தோங்கி வானவர்
குறைவினவி யணைய நிற்குங்
கோயிலின் மேவிநமர் குறைவினவி மாவைவளர்
குமரனைக் காக்க வென்றே. 8

## சரஸ்வதி தேவி

உற்பவித் தெழுகவிதை யுயிர்துவனி வக்ரோக்தி
யுருவகமி ரீதி யலமற்
றொருதனரு ளேயரு ளூறாதவ ரியற்றுகவி
யுயிரற்ற வுடலா மெனக்

கற்பனைச் சிகரமாங் காளிதா சக்கவி
கவிச்சக்ர வர்த்தி கம்பன்
கருத்திற் கலந்துயிர்க் கவிதைவடி வாயருள்
கனிந்தூற்று மமுத வாணி
தற்பர விநாயகன் தம்பியென் றணைதலுந்
தன்னமுகை நீங்கி யன்னோன்
தாழ்துதிக் கையினுதி சற்றே யெழுந்துவளை
தகைமைகண் டுண்ம கிழ்ந்தே
அற்புதப் பொற்சிரிப் பகடுடை படச்சிரித்
தானந்த வெள்ள நீந்தும்
அழகினிள முளையென்ன வருள்பொலியு·மாவைவள
ரையனைக் காக்க வினிதே. 9

### நவக்கிரக மூர்த்திகள்

ஓதவுறு பன்னிரண் டுயர்லக்ன வகைதோறு
முச்சபகை நீச மாகி
யுலகுயிர் வாழ்விலுறு மொவ்வோ ரவஸ்தையினு
மோவாது தாக்கி நின்றே
மூதறிவி னாற்கணித முற்றுமுணர் முனிவர்த
முயற்சிக்கு மப்பா லவாய்
முன்னுறு வினைப்பயன் முகந்தளி நவக்கிரக
மூர்த்திகளை முன்னி நிற்பாம்
ஏதமுகி லான்பால னின்னுமோ கண்விழியா
னினியமுலை தானு முண்ணா
னென்னுற்ற தோவெனலு மிருபெரு மருத்துவ
ரெழுந்தோடி நாடி பார்க்கத்
தீதறிய வேட்டினிற் திகழ்கிரக நிலைகண்டு
தெசாபுத்தி பிரம னெண்ணத்
திருதிரு விழித்தவர் திகைக்கச் சிரித்துவளர்
தேவனைக் காக்க வென்றே. 10

### சண்டீஸ்வரர்

சீவனுட் பொலிகின்ற திருவருளை நேர்கண்டு
செம்மையன் புய்த்து வருவோர்
சிவபூசை கைவருஞ் சீலத்தர் சிவமான
சிவவிளைவு மன்ன வற்கே

யாவதெ‌ன வாவின்க ணன்புய்த் தரன்கணு
மடித்தொண்டு பூண்ட நெறியே
ஆன்பா லுவந்தரு ளரன்பா லிருந்தருளு
மண்ணல்சண் டீசர் காக்க
பாவமொன் றறியாத பச்சிளம் பாலர்தம்
பாவையிற் சுவாமி கண்டு
பருமணற் கோயிலிற் றிருவிழா வணியெழப்
பகர்வாழை மடல்வ ளைத்த
மாவலர் மலர்த்தண்டி தோளேற்றி மாண்டகர
மாமேளங் கொட்டி யார்த்து
வாயொலி விளைத்தினிய நாயன மிசைத்துவரு
மாவைவளர் வேலவ னையே. 11

## 2. செங்கீரைப் பருவம்

வெண்ணிலா வழுதுளி முத்துற் றுருண்டலைய
மெல்லணை யமர்ந்த தென்ன
வியர்த்துளி பனித்தலைய மேவுமுக மண்டல
மெடுத்துநே ரணைய நின்றே
உண்ணிலா வுவகையுறு மன்னையர் விடுப்புகட்
'கும்'மெனத் தலைய சைத்தங்
குள்ளமுறு தெள்ளமுத மொருகடை யிதழ்ப்புறத்
தோவா தொழுக்கி மிளிருங்
கண்ணிலா வின்பக் கடைக்கணுகு கருணையங்
கடலினு ளமிழ்ந்து கோடி
கற்பாந்த முற்றுக் கனத்துத் திணிந்தநமர்
கன்மவினை கழுவி யுய்யத்
தெண்ணிலா வணியுஞ் சிவன்றரு மிளங்குழவி
செங்கீரை யாடி யருளே
தெய்வநிகழ் மாவையிற் சைவமகிழ் தேசிகா
செங்கீரை யாடி யருளே. 12

நீராட்டி யன்னையர் நிறையவெண் ணீறட்டி
நிகரிலொப் பனையி யற்றி
நேர்பார்த்து வாயூறிக் கண்ணூறு தீரவொளி
நெற்றியிற் றிலக மிட்டுப்
பாராட்டி விடுதலும் பார்மிசை தவழ்ந்தன்னை
பட்டாடை மடியி னேறிப்

பருமுலை சுவைத்தசுவை பற்றாதெ னக்கொலொரு
பாதவிர லுஞ்சு வைத்துப்
பேராட்டி யிமையவர் பெருமாட்டி தன்னயற்
பிரியாத பெருமா னொடும்
பெரும்புளுகு புளுகிமிகு பூராய மாகவே
பேசரிய பெருமை பேசிச்
சீராட்டி மகிழ்வுறுந் தேடரிய செல்வமே
செங்கீரை யாடி யருளே
தெய்வநிகழ் மாவையிற் சைவமகிழ் தேசிகா
செங்கீரை யாடி யருளே. 13

நேயமிகு மன்பலைய நேர்நின்று கைநீட்டி
நின்தந்தை வருக வெனலும்
நெட்டித் துடல்பாய்ச்சி நிறையுவகை வெள்ளத்து
நீந்துமா நீந்தி யுன்னித்
தாயபத மலர்களுஞ் சரிபண்டி வட்டமுந்
தனிப்புழுதி யாடி யோய்ந்து
சாய்ந்திரு முழந்தாள் மடித்துத் தவழ்ந்தவன்
தருகரம் பற்றி யேறிச்
சேயவுத யாசலந் தோன்றுசெங் கதிரெனச்
சிவன்றோள் விளங்க லொன்றோ
தெய்வநிறை சந்நிதிச் செந்நின்று கைநீட்டித்
திருவருட் டிறங்க ளுன்னித்
தேயமன மழியுமவர் செங்கைக்கு மெட்டுநீ
செங்கீரை யாடி யருளே
தெய்வநிகழ் மாவையிற் சைவமகிழ் தேசிகா
செங்கீரை யாடி யருளே. 14

ஆர்வமோ டுனதடிக ளணிமுடி மிசைச்சேர்த்தி
யங்கப்ர தக்ஷிண மாக
அணியுடல் புரட்டிநின தாலயஞ் சுற்றிவந்
தையமுக நேர்நி மிர்த்துச்
சோர்வொழுகு முடல்வழிச் சோதிவியர் வொழுகிடத்
தூயவுள மார்வ மொழுகத்
துயர்வரு மிளைப்பிற் சுகானுபவ மொழுகத்
துதிப்பவர் வதன நோக்கிச்
சீர்வள ரனிச்சசெந் தூவிதிக ழணைமிசைச்
சிறியதிரு வுடல்பு ரட்டித்

திருமுக மெடுத்துத் திகழ்ந்தெதிர் செந்நின்று
செம்மையருள் நல்கு கருணை
சேர்வுறு குறிப்பிற் சிரித்துநிகழ் செல்வமே
செங்கீரை யாடி யருளே
தெய்வநிகழ் மாவையிற் சைவமகிழ் தேசிகா
செங்கீரை யாடி யருளே. 15

நீற்றினொளிர் புண்டரக் கீற்றினொடு மொக்குமென
நிலவொளிப் பட்ட மாட
நெற்றியிற் சுட்டியுஞ் சுழியமு மசைந்தாட
நிறைந்தபுன் முறுவ லாட
ஆற்றமகி ழடியருள மன்பாட அருளாட
ஆனந்த வெள்ள மாட
ஆத்துமம் நிழலாட அங்கமுள வெங்கணும்
அற்புதப் புளக மாடத்
தோற்றுநமை யொருகோடி சென்மங் கடந்துந்
துரந்துவரு தொந்த மாடத்
தூயவரு ளொளியிற் சுகித்துக் கிடக்குமொரு
சுத்தநிலை நினைவி லாடத்
தேற்றமுறு கண்ணருவி சேர்ந்தாட நங்குமர
செங்கீரை யாடி யருளே
தெய்வநிகழ் மாவையிற் சைவமகிழ் தேசிகா
செங்கீரை யாடி யருளே. 16

வேறு

முற்பட் டுனது கருணைவெள்ளம்
முற்றும் முகந்து கொண்டேறி
மோனக் குகையுட் கருவிருந்து
முக்தா னந்தங் கொழித்தலையச்
சொற்செட் டினுக்குட் பொருட்கனிவு
தேக்கித் தெவிட்டக் கவிதைபொழி
தூயோன் குமர குருபரன்வாய்த்
தொன்மைப் புலமை நலந்துய்ப்பான்
எற்பட் டிலங்க வெடுத்தருளு
மெழின்மா முகநே ரெடுத்தாடி
எளியோம் புன்சொற் றிறமுங்கேட்
டிரங்கு மேழை பங்காளா

தற்கெட் டிருப்போர் தனிக்குரவா
தலைவா செங்கோ செங்கீரை
சைவம் வளர மாவைவளர்
சாமீ செங்கோ செங்கீரை. 17

சொல்லார் செறிவுட் பொருள்குழைந்து
சுவையுங் கனிந்து தேனிப்பத்
துலங்கு மாத்மத் துடிப்பினிசை
துன்னுஞ் சந்த மலையெறிந்து
பல்லா ரதிர்ச்சி படவிசைக்கும்
பக்தன் பகழிக் கூத்தனருட்
பாகைப் பிழிந்து பதப்படுத்திப்
படைக்கும் பிள்ளைக் கவிசுவைத்த
நல்லார் வத்தால் நம்மொழியும்
நயப்பான் நகைமா முகமெடுத்து
நலங்கொள் காட்சி யளித்தருளும்
ஞானச் சுடரோய் நானிலத்திற்
செல்லார் பொழிற்சீர் திகழ்மாவைத்
தேவே செங்கோ செங்கீரை
சைவம் வளர மாவைவளர்
சாமீ செங்கோ செங்கீரை. 18

நீரார் சடிலச் சிவன்தோன்றி
நெற்றிக் கண்ணுந் தோன்றிடவும்
நிலைபே ராது நின்றவன்றன்
நிறைவார் கருணை முழுக்காடித்
தாரா வளமெல் லாந்தந்த
தன்மா னஞ்சால் தமிழ்ப்புலவன்
தனிமா முருக தத்துவத்தைத்
தகைசால் முருகில் வடித்தெடுத்து
நாரார் புலமை மெருகொளிர
நாட்டுங் கலைஞன் நக்கீரன்
நலமார் ஞானப் புதுச்சுவைதோய்
நல்ல தமிழ்த்தேன் புதிதுண்ணுந்
தாரார் கடம்ப தமிழ்க்குரவ
தலைவா செங்கோ செங்கீரை
சைவம் வளர மாவைவளர்
சாமீ செங்கோ செங்கீரை. 19

## வேறு

வீடுத வும்வெளி யாகிய தில்லையின்
மேவுறு பொற்சபையில்
வியாக்கிர பாத பதஞ்சலி முனிவரர்
வேண்டுறு பாதமெடுத்
தூடுபு குந்து நிறைந்து மலர்ந்தொளி
ருள்ள மளாவிமிகு
முடலுறு மண்டல மெத்தனை யத்தனை
யூடு மொளிர்வரவே
கோடுவி யன்றுடி கொக்கரை சர்ச்சரி
குடமுழ வணிவீணை
கொம்பொடு தாரை குலம்படு காகள
குழலிசை குமுறிடநின்
றாடுசி வன்றரு மீடில்ப ரம்பொரு
ளாடுக செங்கீரை
அன்புறு மாவையி லின்புறு சிவமணி
யாடுக செங்கீரை. 20

நாற்றிசை காற்று நலிந்திடு கொட்பினி
னல்லக(ண்) ணீரொழுக
நாடுசி மிந்திவெண் டூசுதி கழ்ந்து
நடுக்கமு முற்றுடலிற்
றாற்றும டல்விரி தால மசைந்து
சரிந்து வளைந்தாடிச்
சார்வுற வொன்றனை யொன்று தழீஇநிமிர்
சால்புற வெந்தைபிரான்
நீற்று விளங்குடல் நீர்வழி கண்ணொடு
நேயமு றத்தழுவி
நின்று சரிந்து நிமிர்ந்து நடம்புரி
நின்மல னடியர்செய
லாற்றுறு மாவையி லடியவர் மனமணி
யாடுக செங்கீரை
அன்புறு மாவையி லின்புறு சிவமணி
யாடுக செங்கீரை. 21

தோடுகொள் பலவகை பொன்னரி மாமலர்
தொகுமொரு செண்டொளிரச்

சுந்தர வர்ண மியைந்து சிறந்திடு
தோகை மயிற்கலபக்
காடுகொ லெனவரு காவடி யினநிரை
கண்டுக ளிப்பேறிக்
காவுறு மென்சினை கோபுர நாசிகை
கார்மயி லினமேறிக்
கோடுவி யன்றுடி கொட்டிடு மேளமுன்
குறியிசை தவறாமே
கொண்டலர் சிறையொடு குதுகல நிறைவொடு
குதிகுதி குதியென்ன
ஆடுந டம்பயில் மாவையி லருமணி
யாடுக செங்கீரை
அன்புறு மாவையி லின்புறு சிவமணி
யாடுக செங்கீரை. 22

## 3. தாலப் பருவம்

வடபூ தரத்து வெள்ளருவி
மாமே ருவின்பா லிழிவதென
மாவைப் பொன்மா மண்டபத்து
வனப்பார் முத்து வடந்தொடுத்துக்
கடவுட் சோதி கலந்தொளிரக்
கவினார் நவமா மணிகுயிற்றிக்
கையாற் றீண்டான் கருவியெடான்
கமலன் கருத்தால் வகுத்தமைத்துப்
படமார் நீலம் விதானித்த
பைம்பொற் றொட்டில் பக்குவிடப்
பாத மலர்கள் சிவப்பித்துப்
பதைக்குந் தாயர் பரிவுள்ளந்
தடவுங் குழவிக் கோலமருள்
தலைவா தாலோ தாலேலோ
தமிழார் மாவைத் தலம்புரிந்த
தவமே தாலோ தாலேலோ. 23

சால விரிபூம் பாளைகொடு
தண்ணார் கமுகு கவரியிடத்
தழைத்துச் செழித்த தனித்தெங்கு
தலையா லிளநீர்க் குலையேந்தி

ஞாலம் புரந்து வானுலவும்
நலமார் தேவர் குலமகிழ
நன்றிக் கடப்பா டொருவாமே
நாளும் மேற்சென் றுபசரிப்பப்
பாலக் குருகி னிறகேய்ப்பப்
பசுவெண் குருத்தாய் விரிந்தலர்ந்து
பத்தி விளங்கப் பணிமாறும்
பண்பா ரால வட்டமொடு
தாலம் விளங்கும் மாவைவளர்
தலைவா தாலோ தாலேலோ
தமிழார் மாவைத் தலம்புரிந்த
தவமே தாலோ தாலேலோ. 24

கன்னற் றமிழு மாரியக்கற்
கண்டுங் கனிந்து செறிந்திறுகிக்
கதித்த சந்த மெடுத்தெறிந்து
கனவே சுத்தோ டுறப்பாய்ந்து
உன்னற் கரிதாங் கலைஞருளத்
தோவா தூறி யுவட்டெடுத்திட்
டொழுகும் பத்தித் திருப்புகழ்சொல்
லூரவோ னண்ண லருணகிரி
துன்னற் கருமா துயர்துடைத்துச்
சுத்த சொரூப சித்துருவாய்ச்
சும்மா விருசொல் லறவென்று
துரியா தீதப் பேறருளுந்
தன்னற் கருணை தனக்குருவாந்
தலைவா தாலோ தாலேலோ
தமிழார் மாவைத் தலம்புரிந்த
தவமே தாலோ தாலேலோ. 25

துங்கப் பழைமைத் தமிழ்ப்புலவோர்
தூய புலமை நீராட்டிச்
சோதித் தமைத்த சொல்லணையிற்
றுயிற்றித் தமிழ்ச்சேய் தாலாட்டுஞ்
சங்கத் தொட்டில் தவழ்ந்தேறித்
தகைமாண் கபிலர் பரணரொடு
சாரு மிளநா கன்கீரன்
தகுமிங் கிவர்க்கு நடுவிருந்து

பங்கம் படராக் களவியற்காம்
பல்லோ ருரையுஞ் செவிமடுத்துப்
பட்டுற் றுணர்த்தும் மெய்ப்பாட்டிற்
பண்பா ருரையீ தெனக்காட்டித்
தங்கத் தமிழ்க்குப் புதுமையருள்
தலைவா தாலோ தாலேலோ
தமிழார் மாவைத் தலம்புரிந்த
தவமே தாலோ தாலேலோ. 26

வண்டல் மகளி ரட்டவெலாம்
வாழைப் புதலி லெடுத்தடுக்கி
வாய்க்கா லொழுகு நறுநீரில்
வகைமாண் பொம்மை நீராட்டி
மண்டு காத லூறத்துவட்டி
மறைத்து வைதது முலையூட்டி
வளர்மென் மழலை பொதியவிழ்ப்ப
மாசா லங்கள் மிகப்பேசிக்
கண்ட கமுகின் நறும்பாளைக்
கதிராற் றெற்றி வெற்றிலையின்
காண்பின் கொடியிற் றொடுதொட்டில்
கனிவோ டேற்றித் தாலாட்டுந்
தண்டேன் சோலைத் தனிமாவைத்
தலைவா தாலோ தாலேலோ
தமிழார் மாவைத் தலம்புரிந்த
தவமே தாலோ தாலேலோ. 27

கோரப் பனியாற் புலர்வளவுங்
கொடுகிப் பதைத்துச் சிறுகாலைக்
கூர்த்த வலகாற் சிறகுளருங்
குருமா நிறத்துச் சிறுகுருகு
தீரக் குளிர்ந்து கண்ணுறங்கா
திரங்கிச் சிலம்புஞ் சிறுபார்ப்பைச்
செந்தா மரைப்பூம் பொதியவிழுஞ்
செவ்வி பார்த்து மீதிருத்திச்
சாரத் தோன்று மிளவெயிலிற்
றகுமா தரவாற் றழீஇயணைத்துச்
சலியாத் தாய்மை நீராட்டித்
தன்சீர் மொழியாற் றாலாட்டுந்

தாரக் குளஞ்சேர் மாவைவளர்
தலைவா தாலோ தாலேலோ
தமிழார் மாவைத் தலம்புரிந்த
தவமே தாலோ தாலேலோ. 28

வேறு

காவிற் கவினுறு மலரிற் கனியிற்
களிமா மயிலழகிற்
கருமா முகிலிற் கண்ணொளிர் மின்னிற்
கார்பொழி கனமழையில்
வாவிப் பொலிவில் வனமரை மலரில்
வார்வுறு செந்தேனில்
வாழைப் புதலில் வளர்வுறு பயிரில்
வளர்கொடி வெற்றிலையில்
கோவில் திருவல கிடுமவர் கையிற்
கும்பிடு மவர்தலையிற்
கோமய மெழுகிய தரையில் அதுபுரி
கோதையர் முகவொளியில்
மாவுற் றகமகிழ் மாவைத் தலமணி
தாலோ தாலேலோ
மாவைப் பெனநிகழ் மாவைத் தவமணி
தாலோ தாலேலோ. 29

வேறு

தொட்டி லிழிந்து தவழ்ந்திரு தாண்மலர்
சோர்வுற நோவாமே
சோதி முகத்து வியர்த்துளி சூழ்ந்துள
சுடரொளி மங்காமே
கட்டு படித்தல மீதி னுறைத்திரு
கைத்தளிர் கன்றாமே
கரவுறு மவர்சிலர் கண்ணி லெதிர்ந்தொரு
கண்ணூ றடையாமே
பட்டுடல் புழுதி படிந்து நலங்கிளர்
பவுணொளி மங்காமே
பார்வதி யம்மை பராபரன் பூசனை
பங்க முறுத்தாமே

மட்டுற வண்டொளிர் மாவையி லருமணி
தாலோ தாலேலோ
மருவுற வடியவர் மனமகிழ் குருமணி
தாலோ தாலேலோ. 30

நித்திய பூசனை நெறியிறை தவறினு
நெஞ்சு பொறுக்ககிலார்
நீணில மெய்த விழுந்து க்ஷமித்திட
நேர்ந்திடு மறையவர்தாம்
நித்தமு நீர்முழு கிப்புனல் மாற்றினர்
நீர்ப்பசை யாடையொடும்
நியமமு றத்திரு நீற்றணி புண்டர
நீள்குறி நின்றொளிருஞ்
சத்திய தரிசன சால்புறு சிந்தைகொள்
சங்கற் பம்வழுவார்
தர்ப்பையு மலரு மெடுத்தணி நின்பணி
சார்வுற வந்தனர்காண்
மத்தியு முடிவொடு முதலு நிலாயவ
தாலோ தாலேலோ
மருவுற வடியவர் மனமகிழ் குருமணி
தாலோ தாலேலோ. 31

**வேறு**

விண்ணிற் றுளிக்கும் புகர்முகிலின்
விரைவுற் றணையும் முழுமதிபோல்
விம்மிப் பொருமி யழுதுகண்ணீர்
விரவி வதனம் மலங்காமல்
எண்ணற் கரிதா மம்முகிலின்
எழுந்து துடிக்கும் மின்னலென
இனிமைக் குதலைச் சாறொழுக்கு
மிதழின் கடையுந் துடிக்காமல்
பண்ணிற் பயிலும் யாழிசைதான்
பகையார் நரம்பிற் பட்டிடுமா
பண்பார் மழலைக் குரல்கம்மிப்
பரிவாம் ஓசை விளைக்காமல்
மண்ணிற் கினிய மாவைநகர்
மாண்பே தாலோ தாலேலோ

வளர்செந் தமிழ்சேர் மாவையுமை
மகனே தாலோ தாலேலோ. 32

ஞானத் திரோத மாகவளர்
நாசக் கருமா மலஞ்சிதைந்து
நாடிக் கழற்கீ ழுறுமவரை
நலமார் துரியத் தணையடுத்த
மோனத் தொட்டி லுறவேற்றி
முழுத்த கருணைப் பொழிவான
முடிவில் பரமா னந்தசுக
மூழ்கித் திளைக்கத் தாலாட்டும்
மானக் கருணை மாமுகிலே
மண்ணும் விண்ணும் மருவிவளர்
வகைவே றியோனிக் குழவியெலாம்
மகிழ்விற் றிளைத்துத் தாலாட
வானக் கருணைப் பெருஞ்செல்வ
வளனே தாலோ தாலேலோ
வளர்செந் தமிழ்சேர் மாவையுமை
மகனே தாலோ தாலேலோ. 33

## 4. சப்பாணிப் பருவம்

செக்கச் செவேலெனத் திசைதிசை யலைந்தோடு
சேயவொளி வட்ட நடுவுட்
செந்தா மரைப்பாத செவ்விவிர லகவிதழ்
செறிந்தபத் மாச னத்துப்
பக்கம் படுத்தணுகு பைந்தூவி யணைமிசைப்
பாங்குற விருந்து கொஞ்சும்
பச்சைப் பசுங்குதலை பனிமழலை பொழிவினுட்
பற்பாதி முத்து மொளிரப்
பொக்கம் புகாவன்பு பொலியவரு தாயர்மகிழ்
புண்ணியப் பொலிவு தோற்றிப்
பொற்றண்டை யரைஞாண் பொலங்குழை நலங்கொள்முடி
பத்மரா கப்ப வித்ரம்
'தக்கத் தகவ்'வெனொளி சார்பிள்ளை யமுதமே
சப்பாணி கொட்டி யருளே

சரவண பவானந்த சண்முக சிவானந்த
சப்பாணி கொட்டி யருளே. 34

அன்றாதி சிவனருளு பொறிவடிவி லாறாகி
யணிசர வணத்தி லொன்றா
யணையுமறு கார்த்திகைப் பெண்கள்முன மாறாகி
யம்மைவர மீள வொன்றாய்
ஒன்றாகி யொன்றினிற் பலவாமொ ராடலுன்
னுடனுற் பவித்த வழகே
உலகுயி ரனந்தத்து மவ்வவற் றியல்பாகி
யூடுநிறை யொருபொ ருள்நீ
யென்றாலு னருள்வர விருந்தவவ் வண்ணங்க
ளேழையே முணர வெளிதோ
விலங்குமுயி ரத்தனையு மீன்றுற வளர்த்துவரு
மீடில்பைஞ் சிசுவொ வொன்றுந்
தன்றாய ருள்ளமகிழ் சப்பாணி கொட்டநீ
சப்பாணி கொட்டி யருளே
சரவண பவானந்த சண்முக சிவானந்த
சப்பாணி கொட்டி யருளே. 35

சாரங்க பாணியருள் சார்ங்கபா ணிக்குரிசில்
சக்ரபா ணிக்கு மெட்டாத்
தானமுறு மாம்பழந் தந்திரியி சைப்பாணி
சாற்றுநா ரதன்கொ ணர்ந்து
சீரங்க மொளிரமழ லைப்பாணி யொழுகநிகழ்
திருக்குமர ரிருவர் முன்னே
சிவன்கரத் துய்த்தலுமி வுலகுவல மாகமுன்
சேருமவர் பெறுகவி தெனக்
கூரங்கு சங்கொள்மோ தகபாணி குரவரைக்
குறுவலம் வந்து வாங்கக்
கோபத்தி னதுபொறாய் குரவரை முனிந்துவெண்
கோவணந் தண்டு தாங்கித்
தாரங்க மொளிரநிகழ் தண்டபா ணிக்குழவி
சப்பாணி கொட்டி யருளே
சரவண பவானந்த சண்முக சிவானந்த
சப்பாணி கொட்டி யருளே. 36

வெள்ளிவா ரந்தொறு மிகுந்துநின் னாலய
விளங்குமுன் மண்ட பத்து
விளக்கொளி தழைத்திடு மருங்குநீ ளிருசாரல்
மேவுற விருந்து நின்சீ
ருள்ளுலாம் பனிருதிரு முறையோதி யோவற
வுயர்திருப் புகழி சைத்தே
யுண்மையுள் ளொளிர்கந்த ரனுபூதி சொலவுன்னி
யுலகிதழி பொழுது மழியாக்
கள்ளமக லநிலத் தியல்பொடு கனிந்துவளர்
காண்வரு கமக்காரர் தாங்
கணியமொ டெடுத்தோச்சு கைத்தாள வொலியொடவர்
கனிகுதலை மதலைய ரிடுந்
தள்ளலா காதவிசை தழுவுகைப் பாணியொடு
சப்பாணி கொட்டி யருளே
சரவண பவானந்த சண்முக சிவானந்த
சப்பாணி கொட்டி யருளே. 37

முட்டப் பரந்துவான் முகடுற நிமிர்ந்துவிண்
மீன்றொகுதி யொப்ப மலரும்
முதிர்பொருக் குறுகோல முதுமைவடி வாயுறும்
மோட்டரை யிரும்பு ளிக்கண்
விட்டுப் பரந்துள விளர்தோ றுறத்துற்று
விதைசதை நரம்பி னொடுதோல்
வெவ்வே றறத்துன்றி யொன்றான காய்தனில்
விளைவுற முதிர்ந்து கனியாய்த்
தட்டதநு கரணமொடு புவனபோ கமுமாதி
தத்துவச் செறிவு முழுதுந்
தம்மிற் கழன்றவை தனக்குவே றாகவாழ்
தனித்துறவி நிலைமை தாங்கிச்
'சட்டச் சடச்'சென் றுதிர்மாவை வருமுருக
சப்பாணி கொட்டி யருளே
சரவண பவானந்த சண்முக சிவானந்த
சப்பாணி கொட்டி யருளே. 38

ஊனமலி யுலகவாழ் வுல்லாச முத்தியென்
னுலகாய தன்னிற் கமே
வுயிரான பஞ்சகந் தக்கூட் டொருங்கழிதல்
முத்தியென் புத்த னிற்க

ஆனபிர கிருதிமுடி வணைபுருட ணாதலே
யழிவிலா முத்தி யென்கோ
ளாதரி விவர்த்தமா யாவாதி யவனிற்க
வலர்வித்தை முத்தி யதுவென்
பானவனு நிற்கவுயர் கலைகால நாதங்கள்
பகருமவர் நிற்க விவையோ
பாசபசு ஞானவீண் பகடிகள் நானுளன்
பதிஞான வீடு மொருநான்
றானென்ன மார்தட்டு சாயுச்ய நாயகா
சப்பாணி கொட்டி யருளே
சரவண பவானந்த சண்முக சிவானந்த
சப்பாணி கொட்டி யருளே. 39

ஒருபுடை யிளம்வள்ளி வெண்கொடி துவண்டேற
வொளிர்வெற்றி லைக்கொடி யுமொன்
றொருபுடை படர்ந்தேற வொய்யார மாகநிமிர்
வுற்றில கிளங்க தலிகண்
டிருபுடையு மிளநலா ரெறுழ்வலித் தோடமுவ
வின்பமர்ந் தருளு செவ்வே
ளெம்பிரா னெமையருள வெளிவந்த பாங்கிதென்
றிறும்பூ தடைந்து வாய்மைத்
திருவுடைய கிருஷிவினை வேளாள ரவைதரூஉந்
தீங்கனி கிழங்கு மிலையுந்
தீண்டாது பக்தியொடு தெய்வவர்ப் பணமாக்கு
செம்மையொ டிலங்கு சைவத்
தருமநிகழ் மாவையிற் சார்ந்துவளர் நங்குமர
சப்பாணி கொட்டி யருளே
சரவண பவானந்த சண்முக சிவானந்த
சப்பாணி கொட்டி யருளே. 40

கட்டுகெள பீனமூ டொளிர்வருங் காவியுடை
கச்சையுங் கட்டி வடிவிற்
காணவுறு புண்டரங் கண்ணொளி விளக்கமாக்
கனத்தமணி ருத்தி ராக்கம்
பட்டுட லசைந்துறப் படரொளி முகத்துறப்
பழனியாண் டவர்கள் கோலப்
பச்சிளம் பாலரோர் பலர்கூடி மேவரப்
பாலகா வடியெ டுத்துக்

கொட்டுமே ளம்முனுந் தட்டுதா ளம்பினுங்
குதுகலச் சுதியெ ழுப்பக்
குதிகுதித் தெழுபாத கதிவேக வபிநயக்
கோலநிகழ் கூத்தி யற்றுந்
தட்டிலா வொத்திசை சலிக்காம லெந்தைநீ
சப்பாணி கொட்டி யருளே
சரவண பவானந்த சண்முக சிவானந்த
சப்பாணி கொட்டி யருளே. 41

### வேறு

சிட்டி புரிந்தல கிலவுயி ருனதடி
சேர்க்கு மமைப்புளவாந்
தெய்விக தநுகர ணாதிக ளுறவருள்
திருவிளை யாடல்கொலோ
கிட்டி யணைந்துன தருளுறு மநுபவ
கேண்மையி லாமுதியோன்
கேழ்கிளர் கயிலைய ணைந்திடு மெல்லை
கிடைத்தவன் பேர்விளியா
ஒட்டி யுலர்ந்துட லோய முதிர்ந்தினு
மோமுறு பொருளறியா
யொருசதுர் வேதமு ணர்ந்துள தெங்ஙன
மோதுக எனவுறுமிக்
குட்டி நெடுஞ்சிறை பிரமனை யிட்டவ
கொட்டுக சப்பாணி
கூரிலை வேல்கொடு சூர்பகை வென்றவ
கொட்டுக சப்பாணி. 42

இட்ட முறத்த னிராயிர பாணிக
ளெட்டுறு மட்டுமுறு
மீடில் குறட்சிறு பூதம ணைத்து
மிமைப்பினில் வாயிலிடா
அட்ட மதர்ப்பொடு மணைவுறு மரிமுக
னாயிர மாசிரமு
மத்தனை கணைகளி லற்று விழுந்திட
வகமுறு பூதரெலாம்
முட்ட விரைந்து செவித்துளை வாயொடு
மூக்கு வழிப்படரா

முன்னுற மொய்த்து முகிழ்த்திடு கூத்திசை
முடிவறு கைப்பாணி
கெட்ட நெடுங்கள மட்டு முடித்தவ்
கொட்டுக சப்பாணி
சூரிலை வேல்கொடு சூர்பகை வென்றவ
கொட்டுக சப்பாணி. 43

கோடு வியன்துடி கொட்டிட ரணபறை
கொட்டிட வெங்குமெழுங்
கோரநி சாசரர் நெஞ்ச மதிர்பறை
கொட்டிட வற்புதமுற்
றாடு மகப்பதி யரியய னாதிய
ரங்கைகள் கொட்டிடமே
வசுரர் மகேந்திர புரிமுழு தவலமொ
டாவலங் கொட்டிடமேற்
சேடு மிகுந்துள சேன நிரந்துறு
சிறையிணை கொட்டிடநேர்
சேணுறு மந்தர துந்துபி கொட்டிடச்
சிறுகையி லயிலேந்திக்
கூடு மருட்செரு வாடல் குறித்தவ
கொட்டுக சப்பாணி
சூரிலை வேல்கொடு சூர்பகை வென்றவ
கொட்டுக சப்பாணி. 44

## 5. முத்தப் பருவம்

கத்துந் தரங்க மெடுத்தெறியக்
கரைசேர் தாழை மடல்வெண்பூக்
கையேற் றணைக்கு மரவணைப்பிற்
கவல்தீர்ந் தமர்ந்து வயிறுளைந்த
நத்தும் நளிர்மா கடற்பரப்பில்
நாட்கா லைக்கே பிரிந்தகன்று
நயனில் குடகாற் றெழுந்தலைக்க
நடுக்கு மாலைப் பொழுதாயும்
மெத்துங் கவற்சி யுறத்தாழ்ந்து
மீளா வன்பர் தமைநினைந்து
விரலாற் கிளைத்து மணலுளரு
மென்மா மடவார் மழைக்கண்ணும்

முத்தங் கொழிக்கும் மாவைதொழும்
முதல்வா முத்தந் தருகவே
மும்மைத் தமிழ்சேர் மாவைவளர்
முருகா முத்தந் தருகவே. 45

நாவார் தமிழின் சுவைநயந்து
நக்கீ ரன்நூ னயம்வியந்து
ஞாலம் விளங்க நீமுன்னாள்
நலனா ராய்ந்து வளம்படுத்த
தேவா ரகநூற் பொருளமைதி
செயலிற் படுத்து நலம்வாய்ப்பத்
தெய்வ முனிவன் நாரதன்சொல்
செவியேற் றருளுந் திறம்விரும்பிக்
காவார் வேட்டைத் துறையணைந்து
கன்னி வேட்கைக் கடல்கலங்கக்
காமக் கலமுய்த் தருகுறீஇக்
களவில் வள்ளி நலமருவி
மூவாக் காதல் முத்தமருள்
முதல்வா முத்தந் தருகவே
மும்மைத் தமிழ்சேர் மாவைவளர்
முருகா முத்தந் தருகவே. 46

சுற்றுங் கடலார் சுரிவளையின்
சுடர்முத் தென்ப மிகவுண்டு
சொல்லா ரிப்பி யகட்டுவிளை
தூமா முத்தும் பலவுண்டு
மற்றிம் முத்த மானவெலாம்
மாயா சாலப் பொருள்வடிவாய்
மயக்கிக் கழியு மவ்வளவே
வாழ்வாம் வாழ்வு தரவிருக்கும்
பற்றும் பற்றின் மையுங்கடந்த
பரமன் கருணைத் திருவுருவாம்
பண்பார் முத்தீ தெனப்போற்றிப்
பாராட் டெடுத்துப் பாருலகம்
முற்றும் புகழுஞ் சரவணத்து
முத்தே முத்தந் தருகவே
மும்மைத் தமிழ்சேர் மாவைவளர்
முருகா முத்தந் தருகவே. 47

கொத்துங் குழலுஞ் சுமந்திளைத்த
கொம்மைக் குவட்டுக் குவிமுலையார்
குளிர்வெண் ணிலவா ரரமியத்துக்
கொழுநர் மருங்கிற் குதலைநலம்
மெத்துங் காதற் களரியினும்
மேவு மணல்வெண் முற்றத்து
மிகுமா தரவின் முதுமகளிர்
விழைவார் பேரப் பிள்ளையர்தம்
எத்தும் இணையில் இளவாய்தம்
முதுவாய் முத்துஞ் செவ்வியினும்
எங்கே இன்ன மொன்றென்னு
மெழிலா ரொலிநே ரொத்திசைக்கும்
முத்தச் செழிப்பின் மிகுமாவை
மூர்த்தி முத்தந் தருகவே
மும்மைத் தமிழ்சேர் மாவைவளர்
முருகா முத்தந் தருகவே. 48

சித்தம் முழுதுஞ் சிவம்பெருக்குஞ்
செல்வா நின்னா ரருள்விழைவார்
சீரார் காலை மாலையெலாந்
தெய்வத் திருமுன் னிலைத்தாழ்ந்து
தத்தம் பரிவாற் றமிழ்பாடித்
தமையும் மறந்த சிவயோகச்
சார்பே சார்பாய்ச் சலிப்பின்றித்
தழைத்துப் பொங்கு மாவேகப்
பத்திக் கொத்து மலர்ந்தொளிரப்
பரமா னந்தத் தேன்பிலிற்றிப்
பண்பார் புளகப் பயிர்வளர்க்கும்
பாஷ்பங் கசிந்து பனித்துருள்கண்
முத்தஞ் சொரியும் மாவைநல
முதலே முத்தந் தருகவே
மும்மைத் தமிழ்சேர் மாவைவளர்
முருகா முத்தந் தருகவே. 49

தொன்மைத் தமிழ்ச்செங் கருவூலத்
தொல்காப் பியநூல் துருதுருவித்
துப்புத் துலக்கித் தூவறிஞர்
சுவைக்கப் படைத்துத் தாஞ்சுவைக்கும்

புன்னைக் கணேசர் நின்கழற்கீழ்ப்
பொருந்தும் பற்றே ஞானமெனும்
போதம் மலர்ந்து பொற்பூறிப்
பொலிவா ருள்ளத் தொளிசிறந்து
பன்னற் கருநின் படைவீட்டுப்
பழைய விளையாட் டெனுமனைத்தும்
பண்பார் மாவைப் பதிக்கேற்றிப்
படைக்கும் பதிகச் செவ்வியிசை
முன்னர்க் கேட்கும் நன்மாவை
முத்தே முத்தந் தருகவே
மும்மைத் தமிழ்சேர் மாவைவளர்
முருகா முத்தந் தருகவே. 50

வேறு

தத்துகடல் தவழ்வுறுந் நத்தீனு முத்தினஞ்
சாருமொரு கார்ப்ய தோஷந்
தகுமிப்பி முத்தென்னி லௌச்சிஷ்டம் வயலுறுஞ்
சாலிமுத் தம்மார்த்திகம்
மெத்துகழை முத்தமோ வன்னியம் வேழத்து
மிகுமுத்து மிருக தோஷம்
மேகமுறு முத்தமும் நீரசம தாதலின்
வேண்டிலோ மவைகிடக்க
முத்தியருள் முத்தநின் முத்தமே யாமாறு
மூதறிஞ ரோது நீதி
முருகலர் குழல்வள்ளி தெய்வயா னைச்செய்தி
முரசறைந் தோத நிற்கும்
சுத்தமணி மாவைவளர் தூயமணி நின்னிதழ்த்
துகிரில்விளை முத்த மருளே
தோகைமயில் மீதுறும் வாகைவடி வேலநின்
துகிரில்விளை முத்த மருளே. 51

தொல்லுலகி லூனினுக் கூன்மாற் றெனப்புகல்
தொன்மொழி யிருந்த தைய
சொல்லுபுகழ் நின்வயின் முத்துக்கு முத்தமே
தோன்றுமொரு மாற்றா னவா
மல்லுதவு தோளுந்தை மாமுடி மதிப்பிள்ளை
மாடுற்ற காத லால்நீ

மண்புரண் டன்றழுத மாறாத வழுகைக்கு
மலைமகள் பரிந்த ணைந்து
புல்லுமொரு மகிழ்வினிற் புளகமுற மோவாய்
பொருந்தமே லுற்றெ டுத்துப்
புதுமலர் துளித்தெனப் பொலுபொலென் கண்முத்தம்
வாய்முத்த மிட்டு மாற்றச்
சொல்லரிய மகிழ்வுறுஞ் சோதியொரு நின்னிதழ்த்
துகிரில்விளை முத்த மருளே
தோகைமயில் மீதுறும் வாகைவடி வேலநின்
துகிரில்விளை முத்த மருளே. 52

பாயவொளி மரகதப் பவளத்தி னணியுறப்
பருத்துப் பசந்து விம்மிப்
பாவையர் கழுத்தினைப் பரிகசித் தெங்குநிகழ்
பைங்கமு குதிர்த்த முத்தந்
தேயமுறு தெங்கிளம் பாளைமுத் தத்தினொடு
சேரத் தொகுத்து வாரிச்
செங்காவி மலர்வுறுஞ் சிறுமுகத் தாமரைச்
செழுமுத்த வியர்தொ குக்கும்
ஆயமுறு சிறுமகளி ராராய்ந்து வெவ்வே
றமைத்தவட நிரைக ளன்னா
ரணிமுறுவல் நிரையினொடு மாறாட வாடவ
ரசந்துபே ராது நிற்குந்
தூயவொளி மாவையிற் சுடர்ஞான சோதிநின்
துகிரில்விளை முத்த மருளே
தோகைமயில் மீதுறும் வாகைவடி வேலநின்
துகிரில்விளை முத்த மருளே. 53

**வேறு**

எழுதரு மறைமொழி யிருநில வடியவ
ரின்புறு மணிமந்த்ரம்
இறையவ னருளினொ டிறைவியி னருளுமு
னியைவுறு மிரகஸ்யம்
பழுதறு சரவண பவவெனு மொருநின
பண்புறு நாமசெபம்
பழகிய நியதியி லமுதுறு மொருசுவை
பற்றிய பற்றாலே

எழுமையு நினதடி யலபிற வறிகில
ரேத்திடு மெய்யன்பர்
இகமொடு பரமொரு பெருமையி னிலவுற
வெய்திடு பெருவாழ்வு
முழுமையு முனதரு ளெனவரு மருமணி
முத்தம ளித்தருளே
முருகலர் சரவண மிசைவரு மொருமணி
முத்தம ளித்தருளே. 54

பரவரு மறுமுக நிரையுட னருள்பொழி
பத்தொ டிரண்டுவிழி
பலபல படைகளு நிலவிய வழகொளிர்
பன்னிரு திருமொய்ம்பு
கரவறு மனசினி லொளியுற நிலவுக
டம்பணி மணிமார்பு
கனவினு நனவினு நினைவினி லுறநிகழ்
கண்கவர் சுடர்நெடுவேல்
இரவொடு பகலறு மநுபவ நிலையின
ரிருதய குகையூடே
இளநல வெழில்தர வியல்தக ராலய
மெய்திடு பெருவாழ்வே
முரவரி யெனவரு ஹரிதிரு மருகவொர்
முத்தம ளித்தருளே
முருகலர் சரவண மிசைவரு மொருமணி
முத்தம ளித்தருளே. 55

## 6. வாரானைப் பருவம்

பல்லா யிரத்துப் பலகோடிப்
பழுதில் கற்பம் பாருலகிற்
பழுத்துச் செறித்த வநுபவத்தீம்
பயனே பயனார் மெய்யறிஞர்
சொல்லா லுரைக்க வாய்சோர்ந்து
சும்மா விருந்து சுகித்துணர்ந்து
சொக்கிச் சுவைத்துத் தேனித்த
சுவையே சுவைஞா னாமிர்தங்
கல்லா னிழற்கீ ழறமுரைத்த
கடவுட் குரைக்குங் கலையரசே

கம்பத் திளைய னாய்த்தோன்றிக்
கருணை யருண கிரிக்கருளுஞ்
செல்லார் பொழில்சூ ழருணகிரிச்
சிவமே வருக வருகவே
சிவமே விளைக்குந் திறன்மாவைத்
திருவே வருக வருகவே. 56

பெருந்தே னிரைக்கு நறுங்கொன்றைப்
பிரானார் செவிக்கே பிரணவத்துப்
பேசாப் பொருள்பே சியகுழவிப்
பெருமான் வருக! பெருந்தவத்தோர்
விருந்தே வருக! நகுலமுனி
விரூப முகமும் மாருதப்ர
வீக வல்லி மாமுகமும்
விலகாப் பெருநோய் விலக்குமலை
மருந்தே வருக! மலைமடந்தை
மனைமாண் பினுக்கு நன்கலமாய்
வையம் வாழ வாழ்ந்தபெரு
வாழ்வே வருக! வாழ்வறியாத்
திருந்தா வசுரர் செருக்கொழித்த
தேவே வருக! வருகவே!!
சிவமே விளைக்குந் திறன்மாவைத்
திருவே வருக! வருகவே!! 57

பூவார்ந் திலகு மியாழ்ப்பாணப்
பொருவி லூர்ப்பேர் பலதொகுத்துப்
பொற்பார் கவிதைக் கற்பனைக்குட்
புகுத்திப் புலமைப் புதிர்விளைப்போன்
மூவாக் கலைமா முகில்சுன்னை
முத்துக் குமாரக் கவிராயர்
முகிழ்செம் புலமை முருகுயிர்க்க
முன்னின் றலர்த்துங் கவிதைமலர்
நாவார் சங்கி யாதைமகிழ்
நாமாந் தரிதை யுள்ளூறுத்த
நவமாம் பிரகே ளிகைச்செய்யுள்
ஞால முய்ய நயந்தருளுந்
தேவா தேவர்க் கிதம்புரிந்த
செல்வா வருக வருகவே

சிவமே விளைக்குந் திறன்மாவைத்
திருவே வருக வருகவே. 58

பாய வொளிநேர் கண்கவரப்
பழுத்துச் சிலிர்த்துப் பரிமளிக்கும்
பன்மா நிறமுக் கனிபரப்பிப்
பத்தி வாசங் கமகமக்கச்
சேய கதிர்ச்செந் தினையிடியிற்
செந்தேன் பில்கப் பிசைபிசைந்து
சீலத் திருக்கார்த் திகைத்திருநாட்
சிறுமா விளக்கி னகல்கோலி
நேய மணக்க நெய்மணக்க
நினைவு முழுதுஞ் சிவம்மணக்க
நேர்ந்து கொளுத்துந் தீச்சுடரின்
நிறைவா சனைபோய்த் திசைமணக்கத்
தேயம் புகழ்கோ யிற்கடவைத்
தேவே வருக வருகவே
சிவமே விளைக்குந் திறன்மாவைத்
திருவே வருக வருகவே. 59

கன்மக் காட்டின் மாயைவலைக்
குள்ளே கட்டுண் டலைந்துலைந்து
கதுவும் புலநாய்க் குலமீர்ப்பக்
கலங்கும் புத்தி யெனும்பொறியால்
நின்னைக் காண்டும் நினையறிதும்
நேயம் புரிதும் நெடிதுணர்தும்
நின்னா ரருளின் திறம்புகழ்தும்
நெகிழ்துங் குழைதும் மகிழ்துமெனப்
பன்னற் கரிய பாசாங்கிற்
பயில்வோ மல்லோம் பரிந்தொருநீ
பண்பா னின்னைத் தருமவதி
பார்த்துப் பயந்து பணிகுதுமால்
தென்னம் பொழில்சூழ் மாவைவளர்
தேவே வருக வருகவே
சிவமே விளைக்குந் திறன்மாவைத்
திருவே வருக வருகவே. 60

### வேறு

ஒருமையுட னிருதிறமு முக்குற்ற நீக்கியுள்
ளூறுகரண நான்கொ டுக்கி
யோரைந்து நின்மலா வத்தையினு மொன்றிநின்
றுணரா றெழுத்து முன்னி
அருமையுற வெழுபவக் கடலுஞ் சுவற்றிநல்
லட்டாங்க யோக முடிவில்
அணைநவ சமாதிக்கு ளானதச காரியத்
தடைவுபட வோர்ந்தி ருக்கும்
பெருமையுறு முனிவரர்ப் பேணுமொரு கருணையிற்
பிரணவத் துள்ளு றொளியாய்ப்
பேசரிய வானந்த மொருவடிவு கொண்டெனப்
பெட்புற வணைந்த ணைக்குங்
கருதரிய திருமேனி காண்பினிய மாவைவளர்
கந்தவே ளேவ ருகவே
கரியகட லின்னடுப் பெரியசூர் மாய்த்திட்ட
கருணைவே ளேவ ருகவே. 61

வெள்ளமுறு பிறவிநெறி வேதனைக் கடலின்
வெறுப்புற் றலுத்து வர்த்து
மேவுமோ ரிறவாப் பெருந்தவத் தாலுனது
மெய்யுணர்ந் தணையு மடியர்
உள்ளமுறு குறைகளு முலப்பிலா தனபோ
யுடற்குறை யனைத்து நீங்க
ஊமரும் வாய்ப்பேச உழல்குருடர் பார்வையுற
உன்மத்தர் பித்த மகலப்
பிள்ளைமகிழ் நல்வரம் பேருலக மேழினும்
பெருகுற வளித்து மேலைப்
பெரியபெரு மாற்கும் பிராட்டிக்கு மேற்றமருள்
பிள்ளைநா யகப்பி ரமமே
கள்ளமலி கலியுகங் கண்கண்ட தெய்வமே
கந்தவே ளேவ ருகவே
கரியகட லின்னடுப் பெரியசூர் மாய்த்திட்ட
கருணைவே ளேவ ருகவே. 62

சென்னிமதி தவழ்வுறுஞ் சிவனருளு கலையெலாஞ்
செந்தமி ழுகத்தொ டுக்கம்

தீந்தமிழ்ப் பண்பா டெனத்திகழு மவ்வெலாஞ்
சேரவ்வை பாலொ டுக்கம்
தன்னிகர் வருமௌவை சால்புலமை வளமெலாந்
தத்வஞா னத்தொ டுக்கம்
தத்வஞா னத்தெளிவு தழையவொளிர் பொற்பெலாஞ்
சண்முக தயங்கு மொருநின்
மின்னிகர் பெரும்பிரபை வீசியொளிர் மெய்ஞ்ஞான
வேல்வடிவி னுள்ளொ டுக்கம்
வேலின்றி நீயில்லை நீயின்றி வினையரேம்
மேவுகதி வேறில் லைகாண்
கன்னிமதில் சூழ்வரக் காண்பினிய மாவைவளர்
கந்தவே ளேவ ருகவே
கரியகட லின்னடுப் பெரியசூர் மாய்த்திட்ட
கருணைவே ளேவ ருகவே. 63

மாயைதான் சடமேனு மாறிலுன் சந்நிதி
மருங்கினது சேட்டிக்குமேல்
மண்கொளா விண்கொளா மற்றதன் சூழ்ச்சிவகை
மாநிலங் கண்டுய்ந்தவா!
ஆயிரத் தெட்டண்ட மளவிலுறு சூரனிவ்
வகிலாண்ட முழுதுமாகி
அசுத்தசுத் தாசுத்த சுத்தமா மாயைதொறு
மங்கங்கு விரவவூக்கி
மாயமுறு மண்ணாகி மருவுமொரு நீராகி
மலையுமனல் காற்றுமாகி
மதிப்பரிய விருளாகி யொளியாகி மாவாகு
மற்றவன் மாயமுற்றுங்
காயுமொரு வேல்வாங்கி மயில்சேவ லாக்கியருள்
கந்தவே ளேவ ருகவே
கரியகட லின்னடுப் பெரியசூர் மாய்த்திட்ட
கருணைவே ளேவ ருகவே. 64

மாமேரு நான்கென மருங்குற் றுயர்ந்தோங்கி
மதியிரவி கதிவி லக்கி
மருவுதிசை நான்கினும் மங்கலம் பொலிதரும்
வளர்கோ புரத்து ளொளிரப்
பாமேவு கந்தகிரி கயிலைமலை கதிரைமலை
பரங்குன்ற மாக வோங்கிப்

பண்டிகைக் கோபுரம் பலவேறு பயிறரப்
பாருலகு பொன்னு லகெனத்
தேமேவு கஞ்சத் திருப்பவள் விருப்புறத்
திரவியக் குவைதொ குத்துத்
திருப்பணி விருப்பிற் கதித்தெழும் மெய்யன்பர்
செம்பொனா லயஞ்ச மைக்கக்
காமேவு மாவையிற் கருணைவடி வாகிவளர்
கந்தவே ளேவ ருகவே
கரியகட லின்னடுப் பெரியசூர் மாய்த்திட்ட
கருணைவே ளேவ ருகவே. 65

முற்றிவிளை முளரியான் முன்செய்து முதுதந்தை
முராரிக்கு முதுசொமான
முதிர்வனப் பரப்பெலா முருகநீ வில்லேந்தி
முனைவேட்டை யாடுகளமாம்
பற்றினொடு நினைவேண்டு பார்குலவு முயிரெலாம்
பணிமொழித் திருவள்ளியாம்
பனிபடுந் நெடுவரைக் குலமெலா நின்புகழ்ப்
பாங்குடைய படைவீடுகள்
சுற்றிவளை நாற்கடற் பரப்புநீ துணைவரொடு
துள்ளிக் குதித்தலைக்குந்
தூமணற் சிறுகேணி தோன்றநிகழ் வானவெளி
தோகைவை யாளிவீதி
கற்பமுறு மளியமுயிர் நின்கழற் காணிக்கை
கந்தவே ளேவ ருகவே
கரியகட லின்னடுப் பெரியசூர் மாய்த்திட்ட
கருணைவே ளேவ ருகவே. 66

## 7. அம்புலிப் பருவம்

சிவபரம் பொருள்தமது சிரமிசைக் கோடலாற்
செம்மான் மருங்கு றுதலாற்
றிருமருவு கார்த்திகைப் பெருநேய முறுதலாற்
றேவவுல காண்டு றுதலால்
நவமான வமிர்தொழுக நானில மளித்தலால்
நங்கையர் மனங்க வர்தலால்
நாளொன்று மேனியும் பொழுதொன்று வண்ணமும்
நானிலங் காண வுறலால்

தவநெறிப் பெருவாழ்வு சாரவரு நம்பரன்
தன்னிக ரெனக்க ருதியோ
சந்தமலி செந்தா மரைப்பொலி திருக்கைபுரி
சைகையா லுனைய ழைத்தான்
அவமேது மிலையெங்க ளாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 67

அண்டத் துறைந்தபடி பிண்டத்து முறைதலா
லாகாச மேவி வரலால்
அசுரர் தமக்கொரு குலப்பகைமை மேவலா
லராப்பகையு மொன்றுண் மையாற்
கண்டங் கறுத்தமர ரெண்டங்கு மொருபரன்
கட்பொறி யெனப்பெ றுதலாற்
கலையா னிரம்பியொளிர் காட்சியத னாற்றெய்வ
கங்கைநண் புறுசேர்க் கையால்
துண்டங்கொள் கார்மயி லினைப்பொருவு தூமுகில்
தோன்றமீ தூர்ந்து வரலால்
தோன்றலிவன் மதியநீ தன்னொப்பை யென்பது
துணிந்துகொல் லுனைய ழைத்தான்
அண்டங் கடந்தபொரு ளாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 68

நீரோடு கார்முகில் சுருள்முகில் புகர்முகில்
நீலமுகில் நிகர்வெண்முகில்
நிரையோட வங்கவற் றூடுநீ தவழ்செவ்வி
நிலமிசை யிருந்து நோக்கி
ஊரோடு மகிழ்வா லொளித்துவிளை யாடுதியெ
னொருபெருங் கற்ப னையமைத்
தொப்பனை யியற்றுதன் தாயர்முன் றானையு
ளொளித்துவிளை யாடு மொருதன்
சீரோடு மொப்புமை குறித்துனை யழைத்தனன்
செல்வன் குழந்தை யையன்
சிற்பமுறு கற்பனை சிறந்தொளிர் சங்கநற்
செந்தமிழ்ப் புலவ னுமிவன்

ஆரோடு மெண்ணலைந மாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 69

ஒப்பருமொர் புவனத்தி னோதுமோ ரண்டத்தி
னொருபுடை யிருத்தி மதிநீ
யுணர்வரிய புவனப் பெருந்தொகை யனைத்துந்த
னோருரோ மத்து டையனெஞ்
செப்பரிய சீர்த்தித் திருக்கைவடி வேலவன்
சேருநின தொளிநி லவுதான்
செவ்வே ளிவன்வதன நிலவினோ டொப்பிடின்
தேரிரவி முன்மின் மினி
எப்பரிசு நோக்கிலா னேதோவொர் கருணையா
லேமமுற் றுனைய ழைத்தான்
எந்தையிவன் தந்தைபோ லென்றுமே தன்பெருமை
யெண்ணாத கண்ணி யன்காண்
அப்பரி சுணர்ந்துநம தாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 70

நத்தங் கொளுந்துத்த நற்கட லிடைத்தோன்று
நல்லமிர்தி னோடு தோன்றும்
நண்பினால் நீபெற்ற நவவமிர்து வெறுமனே
நற்பயிர்க் குடல்வ ளர்க்குஞ்
சித்தந் திருந்திடுஞ் சீரன்பர் மெய்யுணர்
தியானச் சமாதி நிலையிற்
றித்தித் தருந்துமிவ னருளமிர்த திவலையோ
சென்றுசென் றுயிர்த ளிர்ப்ப
மெத்துபல் லூழிக்கு மேலூழி மேனில
மிசைப்பொலிந் திருக்க நல்கும்
வேறுபா டிதேனும் வேண்டுதல் கேவலம்
விளையாட்டு வேட்கை யேகாண்
அத்தன்மை தேர்ந்தெங்க ளாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 71

இரவியொளி தன்னிலோ ரேகதே சந்தன்னை
யிரவலாய்ப் பெற்று நீயு
மேதோவொ ரொளியுள்ள முதலென்றொ ளிர்தியா
லிறுமாப்பும் வேற டைதியால்
உரவுபகி ரண்டமு மொருங்கே விளக்குமிவ
னுலவாத பேரொளி யதாஅன்
றுனக்கிரவ லீந்தானு மோங்கியொளிர் கின்றதிவ
னொளியிலொரு சிறுது ளியினால்
பரவுமறை முனிவர்க்கு மெட்டாப் பராபரன்
பாரணைந் தெளியை நின்னைப்
பரிவுற வழைத்துமகி ழுருமையுங் கருதாது
பராமுகம் பண்ணல் கண்டாய்
அரவமிசை மயில்கடவு மாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 72

மேற்றிசைக் குண்டர்கள் மெய்யே யுனைப்பற்ற
மேவுமிந் நாள்க ளெல்லாம்
மெத்துவிஞ் ஞானத்து விந்தைப் புணர்ப்பினால்
விண்ணேறு பூட்னி கங்கள்
நாற்றிசை யினுந்நூக்கி நம்மதே சந்த்ரனென
நாளுநாட் போட்டி முற்றி
நஞ்சொழு கணுக்குண்டு கொண்டுன்னை நாடியொரு
நாசவமர் மூள நின்றார்
வேற்றுமைகொ ளிவர்தமணு வாற்றல்பரி சோதனையில்
வெந்துநீ மாளு தலுமாம்
மேவிவன் தனையுறின் மெய்ப்பாது காப்புமாம்
மேலைநெறி வீடு முளதாம்
ஆற்றவு முணர்ந்தெங்க ளாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 73

காரசுர னமுதுணக் கண்சாடை யிட்டுநீ
காட்டிக் கொடுத்த தோஷங்
கரவில்குரு மனையைக் கலந்திட்ட தோஷமொடு
கையேற்ற கன்னி யர்க்குள்

ஏருடைய விருபர்பாற் கண்ணோடி யேனையரை
யின்னற் படுத்த தோஷம்
இத்தகைய தோஷங்க ளெங்ஙன் தொலைப்பைநீ
யின்பசுக நிலைய மாகி
மாருதப் புரவல்லி மாணகுல முனியினையர்
மாறாத தோஷ மாற்றும்
மாவையிதி னணைதியேல் வள்ளலிவன் நண்பினால்
மாறுமுன் தோஷ முழுதும்
ஆருமுனை மெச்சுவர்ந மாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 74

கதித்துற விரைந்துநீ கையோடு பிடிபட்ட
கள்வனென நையு வடருங்
காரரா விங்கிவன் கலாபமயில் கண்ணெதிர்க்
காணவு நிலாதொ டுங்குஞ்
சதுர்த்திநிற் காண்பவன் சண்டாள னாமெனச்
சாபமுற வந்த வசையுஞ்
சாமியிசை வெள்ளமுன் சைந்தவத் துகளெனத்
தன்னிற் கரைந்து மறையும்
மதித்திவ னணைந்திவன் மகிழ்வுறப் பெறுதியேல்
மாதவ முனக்கு வேறென்
மதியெனும் பெயர்பெற்று மதியா திருந்திடின்
மதிமோ சமாம றிதிநீ
அதிர்த்தெழச் சூரடர்ந மாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 75

ஏனிந்த மதியின்ன மிங்குற்றி லானென்ன
எம்மையன் வெகுளு மளவில்
இங்குனது முன்றில்வரு மிந்த்ரனை ராவத
மெடுத்துமே லோச்சு கைகண்
டூனபகை யரவமென் றுன்னியோ வித்தலத்
துறுகுலை செறிந்த தாலம்
ஊறுசெய் பலதலைகொ ளசுரரென் றுட்கியோ
உபக்கிரக மென்ற பெயரில்

வானத்து லாவிடும் வம்புமதி நண்பிலோ
வருகிரக சம்மே ளனம்
மருவுதனை யின்றியமை யாதென்ற வகையிலோ
வரவுதாழ்த் தனன்வ ருவனென்
றானவகை யாற்றினந மாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 76

சாபத்தி னாலுடல் தளர்ந்தறி வழிந்துநீ
தஞ்சமுன் புகுத வெந்தை
தந்தைதன் தலைமீ துனக்கிடந் தந்ததுந்
தக்கன்மக வேள்வி புக்குக்
கோபத்து மிக்கமரர் குலைகுலைந் திடவரூஉங்
கோரமார் வீர பத்ரர்
குப்புறத் தள்ளியுன் குடர்குழம் பத்தேய்த்த
கொடுமையுங் காணி னொரநு
தாபத்தி னாலவர் தலையளித் திடுவதுஞ்
சாருமவ லேப நோக்கின்
தண்டிப் பதுஞ்சரத முக்ரசா சனனான
சாமியிவன் வெகுளி னொருபே
ராபத் துனக்குநம தாதிவடி வேலனுட
னம்புலீ யாட வாவே
அழகொளிர மாவைவள ரானந்த வள்ளலுட
னம்புலீ யாட வாவே. 77

## 8. சிற்றிற் பருவம்

தங்கத் திருநாண் பொலிசிகழி
தயங்கு நவமா மணிச்சுட்டி
தருமைம் படைநன் மணிக்குதம்பை
சாலுங் குதலைச் சாறொழுகி
யெங்கும் பரக்குஞ் சிறுபண்டி
யிடையே துவள்பொன் னுபவீத
மெழிலா ரரைஞாண் மணிச்சதங்கை
யிவையொன் றுக்கொன் றாயிரமாப்
பொங்குஞ் சோதி தெருவளைந்த
புழுதிக் கொளிர்பொன் னிறம்பயப்பப்

பொலிபுன் முறுவற் குறும்பலரப்
போந்திங் கணையும் புண்ணியமே
திங்கள் வதனச் செழுங்கருணைத்
தேவே சிற்றில் சிதையேலே
தேவர் பரவும் மாவைவளர்
செல்வா சிற்றில் சிதையேலே. 78

நனையார் தாழை மடலவிழ்ந்த
நறுஞ்சோ றின்பூங் கறிகளொடு
நறுநீர்க் குட்டத் துறுதவளை
நன்மென் சினைநீர்ப் பாயசமும்
முனையா ரூரிக் குலமுழுது
முழுதுங் கோலம் படவமைத்த
முற்றந் திகழும் மணற்சிற்றில்
முதுகோ மயத்தி னணிநீவி
மனைமா சகற்றி நியமமொடு
மகமா தீர்த்தம் மகிழ்ந்தாடி
மருவும் விருந்தோ டுடனுண்ண
வருநம் மன்பர்க் கமைத்திருந்தோம்
தினையா ரமுதுண் செழுங்கருணைத்
தேவே சிற்றில் சிதையேலே
தேவர் பரவும் மாவைவளர்
செல்வா சிற்றில் சிதையேலே. 79

காடும் மலையுங் கருதேல்நீ
கடலின் கரையுந் தனியணுகேல்
கடியார் பகைகன் னிப்பகையுங்
கடுஞ்சூர்ப் பகையு முளமுறையே
ஆடி யமாவா சைக்கொருபே
ராடம் பரமாய்க் கடல்காண
ஐய னொடுயா முனைச்சீராய்
அழைத்துச் செல்தும் அமைதியெனக்
கோடி முறைநிற் குரைத்திடுமெங்
கோமாட் டிக்கென் கூறுதும்யாம்
குமரா அளியேம் குறிக்கொள்நீ
குணமார் குன்றப் பெருமுனிவர்
தேடும் பொருளே செழுங்கருணைத்
தேவே சிற்றில் சிதையேலே

தேவர் பரவும் மாவைவளர்
செல்வா சிற்றில் சிதையேலே. 80

கண்ணார் கோவிற் கவின்மாவைக்
கலைமுத் தமிழ்மா மன்றத்துக்
கணக்கா யன்மா மகன்கீரன்
கபிலர் பரண ரெனைப்புலவோ
ரெண்ணா ரச்சம் பெருகவுனை
யெதிர்பார்த் திருந்தா ரகஸ்தியனு
மேதோ கேட்க வணைந்திருந்தா
னேங்கு மவர்தங் குறைதவிர்ப்ப
விண்ணோ ரரசே போதுகநீ
வீணே வெயிலத் தலையற்க
விருப்பிற் கந்த புராணநயம்
விரிப்பார்க் கருளி யவணமர்க
தெண்ணீர் முத்தே செழுங்கருணைத்
தேவே சிற்றில் சிதையேலே
தேவர் பரவும் மாவைவளர்
செல்வா சிற்றில் சிதையேலே. 81

மாயே யப்பே ருலகனைத்தும்
மட்டித் தாடி மலைமடந்தை
வளமார் பல்வே றுயிர்த்தொகைக்கும்
வாழ்வாம் போகப் புத்தமுதந்
தாயாய் மகிழ்ந்து சமைத்தடுக்குந்
தனிப்பே ரண்டக் கலசமெலாஞ்
சங்கா ரப்பேர் விளையாட்டிற்
றட்டி யழிக்குந் நின்தந்தை
நீயே விதையும் முளையுமொன்றே
நியத மெனினும் யாமச்சீர்
நிகரில் மலையா ளலங்கண்டாய்
நேரா தைய நினக்கிதுதான்
சேயே முருகா செழுங்கருணைத்
தேவே சிற்றில் சிதையேலே
தேவர் பரவும் மாவைவளர்
செல்வா சிற்றில் சிதையேலே. 82

நேய முருக நெய்யுருக்கி
நினைவு முறுகத் திரிமுறுக்கி
நேர்ந்து நினாவி யாமன்று
நிறைமா விளக்கிற் சுடர்கொளுவ
மாய மொடுபின் மறைந்துமணி
வாயா லூதிப் பலகாலும்
மருவுஞ் சுடர்நீ யணைத்தணைத்து
மாறி மாறிக் கொளுத்திக்கை
யோயும் படிசெய் குறும்பெனைத்து
முன்றாய்க் கெனினும் புகன்றேமோ
ஊரார் புகலுங் குறைமுறைக
ளொன்றே னும்யா முரைத்தேமோ
சேய வடிவேற் செழுங்கருணைத்
தேவே சிற்றில் சிதையேலே
தேவர் பரவும் மாவைவளர்
செல்வா சிற்றில் சிதையேலே. 83

வருமா வந்து குழைந்தெம்பால்
வனப்பார் சிற்றில் வளநோக்கி
மாயச் சிறுபுன் முறுவலொளி
வண்ணக் குறும்பின் நிழல்படர
ஒருகா லுன்பொற் பதமசைய
வொருகா தம்போய் மீளுமெம
துயிர்நீ யகலி னொளியிழந்த
வுலகா யிருளும் போலுமுளம்
இருபே ரின்னற் கிடைத்தயங்கி
யினைகே முனைநா மென்செய்ய
எழிலார் சிற்றின் மிசைத்தீண்டா
தெம்மோ டிருக்கிற் பழுதாமோ
தெருளார் தெருளே செழுங்கருணைத்
தேவே சிற்றில் சிதையேலே
தேவர் பரவும் மாவைவளர்
செல்வா சிற்றில் சிதையேலே. 84

மற்றிங் குன்பால் நமக்கேது
மாறு பாடும் மறுப்புமினி
மருவுன் சீலப் புகழ்கருதா
வாழ்நா ளென்ப தெமக்கிலைகாண்

சிற்றிற் பற்றுந் தந்தாய்நீ
தேடி யழிக்க வந்தாய்நீ
சிறியேம் பற்றிங் கழியுமுனஞ்
சிற்றி லழிந்தாற் செயலென்னாம்
பற்றிங் கெனைத்து மொழித்துனது
பண்பா ராடல் மகிழ்ந்திருக்கும்
பரிசிங் கெமக்கு முன்னருளிப்
பின்னீ வந்தாற் பிழையாமோ
தெற்றென் றருளுஞ் செழுங்கருணைத்
தேவே சிற்றில் சிதையேலே
தேவர் பரவும் மாவைவளர்
செல்வா சிற்றில் சிதையேலே. 85

**வேறு**

மதிதவழு மாடநிகழ் மாயக்கை யெல்லையின்
மாயயாக் கையினை மேவி
மருவுமல் வாயினில் மாபூதர் தமைநுங்கி
வளர்புலவ கான வெல்லை
அதிரவரு மலைசூழு மாமிர துறைக்கணுற்
றான்றபெரு மாவி னுருவா
மண்ணலஞ் சூரனோ டாடுவிளை யாடலே
ஐயநின் னாற்ற லொக்குங்
கதிரைமலை வள்ளியொடு காதல்விளை யாடலுங்
கருதுநின் றலைமை யொக்குங்
கண்ணியப் பெருமவெங் கையிடுஞ் சிற்றிலிற்
காலிடுத லழகி தன்றாற்
செதிலரவ பகையூர் செழுங்கருணை மூர்த்தியெந்
தேவநீ சிற்றில் சிதையேல்
தேவர்தொழு மாவையின் மேவிவளர் செம்பொருட்
செல்வநீ சிற்றில் சிதையேல். 86

கோடிகரை நின்றருள் கூர்பிரண வத்தோணி
கொண்டுகா சாத்து றைப்பாற்
கோச்செல்வி மாருதப் புரவல்லி குதுகலப்
பணிகொள்ள மாவை மேவிச்
சேடியல் கந்தவன நற்பதி சிறந்தொளிர்
சித்தாந்த செல்வ நல்கித்

திகழ்புலவ கானத் தமிழ்த்தலைமை தாங்கிமகிழ்
தேவரையு முய்ய வாண்டு
நாடியணை கோணநா யகிக்கருளு நாள்நோக்கி
நவசந் நிதிக்கண் வைகி
ஞாலமறி சர்வபலப் பிரதான மூர்த்தியாய்
நம்மியாழ்ப் பாண முழுதுந்
தேடியரு ணல்குஞ் செழுங்கருணை மூர்த்தியெந்
தேவநீ சிற்றில் சிதையேல்
தேவர்தொழு மாவையின் மேவிவளர் செம்பொருட்
செல்வநீ சிற்றில் சிதையேல். 87

தூமலி சுடர்த்தோகை யொளிவட்ட முற்படத்
தோன்றிடத் தூவி தோன்றத்
தூயவொலி நாதமொடு பிந்துவுந் தன்வடிவு
தோற்றமொரு சுத்த மாயா
மாமயி லுகைத்தேறு மாணடி யிரண்டுமிம்
மாநிலந் தோய வந்து
மண்மகிழ் சிற்றில்விளை யாடுமெம் பாலுற்ற
வான்கருணை நம்ம ளவதோ
பூமலியு மானிடப் புன்மைமலி யேழையேம்
புத்திபோ தரவி லாமே
போற்றா துரைத்திடும் புன்மொழி யனைத்தும்
பொறுத்தருள் புண்ய முதலே
தேமலி கடம்பணி செழுங்கருணை மூர்த்தியெந்
தேவநீ சிற்றில் சிதையேல்
தேவர்தொழு மாவையின் மேவிவளர் செம்பொருட்
செல்வநீ சிற்றில் சிதையேல். 88

## 9. சிறுபறைப் பருவம்

அறைநீர்ப் பெருஞ்சலதி யாகாச மெட்டிடு
மலைக்கர முழக்க மிக்கங்
கயலுறு சிமிந்திவினை யாலையுறு மெந்திர
முழக்கமொடு மாறேற் பநின்
னிறைநீர்ப் பெருந்தலைமை யெண்ணாத காரசுர
ரேற்றபோர் முரச யிர்த்தவ்
விமையவர் குழாமலைந் தெங்குமடை வின்மைகண்
டித்தல மணைந்து சாருங்

குறைதீர் வரப்பெறு குறிப்பினிற் செந்நின்று
கொட்டுகை கூம்பி யொற்றக்
குணலையிடு தாளவிசை கூடுமொத் திசையொலிக்
கோலதுந் துபிக்கு மாறாச்
சிறைநீர்ப் பெருங்கேணி சேர்மாவை யரசநீ
சிறுபறை முழக்கி யருளே
சிங்கமுக னைப்பொருத துங்கவடி வேல்வீர
சிறுபறை முழக்கி யருளே. 89

தம்பொருள் பெற்றுண்டு தம்மெதிர் தருக்குவார்
தாங்குவார் தரணி யில்யார்
தன்னீர் குடித்துத் தடித்துத் திணிந்துதிமிர்
சாலவெதி ரேறி நின்று
வெம்புவ லிடிப்பொறி மிகுத்ததிர் முழக்கமொடு
விண்டலம் வெருவ வார்த்து
வீம்புபுகல் காளமுகில் விபரீத நிலைகண்டு
மெய்பனித் துடலு ருத்தங்
கம்பரங் கொளவெழுந் தாவேச முற்றலைந்
தலைக்கர மடித்து ரப்பி
யாழிவிளை வீரநிக ழணிமாவை கோயில்கொளு
மண்ணல்செவ் வண்ண வடிவேல்
செம்பொருட் சிவமருள் செழுங்கருணை யரசநீ
சிறுபறை முழக்கி யருளே
சிங்கமுக னைப்பொருத துங்கவடி வேல்வீர
சிறுபறை முழக்கி யருளே. 90

முத்தமிழ் முழக்கமுற முதுமறை முழக்கமுற
மூவுலகு முய்ய வருளும்
மூவரெம் பெருமக்கள் மொழிசைவ நீதியொடு
மூவாத வேத நீதி
தத்தமில் முழக்குறச் சைவஹர ஹரவொலி
தழைத்தெழு முழக்க மோங்கித்
தண்கடல் முழக்கினொடு சார்முகில் முழக்கமுந்
தன்கீழ்ப் படுத்தி மீப்போய்
நித்தமு மொலித்துமிகு நிகர்வரிய மாவைவளர்
நின்மலா னந்த வாழ்வே
நின்திருப் புகழ்பாடு நேயமிகு மன்பர்த
நெஞ்சுற முழங்கு முவகைத்

தித்திமி திமித்திமி தெளித்திடச் செல்வநீ
சிறுபறை முழக்கி யருளே
சிங்கமுக னைப்பொருத துங்கவடி வேல்வீர
சிறுபறை முழக்கி யருளே. 91

மந்தா கினிப்புனல் மகிழ்ந்தாடி யரமகளிர்
மணற்றிடல் மஞ்ச மேறி
மஞ்சணி விதானவழி விஞ்சியெழு காரகில்
வண்புகையி தென்று வாசக்
கொந்தார் மலர்க்குழல் விரலுளர்ந் தைதுறக்
கோதிச் சரிந்தி ருப்பக்
கோச்செல்வி கஜவல்லி குமரன்மண வணிபரங்
குன்றத் தமைந்த தம்ம!
வந்தார மயனிட்ட மங்கல விதானமும்
வாய்ந்ததவ ணேகு மென்ன
மாதேவர் முரசறைய மாண்புறு சிமிந்திவெண்
வளர்தூம மோங்கு மாவைச்
செந்தா மரைப்பொலி திருக்கைவடி வேலழக
சிறுபறை முழக்கி யருளே
சிங்கமுக னைப்பொருத துங்கவடி வேல்வீர
சிறுபறை முழக்கி யருளே. 92

நவநாக ரீகப் பெரும்பூத நடனமிட
நாடுசுதி லயமு றுத்தும்
நாப்பறை முழக்கியெழு நயவஞ் சகக்கோல
நாத்திகந் தலைப னிப்ப
அவமான துறவுநெறி யாத்மீக மென்றுலகை
யாட்டுவோ ராட்ட நிற்க
ஆங்கார முற்றெழு மகம்பிரம் மாஸ்மிகள்த
மாவேக மோய்ந்து மடியத்
தவமான சிவநெறி தனக்கூ றிளைத்துவரு
சமத்துவப் புதுப்பு ரட்சிச்
சகோதரத் துவம்பேசு சமயப்ர சங்கிகள்
தம்வா யடங்கி யோயச்
சிவமான சிவமருள் செழுங்கருணை யரசநீ
சிறுபறை முழக்கி யருளே
சிங்கமுக னைப்பொருத துங்கவடி வேல்வீர
சிறுபறை முழக்கி யருளே. 93

கெண்டையஞ் சங்கிலி கிணுங்கிணென் னொலிபதக்
    கிளர்நடைக் கொற்ற மிளிருங்
  கீழ்க்கடைக் கண்ணிணை கிளர்செவிக் கூர்மையொடு
    கேழில்சீ ராச னத்துப்
புண்டரத் தொளிநுதற் பொலிமுகச் சாரதியர்
    புகல்குறிப் பிசைவி னொன்றப்
  பூங்குஞ்ச மலையவாய் பொலிநுரையு மலையவலை
    பொருசனக் கூட்ட நீந்திக்
கண்டகண் கவர்மலர்க் கார்த்திகைச் சப்பறங்
    காணவிழை விரைவி னணையுங்
  கட்டைவண் டிப்பூண்ட காளையிணை வெருவிவெடி
    வாலெடுத் தூடு பாயத்
தெண்டனிடு மடியர்குழு சிவசிவ வெடுத்துயச்
    சிறுபறை முழக்கி யருளே
  சிங்கமுக னைப்பொருத துங்கவடி வேல்வீர
    சிறுபறை முழக்கி யருளே. 94

வேறு

தேவுல கத்திறை மேவு மகண்மைகொள்
    தெய்வத யானைமணஞ்
  செப்பிடு மரசென வப்பெரு மமரர்கள்
    திசைதிசை நாடிவர
நாவுல வின்னசை நவில்கவி வாணரு
    நலிவுறு மார்த்திகரும்
  நாமுறு கொடைவள நலமுர செனவொலி
    நாடின ரோடிவரப்
பூவுல கினிலுறு போர்வெறி யூக்கிடு
    புன்னெறி யசுரகுலம்
  பொன்றிட வென்றொலி பொலிமுர செனமகிழ்
    பூதல ராடிவர
மூவுல கத்தினு முண்மை முழங்க
    முழக்குக சிறுபறையே
  முன்னுறு தும்பி முகத்திறை தம்பி
    முழக்குக சிறுபறையே. 95

வெம்மைகொ ளினனுறு மண்டல மிடிபட
    விண்முக டுதிராமே

மீதண் டத்துள வேதண் டத்தொகை
வெடிபட வதிராமே
கொம்மைநெ டுங்குவ டணையதொர் சிறுபறை
குதுகல நிறைவொளிரக்
கோலுகு றுந்தடி சால வழுந்துபு
குறியிசை குமுகுமெனச்
செம்மல ரகவிதழ் சிவணுறு சிறுவிரல்
சேப்புற நோவாமே
செம்பவ ளம்புரை சிறுநக கண்வழி
செந்நீர் குமுறாமே
மும்மையு நாமுய மும்முறை மெல்ல
முழக்குக சிறுபறையே
முன்னுறு தும்பி முகத்திறை தம்பி
முழக்குக சிறுபறையே. 96

கட்டுச தங்கை கலின்கலி னெனவொளிர்
காலிணை தாளலயங்
காண விரைந்திரு கண்ணிமை துள்ளவொர்
காவடி தோளேற்றி
விட்டுவி ளங்கொளி பட்டு வனைந்தணி
மேவு மிடுப்பொடிய
மெல்ல வளைந்து சரிந்து குதித்தெழு
வித்தக வாடல்வழித்
தட்டுமி சைப்பொலி தண்ணுமை வலவர்கள்
தலையசை விலயமுறச்
சார்வுறு ரசிக குழாமு மசைந்தொலி
தழைவுறு கரகோஷ
முட்டுமு ழக்கிடை விட்டுமு ழங்க
முழக்குக சிறுபறையே
முன்னுறு தும்பி முகத்திறை தம்பி
முழக்குக சிறுபறையே. 97

**வேறு**

நடநவி லெம்மிறை புடைதனி லளவறு நாதமெழுந்
நன்றுமு ழக்கினி லொன்றிடு பாணா சுரனெங்கே
குடமுழ வொன்று பரித்திறை சந்நிதி கொளநின்றே
கொட்டிமு ழக்கிடு கோமுனி நந்தீ சனுமெங்கே

இடமுள வுலகினி லடையவெ ழும்பர நாதவொலி
எங்கு முழக்கிட விங்குனை யொப்பதொ ரிறைவரியார்
கடவுளர் முடியணி கடவுள் முழக்குக சிறுபறையே
கந்தக டம்பணி யெந்தை முழக்குக சிறுபறையே. 98

நான்மறை முழவினை நாக்கடிப் பிட்டறை நான்முகனார்
ஞால முறத்தரு நாதமெ லாமொரு மாவையிவண்
வான்மறை முடிவுறை வான்பொருள் நீயறை சிறுபறையின்
மங்கல முதிரொலி பொங்கிட வதிர்வுறு மெதிரொலியே
மான்மறை வள்ளி மகிழ்ந்தணை சுந்தர வாழ்முதலே
வள்ள லருள்பொழி வெள்ள மலைத்தெழு கதிர்காமக்
கான்மறை யிறவுளர் கடவுள் முழக்குக சிறுபறையே
கந்தக டம்பணி யெந்தை முழக்குக சிறுபறையே. 99

## 10. சிறுதேர்ப் பருவம்

ஆற்றுமதி யணிசடைகொ ளரனருள வரமேவி
யாயிரத் தெட்டண் டமும்
ஆனயுக நூற்றெட்டு மாண்டமரர் வெருவுற
அலக்கண் விளைத்தொ ரரிமா
ஏற்றுவல னுயரவரு மிந்த்ரமா ஞாலத்
தெதிர்ந்துவரு சூர பன்மன்
எண்பெருகு தானைக் கருங்கடலி னூடெழுந்
தேறவரு செங்க டலென
ஊற்றுகுரு திப்புனற் சேற்றிடை நிணப்புல
விழுக்கிய வழுக்க லூடே
ஒருகோடி சிரமுருள வுருளுறு மனோமய
வுயர்தேர்ப் பொலிந்த வரசே
தேற்றுமறை காணாத சிவனரு ளிளங்குழவி
சிறுதே ருருட்டி யருளே
திருமேவு மொருமாவை வருமான்ம நாயகா
சிறுதே ருருட்டி யருளே. 100

மலையோ விதென்னமதி மலையவசை கெம்பீர
மதகளி றியக்க மேய்ப்ப
மாபெரு தடந்தோணி வார்திரை யுழக்கிவர
வாம்புரவி நிரையொ டொப்ப

அலையோ டலைந்துவரு மணியோட நிரைதாவ
அணைதிரைப் பேரி யார்ப்ப
ஆடியல் வேலேந்தி யமர்ப்ரி பதாதியென
ஆர்வமுறு தூண்டி லங்கோல்
தலைமே லுயர்த்துமகிழ் சார்பரவர் நிறைவுறச்
சாயுமவ ராவி கொள்ளத்
தத்தமிற் குழுமிவரு சமதூத ரொப்பவலை
தாங்கிவரு வலைஞர் சூழச்
சிலையோத மிரணகள நிலையோது மாவையாய்
சிறுதே ருருட்டி யருளே
திருமேவு மொருமாவை வருமான்ம நாயகா
சிறுதே ருருட்டி யருளே. 101

முன்கொண்ட பகையன்று முனைகொண்ட சினமன்று
முப்புரமு மொப்ப வேவ
முறுவலொன் றேயமையு மெனினுமுல காசார
முறையினொரு போர்க ருதியோ
மன்கொண்ட பொன்மேரு மலைகொண்ட வில்வாங்கி
மால்கொண்ட கணைதொ டுத்து
வான்மறைப் பரிபூண்ட மாநிலச் சிறுதேர்
மகிழ்ந்துருட் டும்பி ரானோ
டென்கண்ட பேதநிற் கேன்றமும் மலகார்ய
மெந்தைநின் சொந்த மேகாண்
எமையுற்ற மலமாயை கன்மங் கடந்தியா
மீடேற வீடு மருளுந்
தென்கொண்ட வமரர்பதி திறைகொண்ட மாவைவேள்
சிறுதே ருருட்டி யருளே
திருமேவு மொருமாவை வருமான்ம நாயகா
சிறுதே ருருட்டி யருளே. 102

முற்றணிப் பொலிமலர்ப் பொற்றவிசு பொன்பூப்ப
மோக்ஷசாம் ராச்சி யத்து
முழுத்தபே ரானந்த முன்கொலு வமர்ந்தென்ன
மோகனத் தேர்ப்பொ லிந்தே
உற்றெழு சமர்க்களத் துடைதலைக ளத்தனையு
மொருவழித் தொக்க வென்ன
ஓங்குயர் வுற்றதேங் காய்க்குல மலைத்தடம
தொருவிவழி கண்டு டற்றோல்

உண்டேகு வதுமொருவன் விடவோ லிடுங்கரிக்
குதவவரு திகிரிஏய்க்கும்
ஒல்லென் பறந்தலை மறந்தலைக் கொண்டசூர்
உய்த்திட்ட இந்த்ரஞாலத்

திண்தேரை உருளாது நிற்கப் பணித்தவன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. 93

பைங்கட் சிறைக்கால் கடைக்கால் செயக்கிரிகள்
விரிசிறை படைத்தெழுவபோற்
படருந்தன் வேகத்தின் ஒக்கப் பறக்கப்
பறந்தலைச் செந்தலையறும்

வெங்கண் தயித்தியர் உடற்குறை தலைக்குறை
விரைந்துயி ரினைத்தொடர்ந்து
மீச்செல்லு மாச்செல் லெனச்செலப் பூமாரி
விண்தூர்ப்ப தெனஉடுஉகப்

பொங்கற் கடற்குட்டம் அட்டதிக் குந்தமிற்
போர்செயப் பார்கவிழவெம்
பொறியுடற் சேடன் படந்தூக்கி ஆர்க்கும்
புகைப்படலம் வடவாமுகச்

செங்கட் பசுந்தோகை வாம்புரி உகைத்தவன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. 94

நெய்வைத்த கூந்தற் பிடிக்குதவ நாற்கோட்டு
நிகளத் தடங்குன்றுவான்
நிமிரும் கதிர்க்குலைச் செந்நெலைப் பாகுபடு
நெட்டிலைக் கன்னல்கொல்எனாக்

கைவைத் திடப்பரி முகஞ்செய்து வெய்யோன்
கடும்பரியை நட்புக்கொளும்
கழனிவிரி காவிரித் திருநாட கற்பகக்
காட்டிற் பிறந்துபிரியா

மெய்வைத்த காதன்மை அரமகளிர் பேராய
வெள்ளந் திளைத்தாடிஓர்
மெல்நடைக் கேக்கற்ற பிடிபின் பிடிக்கமுலை
வேழங்கள் உடனுலாவும்

தெய்வப் பிடிக்குக் கிடைத்ததொரு மழகளிறு
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. 95

பற்றுவிற் காமன் கொடிப்படைக் கூரெலாம்
படைவீடு கயல்கள்தாவும்
பழனங்க ளோ அத்ர சாலைபூஞ் சோலைப்
பரப்பெலாங் காற்றேரொடும்

கொற்றவங் கங்குற் கடாயானை யுங்கட்டு
கூடமே யெனினுமருதக்
கோமகன் குடிகொண்ட சோணாட சேணாடு
குங்குமங் கொட்டுதிண்டோள்

பொற்றடம் குன்றினிரு கொங்கைப் பொருப்புமொரு
பூங்குழற் காடும்வெயில்கால்
புனைமணிக் கலைஅல்குல் மாக்கடலும் ஏந்தியொர்
புனத்தின்கண் மிகநுடங்கும்

சிற்றிடைக் கொல்குமென் கொடிபடர நின்றவன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. 96

கோல்பாய் பசும்புண் அசும்புகும் பத்தடங்
குன்றுகவுள் மடைதிறந்து
கொட்டுநெட் டருவியொடு தேனருவி யுந்திரை
கொழித்துடன் கோப்பமேதிப்

பால்பாய் பெருக்கா றுவட்டெழுதல் தன்துணைப்
பாவைய ரொடுங்குறுகும் அப்
பாகீ ரதிக்குநிகர் தண்டுறை தொறுந்திசைப்
பாலர்மேற் படையெடுத்து

வேல்பாய் நெடுங்கட் கடற்றானை யொடுமொருவன்
மேற்செல்ல நாற்றிசையிலும்
வெற்றிக் கயற்கொடி யெடுத்தென எடுத்தெறியும்
வெண்திரை கிழித்துவெடிபோம்

சேல்பாய் தடம்பணை உடுத்தகா விரிநாட
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. 97

மீத்தந்த மாகத்து மேகத்தி னோடுமுடு
மீன்இரியல் போகஉகளும்
வெடிவாளை மதியக டுடைத்தூற்று தெள்ளமுத
வெள்ளருவி யாற்பசுந்தண்

காத்தந்த சண்பகப் பூவேரி மாரிசெய்
காவேரி ஆயிரமுகக்
கங்கையா கச்செய்து மீட்டுநாற் கோட்டுவெங்
களிறுபிளி றத்தாவிவான்

பூத்தந்த கற்பகக் காட்டினை உழக்கிவிரி
பொற்றா தெழுப்பிமற்றப்
பூந்துகட் படலத்தி னால்தெய்வ நதியையும்
பொன்னிநதி யாகச்செயும்

தேத்தந்த தண்பணை உடுத்ததீம் புனல்நாட
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. 98

கள்ளவிழ் நறுங்கொடிகள் கமுகிற் படர்ந்துபூங்
கற்பகத் தும்படர்தலால்
காமன் பெருஞ்செல்வம் அன்னவர்கள் குழுமியக்
கமுகின் கழுத்தில்யாத்த

ஒள்ளொளிய செம்மணிப் பொன்னூசல் பன்முறை
உதைந்தாட ஆடுந்தொறும்
ஒண்கமு கொடுந்துணர்ப் பைங்கற் பகக்காடும்
ஒக்கஅசை யத்தலையசைத்

தள்ளிலை அலங்கல்வேல் எம்பிரா னைப்பாடி
ஆடுகின் றாரெனத்தாம்
அலர்மாரி பொழிவபோல் அங்கற் பகத்தெய்வம்
அம்பொன்மலர் மாரிதூர்க்கும்

தெள்ளுதமிழ் விரிபுனற் காவிரித் திருநாட
சிறுதேர் உருட்டியருளே
திருவளர் வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. 99

வாராட்டு தடமுலைப் பாலொழுகி வழிவதென
மணிமுறுவல் நிலவுகாலும்
மழலைவாய் முத்துண்டும் உச்சிமோந் துந்திரு
மடித்தலத் தினில்இருத்திப்

பாராட்டி யுந்தமது கண்மணிப் பாவைநின்
படிவமா கக்காட்டியிப்
பாலரொடும் விளையா டெனப்பணித் துந்தங்கள்
பார்வைகளி யாடச்செயும்

தாராட்டு மதிமுடித் தீராத வினைதீர்த்த
தம்பிரா னுந்தம்பிரான்
தழலுருவில் ஒருபாதி குளிரஒரு புறநின்ற
தையனா யகியும்வைத்துச்

சீராட்டி விளையாடு சேனா பதிக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. 100

முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் முற்றிற்று

உ

## சுப்பிரமணியக் கடவுள்

# க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்

## காஞ்சிபுரம் சிதம்பரமுனிவர்

### விநாயகர்

ஓங்கார வடிவுகொண் டொருகுடிலை தனினாதம்
ஓங்குபிளி றாமுழக்கால்
ஓரைந்து கலைகளும் மந்த்ரபத வன்னமும்
உபாதான மூன்றிலைந்தேழ்
ஆங்கார முதலான தத்துவமோ டண்டமுண்
டாக்கமுத லைந்துவிளையாட்
டாடுமா னந்தவனம் வளர்குஞ் சரக்கன்றின்
அடிமலரை யஞ்சலிப்பாம்
ஊங்கார மொன்றிலே சூர்மாவை வென்றருளும்
ஒளிர்வேல னாறுமுகவன்
ஒருபரம் பொருளெம்மை யாளருண கிரிநாதர்
ஓதுந்தி ருப்புகழெனும்
தாங்கார மணிமார்ப னம்புவியி லொருநூறு
தலமேவு குமரகுருவின்
தண்டைகிண் கிணியணி சரணங்கள் புகழுநந்
தமிழ்மாலை தழைகவென்றே. 1

## 1. காப்புப் பருவம்

### கயிலாயம் - விஷ்ணு

கயிலாய சிகரத்து விசுவபதி யுலகீன்ற
கருணையுமை வீற்றிருக்கும்
கனகமணி மந்த்ரசிங் காதனத் தேமேவு
கந்தசுவா மியைமுருகனைக்

குயிலான அதிமதுர மொழிகங்கை மைந்தனைக்
குணபூ தரக்கடவுளைக்
கோகனக னுக்குமுன் குடிலையுப தேசஞ்செய்
குமரகுரு வைப்புரக்க
மயலான பரையாதி யிச்சைஞா னக்கிரியை
வந்துதரு மேகசத்தி
மகிழ்சிவன் போககா லத்திற் பவானியாய்
வளர்கோப காலத்திலே
அயிலாரும் வேற்காளி யாயுத்த காலத்தில்
அதிபல மகாதுர்க்கையாய்
அகிலந் துதிக்குநா ளறிதுயில்கொள் ளரியாம்
அனந்தகல் யாணகுணமே. 2

## கந்தமாதனம் - பரமசிவம்

செங்கனக மானசபை யம்பரக் கூத்தினன்
திங்களரா வாறிதழி தும்பையைச் சூட்டினன்
திண்புவியில் நால்வர்புகழ் செந்தமிழ்ப் பாட்டினன்
சிம்புள்வடி வாகிநிறை யண்டரைக் காத்தவன்
தங்குமணி வாயுரக கங்கணக் காப்பினன்
சந்த்ரனிக ராகவொளிர் சங்கநற் றோட்டினன்
சம்புசன காதியர்க ளின்புறப் பார்த்தருள்
தந்தைகயி லாயனடி சிந்தைவைத் தேத்துதும்
மங்குல்படி வானவர்கள் பைந்தருத் தோப்பினுள்
மண்டுகுற மாதர்பயில் செந்தினைக் காட்டினுள்
வந்தவருள் மாதரனைக் கந்தனைக் கூக்கரல்
வண்டுநிமிர் தேனிறை கடம்பனைக் கீர்த்தியொண்
கங்கையுமை பார்வதிகு ழந்தையைப் பூவிலுறை
கஞ்சமல ரோன்மொழி யகந்தையைத் தீர்த்துநங்
கண்கள்களி கூரவரு மெந்தையைக் கோட்டுயர்
கந்தகிரி யாறுமுக மைந்தரைக் காக்கவே. 3

## திருப்பரங்கிரி-உமையம்மை

புவனமிரு பத்துநா லிருநூறு முய்யவே
பூமேவு சதுமுகத்தோன்

புகழுஞ் சடங்குக ளியற்றப் புரந்தரன்
பூம்புனல் பொழிந்துநிற்பச்
சிவபரங் கிரியிலரு ளாறான னத்திலோர்
திருமுகத் தால்மகிழ்ந்தே
செகதன்னை யாகிவரு தெய்வானை யைமணஞ்
செய்குமர னைப்புரக்க
நவபேத முஞ்சத்தி பேதமுந் தானாகி
நாடுகுண் டலிசிலம்பாய்
நாதபர மானந்த மேசிலம் பொலியாக
ஞானவா னந்தவடிவாய்ப்
பவமகற் றும்பெரிய வத்துவித மாகவே
பரமநா டகநடிக்கும்
பரமசிவ சூரியன் திருவருட் கிரணமாம்
பரப்பிரம வித்தையுமையே. 4



## திருச்செந்தூர்-கங்கை

செந்திலம் பதியில்வந் தாறான னத்திலொரு
திருமுகத் தால்மகிழ்ந்தே
சிங்கனொடு தாருகன் சூரபத் மாமுதல்
தெவ்வரையெ லாஞ்செயித்தே
இந்த்ரன்முதல் முப்பத்து முக்கோடி தேவர்களும்
இருவருடன் முனிவரர்களும்
எல்லாரு மகிழவே தேவர்சிறை மீட்டருளும்
எந்தைகுக னைப்புரக்க
சந்த்ரா யுதங்கோடி யனையதிரு மேனியும்
சலராசி பொழிகும்பமேல்
தாங்குசெங் கைகளும் அபயமும் வரதமும்
தன்கருணை முகமிரங்க
அந்திவண் ணச்சடா மௌலியுங் காசியும்
அடியர்கண் ணுங்கருத்தும்
அகலாம னிறைகின்ற கங்கைநா யகியென்னும்
ஆனந்த அருள்வெள்ளமே. 5

## திருவாவினன்குடி-விநாயகர்

திருவாவி னன்குடியி லாறான னத்திலொரு
திருமுகத் தால்மகிழ்ந்தே

செகதலப் பூமியந் தரசொர்க்க முத்தலந்
தேவரொடு மனிதராகி
வருவோர்கள் கேட்டவரம் வரையாம லேதினம்
மகிழ்ந்துதந் தருள்வள்ளலை
வளரண்ட கோடிகள் வளர்க்குமயில் வாகனனை
மைந்தனைத் தனிபுரக்க
உருவான தோன்முகனை வென்றஞான் றிந்திரனும்
உம்பர்களு மாலுமயனும்
ஓங்குதோன் முகனுக்கு நாங்கள்செய் குற்றேவல்
ஒருவனீ கைக்கொளென்று
மருவாரு மலர்தூவி யனைவருந் தங்கள்சிரம்
வாய்மூடிக் குட்டிநின்று
மதசலவி பானனத் தெந்தையரு ளென்னவே
வந்தருள்செய் கருணைமலையே. 6

### திருவேரகம்-வயிரவர்

ஏரகத் தேயாறு வதனத்து ளருள்பொழியும்
ஏகமா மானனத்தால்
எவ்வுயிரை யுந்தடுக் கும்பாச மோகமா
மேகவிருள் மாற்றவடியார்
நாரகத் தேநாக வட்டத்த னந்தாவி
நற்சோதி போலுதிக்கும்
ஞானப்பிர காசத்தை வைத்தருளு மொருசுவாமி
நாதனைத் தனிபுரக்க
தாரகப் பிரமவுப தேசஞ்செய் காசிபொற்
சபையாதி பதிகளுறைவோர்
சரியைகிரி யாயோக ஞானபா தஞ்செயும்
தன்னடிய ரைப்புரக்கக்
காரகத் தெமனூர்தி மணிவா யடைக்கக்
கனாவோடு நனவிலுந்தன்
காலிற்சி லம்புகல கலவென வேவரும்
காலவயி ரவநாதனே. 7

### குன்றுதோறாடல்-வீரபத்திரர்

குன்றுதோ றாடலுட் குளிர்வதன மாறனுட்
குறுநகைசெய் வதனமொன்றால்

கொண்டவகி லாண்டகோ டிகளினிறை வாஞ்சீவ
கோடிக ளிளைப்பாறவே

அன்றுதா னுறுபாச வைந்தந்த காரமற
அருளாம கோதயத்தால்
ஆனந்த வெள்ளத் தழுத்திவிளை யாடுமென்
அருள்முருக னைப்புரக்க

ஒன்றுதா னானசிவ னும்பர்நா யகன்விழியின்
ஓராயி ரந்திருமுகம்
உபயமெனு மாயிரஞ் செங்கையுட னேயுதித்
தொருசண்ட மாருதமெனச்

சென்றுதா னுவைமறந் திடுதக்கன் முதலாம்
சிவத்ரோக முற்றபேரைச்
சிட்சித்து லோகத்தை ரட்சிக்க வேவந்த
செயவீர பத்ரகுருவே. 8

### பழமுதிர்சோலை—பிரமன்

ஏர்கொள்பழ முதிர்சோலை மலையினுட் சண்முகத்
தேகமெனும் மதிமுகத்தால்
இந்த்ராதி யிமையோர்கள் சந்த்ரரொடு சூரியர்கள்
எண்டிசா முகநாயகர்

கூர்கொள்படை மனுமன்னர் வாழுமறை யோர்களைக்
கொண்டுமறை வேள்விசெய்யும்
குமரனைப் பாகீ ரதிச்சர வணத்துக்
குழந்தையைத் தனிபுரக்க

கார்கொள்திரு மேனியன் செங்கமல நாபிவரு
கான்முளை மலர்ந்தவெள்ளைக்
கமலாச னத்தம்மை குடிகொண்ட நாவினன்
கருணைபொழி சதுரானனன்

பார்கொள்பிர மாண்டமு மனந்தமுனி வரர்களும்
பகர்வரிய பழமறைகளும்
படைத்துவைத் துப்படிப் பித்திடும் சததளப்
பத்மாச னக்கடவுளே. 9

## சிதம்பரம்-காளி

சீரார் திருச்சிற் றம்பலத்துட்
செம்பொன் மேலைக் கோபுரத்தே
திகழு மூவா யிரர்பூசை
செய்யு மாறு முகவேளைக்
காரார் கூந்தற் சிவகாமி
காண வருளா னந்தநடம்
காட்டும் பரம சிவனருளுங்
கருணா நிதியைத் தனிபுரக்க
நீரார் வெண்டா மரையாளும்
நெடியோன் செந்தா மரையாளும்
நிறைவாஞ் சத்த மாதாவும்
நினைக்குந் துர்க்கை மாதாவும்
பாரார் தரிக்கு முகங்கரங்கண்
பரவா யிரமீ ராயிரமேற்
பகரு மூவா யிரம்வீர
பத்ர காளி யன்னையுமே. 10

## காசி - முப்பத்துமுக்கோடி தேவர்கள்

உருவா தென்றுதன் னெல்லைவட் டத்தினுள்
உற்றிருந் தேயிறந்தோர்க்
குத்தரீ யத்தினா லுமையிளைப் பாற்றவே
உம்பர்கோன் விசுவபதிவந்
தொருவலச் செவியினுட் டாரகப் பிரமத்தை
உபதேச மாயருளியும்
ஓரெட்டு வடிவுதரு காசிநகர் வேலவனை
யொருமுருக னைப்புரக்க
தருவெனுங் கற்பகா டவியரச னிந்த்ரனொடு
சங்கரர்ச டாடவியில்வாழ்
தருதரங் கக்கங்கை மாநதி படிந்துசிவ
சாரூப முற்றவர்கள்போல்
முருகுவளர் கொன்றையணி கோடிபதி னொன்றென்னும்
முக்கணிமை யாதருத்ரர்
மொழிந்திடு மருத்துவர் வசுக்களெனு முப்பத்து
முக்கோடி தெய்வங்களே. 11

## 2. செங்கீரைப் பருவம்

### திருவாரூர்

உன்கருணை மெய்யாட வுதயரவி யொளியாட
உபயசர ணங்களாட
உயர்நாத மானசபை யொலியாட விந்துவாம்
ஓங்குமிகு தண்டையாட
மின்குலவு நவரத்ன மகரகுண் டலமாட
மிகுகருணை வதனமாட
வெற்றிவேல் தாங்குசெங் கையாட அருளாட
விமலமலர் நயனமாட
என்கண்ணி னிற்குமருள் நகையாட நுதலாட
இட்டவெண் ணீறாடவே
ஏரார் விராட்புருட னாறுதா னத்தே
இலங்குமூ லாதாரமாம்
தென்கமலை நகர்மேவு தேவாதி தேவனே
செங்கீரை யாடியருளே
தியாகேச னுமைதவிசி னடனஞ்செய் கந்தனே
செங்கீரை யாடியருளே. 12

### இராமேச்சுரம்

சச்சிதா னந்தவ னந்தகல் யாணகுண
சருவக்கிய சூடாமணி
சருவபரி பூரண பரப்பிரம மேபெரிய
தற்பரஞ் சோதிவடிவே
அச்சமொன் றில்லா வசஞ்சல வமோகமே
அகண்டபர ஞானவொளியே
அறிவினுக் கறிவே யனாதிய களங்கமே
அமுதமதி கோடியொளியே
நிச்சய மகோதய அனந்தரவி சோதியே
நிர்க்குண நிராதாரமே
நிராமய புராதன நிரஞ்சன சுகாதீத
ஞேயமாம் அத்துவிதமே
செச்சைமலர் மாலையணி பன்னிரு புயாசலா
செங்கீரை யாடியருளே
சேதுரா மேசுரங் குடிகொண்ட முருகனே
செங்கீரை யாடியருளே. 13

## கதிர்காமம்

மாணிக்க நிறைகங்கை யாடியுன் னைப்பணிய
வந்திடும் பூதலத்தோர்
வாயூமர் பாடவும் குருடர்கண் பார்த்திடவும்
மலடிகள்பின் மைந்தர்பெறவும்
காணிற்கு மாரவே லாவென்னு மன்பரைக்
கரடிபுலி யானைசிங்கம்
காலிற்ப ணிந்தஞ்சி யோடவும் கந்தனே
கண்கண்ட தெய்வமெனவே
ஆணிப்பொன் முத்திமண் டபமேவு கச்சியினுள்
அடியேனை யாண்டுகொண்டென்
ஆகத்தில் வந்தபிணி தீர்ந்திடவு முன்னிற்கும்
ஆறுமுக மெய்த்தெய்வமே
சேணிற் புலோமசை வளர்த்தபெண் பிடிகணவ
செங்கீரை யாடியருளே
தேவரொடு மனிதர்பணி கதிர்காம வேலனே
செங்கீரை யாடியருளே. 14

## வேள்விமலை

முகமொன்று கண்டுதமை யாளவரு மாறுமுக
மூர்த்தியென் றறியாமலே
முகிலூர்தி யாமிந்த்ரன் முதலான முப்பத்து
முக்கோடி யிமையோர்களும்
நகமென்ற மேருவினி லோர்வீர வாகுமுதல்
நவவீர ரோடுகூடி
நாதநீ விளையாடல் கண்டுபோர் புரியவரு
ஞானவா னந்தவடிவாய்
இகமொன்று பரமொன் றிரண்டும் கொடுக்கவே
இந்த்ரனிமை யோர்முனிவரர்
இணையடிகள் துதிசெய்து பூசித்து நின்றிட
இலங்குஞ் சராசரமொடு
செகதண்ட முழுதும்தன் வடிவென்று நின்றவா
செங்கீரை யாடியருளே
திகழ்வேள்வி மலைமேவு குமரகுரு நாதனே
செங்கீரை யாடியருளே. 15

## வள்ளியூர்

இருக்குமரி யச்சுத னோர்கார ணத்தால்
இலங்குகலை முனிவனாக
எழிற்றிரு மடந்தைபெண் மானாகி வரமகிழ்ந்
திருவருங் கூடவந்நாள்
உருக்கருணை யானவொரு பெண்பிள்ளை யாகமுன்
னொருகா ரணத்தால்வரும்
ஓராயி ரம்பணா முடியுரக சயனற்
குகந்தகண நாதன்வேடன்
பெருக்குமலை வாழ்குறவன் வள்ளியென் றேயருட்
பேரிட்டெ டுக்குமகளாய்ப்
பின்செந் தினைப்புனங் காத்துவிளை யாடிப்
பெருங்குறப் பெண்ணெனவளர்
திருக்குமரி தனைமணஞ் செய்குமர நாயகா
செங்கீரை யாடியருளே
தெள்ளுபுகழ் வள்ளியூர் வள்ளிமண வாளனே
செங்கீரை யாடியருளே. 16

## பாவநாசம்

பொன்பரவு மிமையா சலத்தம்மை பால்வந்து
புகழ்திருக் கலியாணமுன்
பூரணன் செய்ததென வருளகத் தியர்தொழப்
பொழியநீ ரன்பொடிமவான்
இன்பமர் மறைச்சடங் கயன்வந்து செய்திடமுன்
இந்த்ராதி யோர்கள்வாழ்த்த
ஈரே ழெனும்புவன பாலிகையு ளுயிரா
மிலங்குவித் தங்குரிக்க
வன்பான இருளறச் சந்த்ரசூ ரியரெலாம்
வளரொளி விளக்கெடுப்ப
மங்கைநா யகனருள் மணக்கோல மனுதினமும்
மகிழ்வுடன் காட்டிநிற்கும்
தென்பாவ நாசத்து ளன்பான வேலனே
செங்கீரை யாடியருளே
திண்பொதிய மலைமேவு கும்பமுனி குருநாத
செங்கீரை யாடியருளே. 17

## இலஞ்சி

குருவா யகத்திய ருன்னைப் பணிந்திடக்
கூடும்மை ணவர்நாணவே
குளிர்சித் திராநதிக் குற்றால மாகுதிரி
கூடாச லப்பதிக்குள்
மருவாய் துழாய்மௌலி யுஞ்சங்கு சக்கரமும்
மணிவண்ண முங்காணவே
வளர்நெடிய மால்வடிவு குறுகுகுறு கென்றே
மகாலிங்க வடிவமாக்கிப்
பெருவான மதிநதி முடிக்குஞ் சடாடவிப்
பெம்மானை யம்மானிடம்
பிரியாத எந்தைதனை ஐந்தான னத்தனைப்
பெருமானை யர்ச்சியென்றே
திருவாய் மலர்ந்தருள்செய் தென்னிலஞ் சிக்குமர
செங்கீரை யாடியருளே
சிறியனே னறிவினுட் குடிகொண்ட தெய்வமே
செங்கீரை யாடியருளே. 18

## திருமலை

உம்பர்க்கும் விறல்வச்ர பாணிக்கும் அயனுக்கும்
உள்ளந் தெளிந்துதேற
உம்பர்நா யகனான சிவனுக்கும் அம்மைக்கும்
உள்ளமொடு கண்கள்குளிர
வம்பர்க்கு முதன்மையாம் அவுணர்க்கும் அவுணர்குல
மன்னர்க்கு முளநடுங்க
வந்துதன் னோடுவிளை யாடிடு மகாவீர
வாகுமுதல் வீரர்புகழ
வெம்பொற் கொடுங்காளம் வாயாயி ரம்பொழிய
மிகுசேட னொருசாட்டையாய்
மேன்மே லுறச்சுற்றி யொருசெங் கரங்கொண்டு
மேதினியில் மேருகிரியாம்
செம்பொற் சிலம்புபம் பரமென்ன ஆட்டினோய்
செங்கீரை யாடியருளே
திருமலை யெனுங்காவி தருமலைக் குமரனே
செங்கீரை யாடியருளே. 19

## திருநெல்வேலி

உட்டிரு விளக்கான அகரமு கரம்மகரம்
ஒளிர்விந்து நாதவடிவாய்
உயர்மந்த்ர பதவன்ன புவனதத் துவகலைகள்
ஓராறி னுக்குமுதலாம்

மட்டில்கு டிலைப்பொரு ணிரையுமுறை யுஞ்சொல்ல
மாட்டாத படியினாலே
மனத்தெழு மகந்தையா னானென்னும் வறுமைதனை
மாற்றியருள் வாழ்வுதரவே

எட்டிருங் கைக்கமல னைக்குட்டி யேபின்
இருஞ்சிறையி லிட்டுவைத்தே
இருநூ றெனுங்கணக் கோடுநா லாறாம்
எனும்புவன மண்டகோடி

சிட்டியுஞ் செய்துபின் அயன்சிறை விடுத்தவா
செங்கீரை யாடியருளே
செல்வந் தழைத்துவளர் நெல்வேலி வாழ்செட்டி
செங்கீரை யாடியருளே. 20

## கழுகுமலை

கடலேழை யும்பழைய கங்கைப் பெருக்கெனக்
காலிலொரு சிறுவிரலினால்
கடலொன் றெனச்செய்து கடையுகத் தேபுறக்
கடனீரை யுள்ளடக்கும்

வடவா முகாக்கினியை யுள்ளடக் கிப்பின்பு
வடவையை யெழுப்பியந்த
வாரிநீ ரைப்பெருக வைத்துவிளை யாடநீ
வானவர்கள் கண்டஞ்சியே

இடர்தீர அருளென் றிரப்பவே முன்போல
எழுகடலும் வடவையனலும்
இருந்தபடி யேயிருந் திடவைத்து வீரருடன்
எண்டிசையும் விளையாடல்செய்

திடமான அதிபல மகாவீர முருகனே
செங்கீரை யாடியருளே
தென்கழுகு மலைமேவு மின்குலவு வேலனே
செங்கீரை யாடியருளே. 21

## 3. தாலப் பருவம்

### மதுரை

நாதன் விளையாட் டறுபத்து
நாலு நடத்தும் தமிழ்மதுரை
நாலா யிரத்து நானூற்று
நாற்பத் தொன்ப தருட்புலவர்
ஓதும் தலைச்சங் கத்தினுக்கு
முயர்நா னூற்று நாற்பதுடன்
ஒன்ப தான தமிழ்ப்புலவ
ரொழியா இடைச்சங் கத்தினுக்கும்
வேத னிகர்நக் கீரர்முதல்
விரிவா நாற்பத் தொன்பதுபேர்
மேவும் கடைச்சங் கத்தினுக்கும்
விதிசொல் குருவா மகத்தியற்கும்
ஆதி குருவா மாறுகுணத்
தமலா தாலோ தாலேலோ
ஆல வாய்வா ழாறுமுகத்
தையா தாலோ தாலேலோ. 22

### சந்திரகுமாரகிரி

மிக்க புகழ்நா ரதமுனிவன்
விண்ணோர் புடைசூழ் வேள்வியினில்
வெற்றிச் செங்கட் கிடாய்தோன்றி
விரிஞ்சன் முதலோர்க் கடங்காமல்
துக்க முறவே பாதாளம்
துலங்கு பூமி அந்தரமும்
சுவர்க்கம் புகழ்சத் தியலோகம்
துன்னுஞ் சக்ரா யுதனுலகம்
திக்கெ லாமும் புகுந்துலவத்
தீரன் வீர வாகுமுன்னே

சென்று பிடித்து வரவந்தச்
செங்கட் கிடாயை மகிழ்ந்தேறிச்
சக்ர வாள கிரிவலஞ்செய்
சதுரா தாலோ தாலேலோ
சந்த்ர குமார கிரிமேவுஞ்
சரணா தாலோ தாலேலோ. 23

### கந்தகிரி

இந்த்ரன் வசுக்க ளுருத்திரர்கள்
இமையா நாட்ட மருத்துவர்கள்
எமனக் கினிமா ருதநிருதி
இலங்கும் வருண னளகேசன்
சந்த்ர னொடுசூ ரியர்வந்து
தாமுன் விளையாட் டறியாமல்
சரமா மாரி பொழியவவை
தண்பூ மாரி யாய்க்கொண்டே
எந்தை மகிழ்ந்தே சரம்விடுப்ப
இளைத்தே யாறு முகப்பெரியோன்
என்றே யறிந்து பிழைபொறுத்திங்
கெமையா ளென்று பூசைசெய்யக்
கந்த கிரியில் மகிழ்ந்தருள்செய்
கண்ணே தாலோ தாலேலோ
கனகக் கிரிவாழ் குருநாதா
கந்தா தாலோ தாலேலோ. 24

### விராலிமலை

ஒண்பார் மறையோர் மாமகத்தில்
உயர்ந்த முனிவோர் அவியுண்ண
ஓங்குஞ் சுவர்க்கத் திந்திராணி
உபய விழிவேல் மையுண்ண
விண்பா லிமையோ ரமுதுண்ண
விண்ணோர் முதலாம் பெரியவர்க்கு
விரோதஞ் செய்யுந் தகுவர்தசை
மிகும்பேய் கூடி விருந்துண்ணப்
பண்பார் நீல மால்புகழப்
பாகீ ரதிவாழ் சரவணத்துள்

படிக வொளியாஞ் சிவனிடத்தில்
பச்சை யுமையாள் முலையொழுகும்
வெண்பா லுண்ட செவ்வாயா
வீரா தாலோ தாலேலோ
விராலி மலைக்குள் குழந்தைவடி
வேலா தாலோ தாலேலோ. 25

## சையகிரி

ஐய னைமா முகத்தானை
ஆறு முகநீ யாகிவர
அமரர் கோமான் புகலியினு
ளரிய தவஞ்செய் தருச்சிக்கத்
துய்ய மலர்கொய் நந்தவனந்
தூய்நீ ரின்றி வாடல்கண்டு
சோம னணிந்த சடாமௌலிச்
சோதி கயிலா யத்தளித்த
மெய்யன் கும்ப முனிகடத்துள்
மேவும் புனித தீர்த்தத்தை
மேலைங் கரத்தோன் கவிழ்த்தருள
விரிகா விரிமா நதிபெருகும்
சைய கிரிவாழ் சண்முகனே
சைவா தாலோ தாலேலோ
சதுமா மறைக்கும் முத்தமிழ்க்கும்
தலைவா தாலோ தாலேலோ. 26

## சதுரகிரி

அகிலம் புகழும் சிவானந்த
அமுதம் புசிக்கும் சித்தர்களும்
அட்டாங் கத்தா னாதவடி
வான யோக சித்தர்களும்
உகிரா லூன்றிப் பருப்பதத்தை
யுயரத் தூக்கும் சித்தர்களும்
ஓட்டைக் கல்லைப் பரிசித்தே
யுயர்பொன் னாக்கும் சித்தர்களும்
செகதண் டங்கள் தமதுளத்தே
தெரிசித் திருக்கும் சித்தர்களும்

திரிகா லங்கண் டணிமாதி
செய்யும் சித்தர் களும்பணிந்து
மகிழுஞ் சதுர கிரிசுப்ர
மணியா தாலோ தாலேலோ
மதுரை யெல்லாம் வல்லசித்தன்
மைந்தா தாலோ தாலேலோ. 27

## பழனி

கரமைந் துடைய கணபதியும்
கருணா நிதிநீ இருவருமாய்க்
கயிலைக் கிரிமேல் விளையாடக்
கௌரி யுடன்வாழ் கண்ணுதல்கண்
டிரத மிகுந்த மாங்கனியொன்
றேழு கடற்கு மெண்மலைக்கும்
இலங்கு நவகண் டங்களுக்கு
மெயிலாம் சக்ர வாளத்தை
ஒருகைந் நொடிக்குள் வலம்வந்தோர்க்
குகந்தே தருவோ மெனமூத்தோன்
உமைநா யகனை வலம்வரநீ
யொருகைந் நொடிக்குள் செகதண்டமும்
பரமன் மகிழ வலம்வந்த
பாதா தாலோ தாலேலோ
பழனிப் பதியாய் குமரகுரு
பரனே தாலோ தாலேலோ. 28

## கொடுங்குன்று

ஊகந் திரிகா லத்தியல்பு
முணர்ந்த வுபய முனிவரர்கள்
ஒருசா பத்தாற் கழுக்குன்றி
னுயர்ந்த கழுகாம் காரணப்பேர்
ஏகன் சம்பந் தப்பெருமான்
இலங்குந் திருநா வுக்கரசிங்
கெனையாள் சுந்த ரப்பெருமா
ளெழின்மா ணிக்க வாசகன்சொற்
பாகு நிகர்தே வாரங்கள்
பகருந் திருவா சகங்களும்பொற்

பரமன் செவியி லேறமங்கை
பாகா வென்று துதிசெய்து
கூகை வலஞ்செய் கொடுங்குன்றிற்
குமரா தாலோ தாலேலோ
குருவே குணமாம் பொன்மேருக்
குன்றே தாலே தாலேலோ. 29

## இரத்தினகிரி

பாக மிகுந்தே தினந்திருமுன்
பரிவாய் நடஞ்செய் தாசிதனைப்
பாராள் மன்னன் தன்பதிக்குப்
பற்றார் பிடித்துக் கொடுபோகக்
காக மணுகா மலைக்கிலையோ
காட்டுந் தெய்வீ கங்களிங்கே
கல்லை யோநான் கைதொழுதேன்
காப்பா யென்பாள் காணவந்து
சோக மறவே யருள்செய்து
துட்ட னாகும் மன்னவனைத்
தூரத் துரத்தும் பரமசிவன்
துணைத்தாட் கமல முலகறிய
மேகம் வணங்கும் இரத்னகிரி
வேலா தாலோ தாலேலோ
வெற்றிக் கலப மயிலேறும்
வீரா தாலோ தாலேலோ. 30

## திருமுருகன் பூண்டி

திருகன் மனத்து வேடரெனத்
திரளாம் பூத கணநாதர்
சேரர் பெருமான் கொடுத்தமிகு
செம்பொன் னாடை யாபரணம்
வருகல் வழியி லெதிர்நின்று
மறித்துப் பறித்துக் கொடுபோக
மதுர மாமுக் கனிதேன்பால்
வானோ ரமுதைத் தானகைக்கும்
பருகும் பரமா னந்தமெனப்
பதிகம் பாடும் சுந்தரர்க்குப்

பறித்த பொருள்க ளனைத்தினையும்
பரிசு கொடுக்கும் பரமர்திரு
முருகன் பூண்டி யினிதுறையு
முருகா தாலோ தாலேலோ
முக்கட் பெருமா னருளாறு
முகனே தாலோ தாலேலோ.. 31



## 4. சப்பாணிப் பருவம்

### திருச்செங்கோடு

பொன்னிலகு பாடகமும் அம்பொற் சிலம்பும்
புனைந்தபொற் சேவடிகளும்
புலியினதள் நீள்கலை யிரண்டுபரி வட்டம்
பொருந்தத் தரித்தவிடையும்
உன்னமுகை கேட்டுடன் பாலொழுகு மொருதனமும்
உமைவளை யழுந்துமார்பும்
உரககங் கணமிலகு செங்கையும் செம்பொன்வளை
யுற்றசெங் கையிணைகளும்
அன்னைத னிடப்புறம் பார்த்தருளு மொருவிழியும்
அங்கயற் கண்ணொன்றும்விண்
ஆறுதரு செஞ்சடையும் நீள்கருங் குழலும்நிறை
அம்மையுட னப்பனாகும்
தன்னிகரி லாவர்த்த நாரீசன் மைந்தனே
சப்பாணி கொட்டியருளே
சங்காழி மால்மருக செங்கோடு மகிழ்முருக
சப்பாணி கொட்டியருளே. 32

### சென்னிமலை

சீராரும் ஆறுமுக மதியசைய ஈராறு
திருநயன மலர்களசையச்
செம்பொனவ ரத்னமுடி யாறசைய வோராறு
செவ்வாயின் நகைகளசைய
ஈராறு மணிமகர குண்டல மிருந்தசைய
ஈராறு செவிகளசைய

ஈராறு வச்ரகே யூரங்க ளசையமணி
எழில்நுதற் சுட்டியசைய
ஓராறு நுதலிலிடு பொட்டசைய வெண்மைநீ
றொளிர்புண் டரங்களசைய
ஒப்பில்பொன் முப்புரியி னூலசைய மார்பசைய
உயர்தரள மாலையசையத்
தாரார் கடம்பசைய ஈராறு புயசயில
சப்பாணி கொட்டியருளே
தன்னிகரில் சென்னிமலை பன்னிருகை முருகனே
சப்பாணி கொட்டியருளே. 33

## திரிசிரபுரம்

நேயமா மானந்த னுலகுக் கனுக்கிரக
நிக்கிரக மாமிரண்டும்
நின்றுசெய் வானென்ப தறியவே செவ்வந்தி
நிறைமலரை வந்துதிருடும்
தீயுமா லமுமென்ன வருமன்னன் மாளவே
திரிபுர மெனச்செய்தவன்
சிகரகோ புரநெடுங் கோயிலைப் பார்த்தன்பு
திகழ்வணிக னொருவன்மனைவி
ஆயுமா மியுமெனக் கம்பிகா பதியுன்னை
யன்றிவே றில்லையென்னும்
அன்னைமக வைப்பெற் றெடுக்கவே முனமகிழ்ந்
தவளன்னை போல்வந்தருள்
தாயுமா னவனென் பிதாவுமா னவன்மகன்
சப்பாணி கொட்டியருளே
சராசர நிறையுஞ்சி ராமலையில் வேலனே
சப்பாணி கொட்டியருளே. 34

## இராசையம்பதி

கருணைவடி வானவ னுமைகங்கை நாயகன்
கயிலையினில் வீற்றிருக்கும்
கனகமணி மந்த்ரசிங் காதனத் தென்றும்
கவின்குழவி வடிவானவன்
கெருடவா கனனருள்செய் குறவர்மகள் குற்றேவல்
கேட்டருள வந்தஞான்று

கிளைநெடுங் கோலொன்று கொண்டுவரு
நான்மறைக்
கிழவனெனும் வடிவானவன்
அருணகண மணியிலகு மிந்த்ரலோ கத்திலே
அயிராணி கற்பகத்தின்
அணிநிழலில் வைத்துமுன் விளையாடி மகிழ்தெய்வ
யானையை மணஞ்செய்தநாள்
தருணவடி வானவ னிராசையம் பதிமுருக
சப்பாணி கொட்டியருளே
தண்மதிக ளாறுநிகர் சண்முக சிகாமணி
சப்பாணி கொட்டியருளே. 35

## திருவானைக்கா

அம்புரா சிகளேழும் அட்டகுல கிரிகளும்
அணிசக்ர வாளமுங்கோள்
அண்டகோ டிகள்பெற் றளித்தருளு மென்னையாள்
அகிலாண்ட நாயகியயன்
உம்பரா தித்தரிந்த் ராதியோ ரர்ச்சனைசெய்
தோங்குசெழு நீர்த்திரளென
உயர்சதுர யுகநாற்பத் தெட்டான நெடுநாள்
உவப்புடன் பூசைகொண்ட
எம்பிரா னிமையவர்கள் கம்மியனும் நன்றுநன்
றென்னநீ றிட்டான்மதில்
இவ்வுலகு ளோர்வேலை செய்யவே தினமுநீ
றிட்டிருந் தருள்தேவர்கள்
தம்பிரான் புகழ்பெரிய சம்புநா தன்குமர
சப்பாணி கொட்டியருளே
தன்னிகரி லாததிரு வெண்ணாவல் வனமுருக
சப்பாணி கொட்டியருளே. 36

## திருவையாறு

மானுமழு வும்பொற் பிரம்புநீள் சுரிகையுமுன்
வைத்தகர நாலுமூன்று
மலர்நயன மும்சடா மௌலியும் பெறுநந்தி
மகிழ்பரம சிவனாகியே

பானுமணி வண்ணனய னாதியோ ரவ்னாணை
பரிபால னஞ்செய்யவே
பட்டாபி டேகமிட பத்தின்வாய் நீராதி
பஞ்சநதி யாற்செய்வன
வானவர்கள் மானுடர்கள் பூசைசெய் துய்யவே
மான்மழுவும் பிறையும்வேணி
வந்தபா கீரதியு மொருவன்னி நயனமும்
மறைத்துமுன் வந்துதன்னைத்
தானருச் சித்துமகிழ் சைவனா னவன்மதலை
சப்பாணி கொட்டியருளே
சாறணியை யாறதனி லாறான னத்தனே
சப்பாணி கொட்டியருளே. 37

## கும்பகோணம்

சடந்தந்த வுடல்விடில் தாரகப் பிரமஞ்சொல்
தம்பிரான் காசியெய்தித்
தரளமெறி யுந்தரங் கக்கங்கை விண்ணாறு
தாம்படிய வலியிலாத
இடங்கொள்தென் பூமண்ட லத்துளோ ரெல்லாரும்
எளிதாக மூழ்கவேபன்
னீராண்டி னுக்கொரு தரங்கயிலை நாயகன்
எம்பிரா னும்பர்கோமான்
மடந்தைபா கன்சடா டவியில்வாழ் கங்கைநதி
வாணிகா ளிந்தியாதி
மாநதிக ளாங்கோடி தோழியர்க ளுடன்வரு
மாமகத் தீர்த்தமென்னும்
தடந்தந்த புகழ்சேர் குடந்தைமா நகர்முருக
சப்பாணி கொட்டியருளே
சம்புசிவ சங்கரன் கும்பநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. 38

## திருவிடைமருதூர்

திருவலஞ் சுழியைங்க ரத்தனா லயமெனத்
திருவேர கப்பதியெனும்
திருநகர முன்பொனா லயமெனச் சேய்ஞலூர்
திகழ்தண்டி யாலயமென

மருவுமா வடுதுறைவன் விடையினா லயமென்ன
வந்தசூ ரியனாலயம்
மிகழ்சூரி யன்கோயி லாமெனச் சீகாழி
வடுகனா லயமாமெனப்
பெருகுசிற் சபைசபா பதியினா லயமெனப்
பேசுதிரு வாரூர்நகர்
பெரியநா யகர்கோயி லென்னவா னோர்களும்
பேணுமிவை மத்தியாகத்
தருமருத வனமகா லிங்கநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே
தந்தைவெண் காடர்புக ழெந்தைமுரு கேசனே
சப்பாணி கொட்டியருளே. 39

## திருவலஞ்சுழி

மந்தர மெனுங்கிரியை மத்தாக நிறுவியே
வாசுகியை நாணதாக்கி
மாலயனொ டிந்த்ராதி யமரரெல் லாங்கூடி
வளர்பயோ ததிகடையுநாள்
எந்தையைங் கரனைமுன் வணங்காம லதுசெய்ய
இயம்புமலை கீழிருப்ப
இந்திராதி யோரறிந் தைங்கர விநாயகன்
இணையடிகள் பூசைசெய்ய
அந்தமந் தரகிரி சுழன்றமுத முதவவே
அன்புடன் பின்பவரெலாம்
அமுதமபி டேகிக்க வமுதநிற மாதலால்
அருள்வெள்ளை வாரணமெனும்
தந்திமுக வற்கிளவல் திருவலஞ் சுழிமுருக
சப்பாணி கொட்டியருளே
சந்திரசே கரனான அந்திவண் ணன்மதலை
சப்பாணி கொட்டியருளே. 40

## காங்கேயம்

பூங்கமல நயனன்சக் கராயுதமு நான்முகன்
பொற்கரந் தாங்கு தண்டும்
பொன்னுலகு மன்னன்வச் சிராயுதமும் வயிரவன்
புகழ்முத் தலைச்சூலமும்

ஓங்குகா லாக்கினி யுதயமதி யொடுகோடி
உக்கிரப்பிர சண்டரவியின்
ஒளியுமொரு தம்மழுவு மொருவடிவ மாய்வந்த
ஓங்கார மானவடிவேல்
தீங்குசெயு மவுணரெல் லாரையுங் கொன்றே
செயங்கொண்டு வாகைசூடித்
தேவர்சிறை மீட்டருள்செ யென்றம்பி காநாதர்
செப்பிக்கொ டுத்தவருள்வேல்
தாங்குசெங் கையனே காங்கேயம் வாழ்முருக
சப்பாணி கொட்டியருளே
தானவர்கள் குலகால தேவர்குல தெய்வமே
சப்பாணி கொட்டியருளே. 41

## 5. முத்தப் பருவம்

### சேய்ஞலூர்

இருமைத்தம் பியர்க ளானநவ வீரருடன்
எழிலிலக் கம்வீரரும்
எண்ணவரு தொகையிரண் டாயிரம் வெள்ளமெனும்
ஏர்கொண்ட பூதகணமும்
பொருதுபடை கைக்கொண்ட நூற்றெட்
டெனும்பெரிய
பூதப்ப டைத்தலைவரும்
பூங்கமல நயனனும் நான்முகனும் முனிவரும்
புரந்தரனும் வானோர்களும்
கருணைவடி வானநின் புடைசூழ வேபெரிய
காவேரி நாடுவாழ்க
கைவேலி னால்மண்ணி நதியழைத் தேதேவர்
கம்மியன் தான்படைத்த
திருநகர மாம்பெரிய சேய்ஞலூர் வாழ்முருக
செவ்வாயின் முத்தமருளே
சிவபூசை செய்தருட் படையொன்று பெற்றவன்
செவ்வாயின் முத்தமருளே. 42

### திருவாப்பாடி

ஆலமணி கண்டரை மண்ணிநதி வெண்மணலி
னாலமைத் தாத்திநீழல்
ஆன்பால் குடங்களின் நிரப்பிவைத் தங்குள்ள
அணிமலர்கள் கொய்துவைத்துக்
காலமிட மங்கறிந் தேபூசை செய்திடக்
கண்டுடன் வெகுண்டுபாலைக்
காலினா லிடறிக் கவிழ்த்திட்ட தாதைதன்
கால்களற வீசிமழுவால்
ஞாலமொடு விண்ணுலகு மடிபரவு மீசர்தாம்
நம்பிள்ளை கணபதியருள்
ஞானவடி வேலனுக் கிளையவன்நீ யென்ன
நற்பேறு பெற்றுமறைசொல்
பாலதண் டீசராம் ஆப்பாடி மகிழ்முருக
பவளவாய் முத்தமருளே
பாலுகந் தாரிடப் பாலம்மை பாலக
பவளவாய் முத்தமருளே. 43

### திருப்பனந்தாள்

அனையுமைக் கருள்ஞான வுபதேசம் வைத்தவன்
அயனுக்கு மருள்செய்தவன்
அணிகேத கைக்குமருள் செய்தவன் பைம்பொனாட்
டயிராவ தத்தையாண்டோன்
நினைவரிய தாடகைக் கருண்மேனி சாய்ந்தவன்
நிமிராமல் மன்னனுக்கு
நிறைகலய னாருக்கு முன்போல் நிமிர்ந்தவன்
நிறைகலைய னாரளித்த
தனையனுயிர் போனபின் மீட்டநா யகன்வாகை
சாத்துமறை யுடையாடனைத்
தானத்தி யேதரித் துக்கொண்டு நீண்டசெஞ்
சடைவேதி யன்புதல்வனே
பனைசையம் பதிமேவு தண்டீச ரையனே
பவளவாய் முத்தமருளே
பைம்பொனிற அயிராவ தப்பிள்ளை யார்தம்பி
பவளவாய் முத்தமருளே. 44

## திருவாவடுதுறை

தேவாதி தேவன்சொல் வேதாக மங்களைத்
திருமந்த்ர மாலையென்றே
திகழ்சமா தியிலிருந் துலகத்து ளருள்விழி
திறந்தாண் டினுக்கொன்றெனும்
பாவாக வேசொன்ன பரமசிவ னானகுரு
பணியோக அட்டாங்கமும்
பகர்வரிய சித்தியும் திரிகால ஞானமும்
பரிபக்கு வர்க்கருளுவோன்
சேவேறு மொருவனே பரமதத் துவமெனும்
திருமூல நாதன்மகிழூர்
திருவிசைப் பாவென்னும் அதிமதுர கவிபாடு
திருமாளி கைத்தேவர்வாழ்
காவேரி சூழ்ந்ததிரு வாவடுது றைக்குமர
கனிவாயின் முத்தமருளே
கங்கா நதிச்சரவ ணத்துவளர் காங்கேய
கனிவாயின் முத்தமருளே. 45

## கஞ்சனூர்

அஞ்சுதிரு வயதிலே சிவலிங்க பாண்டியன்
அன்புமிகு சேரசோழர்
அணிமுடியி லடிவைக்க ஈசனருள் பெற்றவன்
ஆறுசம யத்தோர்கள்முன்
கொஞ்சவறி வானவயி ணவனெனும் தன்தாதை
கொண்டடல்வண் ணன்பொருளெனக்
கொல்லருலை காந்திடு மிருப்புமுக் காலியிற்
கொண்டாட வீற்றிருந்தே
நஞ்சயின் றருள்பரம சிவனே பரப்பிரமம்
நாரணன் முதலாயினோர்
நம்பரம ரடியரென் றேநாட்டி டும்சைவ
நாயக ரரதத்தர்வாழ்
கஞ்சனூ ராண்டகோ வருள்குமர நாயக
கனிவாயின் முத்தமருளே
கண்ணனுக் கிளையகற் பகவல்லி மைந்தனே
கனிவாயின் முத்தமருளே. 46

**பட்டீச்சரம்**

சீர்த்திமலி சீகாழி யுமைமுலைப் பாலுண்ட
கிண்கிணிக் காற்குழந்தை
சீதங்க ளானதமிழ் வேதங்கள் பாடுவோன்
செங்கைநதி வெண்மைபோல
ஆர்த்துவரு திருநீற ணிந்திடும் தொண்டர்பதி
னாறாயி ரம்பேர்கள்சூழ்ந்
தணிகொள்நிழ லுக்குள்வர வங்கோடை
வெயிலினால்
அரும்புசிறு முத்தமென்ன
வேர்த்தமுக மெய்குளிர வெண்ணிலவோ டிளவெயில்
விரித்தபவ ளக்காலின்மேல்
வெள்ளைமுத் தின்பந்தர் அருளியதில் வருமழகை
வெள்விடையொ துங்கிநிற்பப்
பார்த்துமகிழ் பட்டீச ரருள்குமர நாயகன்
பவளவாய் முத்தமருளே
பச்சைமால் மகிழ்முருக சச்சிதா நந்தவேள்
பவளவாய் முத்தமருளே. 47

**சங்கரநயினார் கோயில்**

ஒருவடிவி லொருபாதி செம்பவள வன்னமும்
ஒருபாதி நீலநிறமும்
ஒருகையில் நீள்மழுவும் ஒருகையில் சக்கரமும்
ஒளிர்நாக குண்டலமுமேல்
வருமகர குண்டலமும் அருளெனுஞ் செந்தேன்
மலர்ந்தசெங் கமலவிழியும்
வளர்கமல நாயக னானதிரு நயனமும்
மகிழ்ந்தகங் காநதிநிறை
தருணசந் திரசடா மௌலியுமி ரத்தினநிறை
சம்புநதி யம்பொன்முடியும்
தண்டுளப முங்கொன்றை மாலையும் காணவே
சங்கர னாராயணன்
கருணையுட னின்றருளும் மாராசை முருகனே
கனிவாயின் முத்தமருளே
கார்வண்ணன் மருகனே கங்கைநா யகன்மதலை
கனிவாயின் முத்தமருளே. 48

### கரி வலம்வந்தநல்லூர்

மேலன் புடனிரம் பத்தேனை யாட்டியிடும்
 மெய்யன்பர் விழிகுளிரவே
வெங்காள கூடமணி கண்டமும் முக்கண்ணும்
 மிகுகருணை பொழிவதனமும்
வாலுழுவை யதளுடையும் வரதமும் அபயமும்
 மழுவுமறி மானுமென்றும்
வைத்தசெங் கரதலமும் மணியுரக கங்கணமும்
 மகிழ்ந்தருள்செய் குறுமுறுவலும்
காலின்வீ ரக்கழலும் வேதபரி புரமுமிரு
 கமலபத முந்திங்கள்வாழ்
கங்கைச் சடாடவியு ஞானமெனு மாநதியும்
 கண்கள்முன் காட்டிநிற்கும்
பால்வணன் மைந்தனே கருவையம் பதிமுருக
 பவளவாய் முத்தமருளே
பகரும்வர துங்கரா மன்பணி பதாம்புயன்
 பவளவாய் முத்தமருளே. 49

### திருவாதவூர்

எனையுமொரு பொருளெனத் திருவுளத் தெண்ணியே
 என்கனவு முன்புவந்தே
இருந்தருள்செய் குருவடிவு காட்டியே கருணையுடன்
 இணையடியென் முடிவைத்தவன்
உனைமுனம் பெற்றவ னொன்றொழிய வாயிரம்
 உயர்ந்தகண நாதர்சூழ
ஒருபெருந் துறையினிற் குருந்தமர நீழலில்
 உகந்துறையும் பரமநாதன்
வனசமல ரடிபெருகு மானந்த மதுவுண்டு
 வண்டளி கடுப்பமதுர
வாசகம் கோவைபா டும்பெரிய மாணிக்க
 வாசக னென்னும்ஞான
தினகரன் மகோதயஞ் செய்வாத புரிமுருக
 திருவாயின் முத்தமருளே
தென்னவன் பிரமரா யன்புகழ வருகுமர
 திருவாயின் முத்தமருளே. 50

### புள்ளிருக்குவேளூர்

செவிகளொரு பன்னிரண் டுங்கேட்க அயனையும்
தேவர்பணி யுங்குருவையும்
தேவர்கோ னென்றசத மகனையும் செந்தமிழ்சொல்
தென்பொதிய மலைமுனியையும்
புவியில்நக் கீரனையும் அவ்வையையும் நீமுன்
புகழ்ந்தபொய் யாமொழியையும்
புகழ்கொண்ட அருணகிரி நாதரையும் வெகுசித்தர்
போற்றுகரு வூரரையும்
குவியுமன மறாச்சிறு புலவரையும் வருபுலவர்
கொண்டாடு நல்லபகழிக்
கூத்தரையும் வளர்காசி வாழுஞ்சி வானந்த
குமரகுரு பரமுனியையும்
கவிசொலென் றேயடி யெடுத்துக் கொடுத்தவன்
கனிவாயின் முத்தமருளே
கந்தனே புள்ளூரில் வந்தமுத் துக்குமர
கனிவாயின் முத்தமருளே. 51

## 6. வாரானைப் பருவம்

### எண்கண்

சீராரு மயில்காண வேல்காண அடல்கொண்ட
சேவற்ப தாகைகாணத்
திருமுகத் தாமரைக ளோராறு காணநின்
செம்பருதி மேனிகாண
ஓராறு நவரத்ன மணிமௌலி காணவுள்
ளுகந்துருகு நகைகள்காண
உபயபரி புரமறைகள் தண்டையொடு கிண்கிணி
ஒலிக்கும் பதங்கள்காணத்
தாரா றிரண்டுபுய சயிலங்கள் காணவே
தங்கமுப் புரிநூலணி
தடமார்பு காணவே ஈராறு செவியிலணி
தருகுண் டலங்கள்காண
ஈராறு கைகாண அடியர்முன் னோடிவரும்
எந்தைஎன் முன்வருகவே

எண்கண்ண னுக்கருள்செ யீராறு கண்ணனே
எண்கண்வே லவன்வருகவே. 52

### கீழ்வேளூர்

அண்டகோ டிகள்பணிய ஆயிர முகக்கங்கை
அபிடேக மஞ்சனமென
அணிமாலை மலர்பத் திரந்தருநந் தனவன
மாற்கற்ப காடவியென்னக்
கொண்டமே னியிலணி நறுஞ்சந் தனத்திரள்
கொடுப்பதம் பொதியமென்னக்
கொள்ளுமுப கரணங்கள் தந்திடும் பண்டாரி
குறைவறுகு பேரனென்னப்
பண்டுதான் மகிழ்பஞ்ச கவ்வியம் கொடுப்பது
பகர்காம தேனுவென்னப்
பணிவிடைகள் நலவீரர் முதலான
பலகோடி தேவரென்ன
மண்டுபே ரொளியான கேடிலியை யர்ச்சித்த
வள்ளிநா யகன்வருகவே
மாகாளி காத்தகீழ் வேளூரில் மாதவ
வளர்த்தவே லவன்வருகவே. 53

### நாகப்பட்டினம்

தாணுமா லயனுடன் மயேசுரர் சதாசிவர்
சச்சிதா னந்தசாந்தர்
தந்தநவ சத்தியருள் போகாங்க மூர்த்திகள்
தருமட்ட வித்தியேசுரர்
பேணுமெழு கோடிமா மந்திரே சுரரைந்து
பேதமா மாகேசுரர்
பேதமொன் றில்லாத நந்திமா காளர்சொல்
பிருங்கியுட னைங்கரத்தோன்
பூணிடபர் நீள்கவுரி தண்டியெண் டிசைநாதர்
போற்றுந்த சாயுதங்கள்
பூமண்ட லத்திலுள தெய்வங்கள் வேதங்கள்
புகழ்கொண்ட தேவர்முனிவர்
காணவரு சிவராச தானியெனு நாகைவரு
கந்தசுவா மிவருகவே

கைகண்ட அடியர்பணி மெய்கண்ட வேலவன்
கருணையங் கடல்வருகவே. 54

### சிக்கல்

முக்கட்பு ராரியொடு சக்கரா யுதக்கடவுள்
முண்டகத் தவிசிருந்தோன்
மூவரும் சிரகர கம்பிதஞ் செய்துநம்
முருகன்ப ராக்கிரமனெனச்
சக்ரவா ளத்துடன் மிக்கநவ கண்டமும்
தருமட்ட குலகிரிகளும்
சத்தசா கரமும் கணத்தினிற் சுற்றிவரு
தாருகன் வாயினுதிரம்
கக்கிப் பதைத்துக் கிடந்தே யிருக்கக்
கடைக்கண் சிவந்தவேலன்
கற்பகா டவிதடவு மண்டபம் கோபுரம்
கனகமதில் நின்றிலங்கும்
சிக்கலம் பதிமேவு சிங்கார வேலனாம்
தேவர்நா யகன்வருகவே
திகழும்வெண் ணெய்ப்பிரா னொருபா
லுறைந்தமெய்ச்
செல்விபா லகன் வருகவே. 55

### எட்டிகுடி

இட்டமுறு பூதப்ப டைத்தலை மாமோக
மென்னுநித் திரையொழியவே
இருவருட னிந்த்ராதி யிமையோர்கள் முகமலரும்
இதயகம லமுமலரவே
துட்டக்கிர வுஞ்சகிரி மாயையிரு ளழியவே
துங்கப்பிர சண்டகோடி
சூரியர்க ளுதயமென வெற்றிவேல் விட்டருள்செய்
சுப்பிரமணி யன்வருகவே
மட்டுவிரி செந்தாம ரைத்தடஞ் சூழ்கழனி
வளர்செந்நெல் கன்னல்நிகராம்
வளர்கன்னல் பூகநிக ராங்கமுகு தெங்கொக்கும்
வளர்தெங்கு வானளக்கும்

எட்டிகுடி வாழ்குமர இமையோர்குழாம்பணியும்
　　இருபதாம்பு யன்வருகவே
　இபமா முகத்தனெனு மைங்கரவி நாயகற்
　　கிளையசண் முகன்வருகவே. 56

### திருமறைக்காடு

ஒருமேரு கிரியேக தந்தமென வெள்ளிமலை
　　ஒருகையிற் கொம்பென்னவே
　உயர்சக்ர வாளகிரி அரைஞா ணெனச்சேடன்
　　உதரபந் தனமென்னவே
தருமிரவி ஈராறு முகபடா மணியெனச்
　　சந்திர னங்குசமெனச்
　சலராசி யேழுமத சலமெனக் கடையுகச்
　　சண்டமா ருதமெனும்வளி
இருசெவி எறிந்திடும் காற்றெனக் கண்ணிலெரி
　　இலங்குகா லாக்கினியென
　எங்கும்வடி வாய்நின்று திருமறைக் காட்டினில்
　　இராமர்பின் னேதொடர்ந்து
வரும்வீர கத்திதீர்த் தருள்செயும் விநாயகன்
　　மகிழ்சகோ தரன்வருகவே
　மறைகணா ளும்பணியு முபயசர ணாம்புயன்
　　வள்ளிநா யகன்வருகவே. 57

### திருவிடைக்கழி

குருசரண ரொருநால்வர் போய்ப்போய்க் குழக்கன்று
　　கோவினைக் கூப்பிடுதல்போல்
　கோயில்தொறு மூர்பெரிய விண்ணினை
　　　　　　　　　　யளாவிடும்
　　கோடிதரு கயிலாயனைக்
கருணையுட னேகண்டு கண்டுசர்க் கரைநறை
　　கலந்தமுக் கனியின்மதுர
　கவிபாடு கின்றகரு வூர்ச்சித் தரைக்கண்டு
　　கன்றின்முன் தாய்வருதல்போல்
ஒருவடிவு காட்டியே திருவிடைக் கழியினில்
　　உகந்தநம் மைப்பாடென
　உல்லாச வானந்த வெள்ளத்துள் மூழ்கியவர்
　　உள்ளன்பு டன்பாடிய

திருவிசைப் பாமாலை சூடுமோ ரீராறு
திண்புயா சலன்வருகவே
திருக்குரா நீழலில் சிவஞான யோகமருள்
சித்தகுரு வேவருகவே. 58

## பிரம்பூர்

மரகதப் பச்சையொளி மயில்வாக னன்வருக
வளர்வெற்றி வேலன்வருக
வருகுக் குடத்துவசன் வருகவென் னைப்பெற்ற
வள்ளிமண வாளன்வருக
வரதவப யன்வருக தெய்வானை குமரி
மணவாளன் வருகவருக
மலைமக ளுடன்கங்கை யொருமக னெனப்பெற்று
மகிழுங் குழந்தைவருக
பரவிந்து நாதமுதல் நவபேத மேவருக
பகரெண் குணத்தன்வருக
பரையாதி பஞ்சசத் திகள்கிரண ரவிவருக
பகரகண் டாகாரமாம்
பிரமமா மேகசிவ ஞானவா னந்தமெய்ப்
பெருவாழ்வு வருகவருக
பிரம்பூரி லடியர்க் கிரங்குசெவ் வேலனாம்
பெரியபெரு மாள்வருகவே. 59

## மாயூரம்

ஐந்தரு வெனுங்கற்ப கச்சோலை வருகஅறி
வானந்த வெள்ளம்வருக
அனந்தகல் யாணமே ருகிரி வருகவே
அங்கையா மலகம்வருக
சிந்தையில் மகோதயஞ் செய்திருளை நீக்கிடும்
சிவஞான பானுவருக
செனனவெப் பந்தணிக் குங்கோடி மதிவருக
தித்திக்கு மமுதம்வருக
எந்தையே வருகஎனை ஈன்றதா யேவருக
என்கண்மணி வருகவருக
எண்ணனந் தங்கோடி மன்மதா காரமாம்
என்றுமிளை யோன்வருகவே

மைந்தனே வருகமணி யேவருக வள்ளலே
வருகவைப் பேவருகவே
மாயூர நகர்மேவு கேயூர மணிபுய
மயூரவா கனன்வருகவே. 60

### தருமபுரம்

உம்பர்பணி யாரூர னருளினா லானந்த
ஒளிவடிவ மானகுரவன்
ஒருசெந்தி லம்பதியி லுன்னருளி னாற்பாடும்
உயர்குமர குருபரமுனிக்
கம்புயத் தாள் சென்னி சூடினோன் எலிபூணு
அரவுபோத் துகுயில்கிளி
அத்துவித மாகவே சத்திநிரு வாணமெனும்
அருள்ஞான தீட்சைசெய்தோன்
எம்பவ மகற்றினோ னெண்ணிலா அடியவரை
இன்பவா ரிதியில்வைத்தோன்
எழில்வேள்வி மலையிலோ ரம்பையெங் கேயென்
றியம்பியே திருமுனிற்கும்
சம்பந்த னுக்கருள்செ யென்றுவள் ளிக்கருள்செய்
சைவநா யகன்வருகவே
தருமையம் பதிமுருக ஒருநாலு பாதமுந்
தருகுமர குருவருகவே. 61

## 7. அம்புலிப் பருவம்

### வழுவூர்

குழுவுடைய பதினாறு கலைவடிவு சிவன்முனம்
குறைவறக் கேட்டிடுதலால்
குளிரமுத மதிநிலவு புலவனென் றென்றுநற்
குவலயங் கொண்டாடலால்
வழுவையம் பலவனருள் பெற்றவ னென்னலால்
வானவர்க ளெந்தநாளும்
வளரிளங் குழவியென விசுவநா தன்சடா
மகுடத்தில் விளையாடலால்
ஒழுகுமொளி யாலறிவி லிருளெலாம் நீக்கலால்
ஒப்பிலா இவனோடுனை

ஒப்பிட்டுரைப்பார்கள் கவிராச ராசர்கள்
உனக்கொத்த துணையிவன்காண்
அழகுவழு வூரினுறை உமைதரு குழந்தையுடன்
அம்புலீ யாடவாவே
அனந்தகல் யாணகுண னெங்கள்கும ரேசனுடன்
அம்புலீ யாடவாவே. 62

## செம்பொன்பள்ளி

தேசுமிகு தேவர்களி னொருவனீ இந்த்ராதி
தேவரெல் லாம்கூடியே
சிவபரப் பிரமமிவ னேயென்று பூசித்த
செம்பொற் பதாம்புயத்தோன்
வாசமல ரோனைமுன் குட்டியே சிறைவைத்து
மண்டுமண் டம்படைத்தோன்
மாலுமய னுந்தேடி அடிமுடிகள் காணாத
வளர்பரஞ் சோதிமைந்தன்
தாசரடி யார்தாச னெனவிருந் திடுமுனைத்
தன்பெருமை யறியாமலே
தனையொத்த பேரெனப் பிள்ளைவிளை யாட்டினைத்
தருமிளம் பருவத்தினால்
ஆசையோ டழைத்தன னெங்கள்கும ரேசனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுசெம் பொன்பள்ளி யாறான னத்தனுடன்
அம்புலீ யாடவாவே. 63

## ஆகமபுராணம்

விரிஞ்சன் பெருஞ்சிறை விடுத்தபெரு மாள்கருடன்
மேல்வரும் பெரியபெருமாள்
வேண்டவே தேவர்சிறை மீட்டபெரு மாள்மதுரை
மேவுசங் கப்பலகைவாழ்
கரைஞ்சவன் பானநக் கீரர்சிறை மீட்டவர்சொல்
கவிமாலை கொண்டபெருமாள்
காயப்பெரு ஞ்சிறை யொழிக்கவே உன்னையும்
காசிதனில் வைத்தபெருமாள்
பரஞ்சுட ரழைத்தவுடன் விளையாட வேமனம்
பதறிநீ யோடிவந்தால்

பயங்கொண்ட கட்செவியின் வெங்கரள வல்லிருள்
பரந்தபற் பகுவாய்க்குறை
அருஞ்சிறை யொழித்தாள்வ னெங்கள்கும ரேசனுடன்
அம்புலீ யாடவாவே
ஆகம புராணமலி யோகமுரு கேசனுடன்
அம்புலீ யாடவாவே. 64

### சீகாழி

முழுமதிக் கடவுளென வுளவிருட் கறையுடன்
முயற்கறையு மில்லானென
முடங்குமொரு கூனுமில் லானென்ன வொருசீவன்
முத்தனென வுன்னைவைப்பன்
குழவிவடி வானவன் தமிழ்மறை யுரைத்தவன்
கூடல்வரு கோமாறன்முன்
குறைமதி யொழித்தவன் நிறைமதி யளித்தவன்
கூனிமிர வேபாடினோன்
பழுதமண் கறையொழித் தோனின்ப வாரிதி
பரிந்துவிளை யாடவைத்தோன்
பரசமய கோளரிமெய் யெந்தைபர சிவனே
பரப்பிரம மெனநாட்டினோன்
அழுதன்னை யுமைமுலைப் பாலமுத முண்டவனோ
டம்புலீ யாடவாவே
அமரர்பணி காழிவரு குமரகுரு நாதனுடன்
அம்புலீ யாடவாவே. 65

### சுவேதவனம்

தண்டரள மெறிதிரைப் பாலாழி சததளத்
தாமரை சிங்காதனம்
தருகற்ப கக்காடு சங்கநிதி பத்மநிதி
தந்திடும் சிந்தாமணி
எண்டிசா முகமுடன் சந்திரசூ ரியர்கள்பதம்
இந்திரபு ரோகிதர்பதம்
ஈராறு ராசிபத மனுமன்னர் தம்பதம்
எண்ணிலா தோர்பதங்கள்
தொண்டுசெயு மன்பருக் கென்றே படைத்தனன்
தோன்றாத துணையாமிவன்

தோன்றுறுந் துணையென்ன முன்னின் றழைத்தனன்
துண்ணென்ன ஓடிவந்தால்
அண்டங் கொடுத்தருள்வ னெங்கள்கும ரேசனுடன்
அம்புலீ யாடவாவே
அவனிபுக ழுஞ்சுவே தவனமுறை வேலனுடன்
அம்புலீ யாடவாவே. 66

## திருக்கடவூர்

சக்கிரவா ளத்தையரை நொடியில்வலம் வந்தவன்
சலராசி யேழுமேக
சமுத்திரம தாக்கினான் விறலினால் வேள்விவரு
தகரைப் பிடித்தேறினான்
பக்கமுறு சேடனைச் சாட்டையென மேருகிரி
பம்பரம தாயாட்டினான்
பானுவின் தேரிலுனை வைத்துனது தேரின்மேற்
பானுவை எடுத்துவைத்தான்
திக்கெட்டும் வாழ்கிரி பிடித்தொன்ற னோடொன்று
சினமாக முட்டவிட்டான்
சேயுன்னை விளையாட வேயழைத் தானிவன்
திருமுன்வா ராதிருந்தால்
அக்கணம் கோபம்வைப் பானெங்கள் குமரனோ
டம்புலீ யாடவாவே
அருள்கால காலனுறை கடவூரில் வேலனுடன்
அம்புலீ யாடவாவே. 67

## திருத்தருப்பூண்டி

இவனழைத் தானுனைத் தன்னோடு விளையாட
இப்போது வாராவிடில்
ஏதிவன் திருவுளத் தெண்ணுமோ குற்றம்நீ
எங்கள்மேற்சொல்லவேண்டா
புவனநா யகனிவ னழைத்துமுன் வாராத
பொங்குவெஞ் சூரனுயிரைப்
புலிங்கமெறி கோபவட வைக்கிரைய தாக்கினோன்
புகழ்கொண்ட பானுகோபன்
உவரிநிகர் தானையந் தலைவரா மவுணர்கள்
உரங்கிழித் தேயுதிரநீர்

உகந்தவெள் ளத்தைநிக ராகவே வைத்தவன்
உயர்வீர வாகுதேவன்
அவனையொரு தம்பிமகிழ் தூதனென ஆண்டவனொ
டம்புலீ யாடவாவே
அகத்திய ரருச்சித்த பூண்டிவரு வேலனுடன்
அம்புலீ யாடவாவே. 68

## பாவாலி

தாயினிலு மன்புடைய சண்முகன் காணிவன்
தன்னுடன் விளையாடநீ
சாமபே தத்துடன் யாவரும் விரும்பிவரு
தானமெல் லாமுரைத்தோம்
நீயிவன் தனையொரு குழந்தையென் றெண்ணிவா
னின்றுவா ராதிருந்தால்
நிருமலன் செய்தண்ட மோதுவோ மெங்கள்மேல்
நிட்டூர மோதவேண்டாம்
பாயுந்தி ரைக்கடல்க ளேழென்ன வுதிரம்
பரக்கவே பாரினின்று
பங்கயச் செங்கையொன் றாலண்ட முகடுறப்
பந்தாயெ டுத்தெறிந்தே
ஆயிர முகங்களுள சிங்கனைக் கொன்றவன்
அம்புலீ யாடவாவே
அத்தனருள் பாவாலி முத்துக்கு மாரனுடன்
அம்புலீ யாடவாவே. 69

## பேரூர்

தரைக்கண்ணு மிந்திரன் கண்ணுமுன் கண்ணுமுயர்
சக்கிரவா ளத்தின்கணும்
தருமட்ட கிரியெனுங் குலகிரிக ளின்கணும்
சத்தசா கரநீர்க்கணும்
கரைக்கண்ணு மெண்டிசா முகமொடிர விக்கணும்
கருதுதண் மதியின்கணும்
காற்றுமுகி லின்கணு முடுக்கள்கண் ணும்பெரிய
கனகமா மேருவென்னும்
வரைக்கண்ணு மப்புறத் தண்டங்க ளின்கணும்
மயேந்திர புரத்தின்கணும்

மண்டும்பிர சண்டமா ருதமென்ன இடசாரி
வலசாரி யாகவந்தே
அரைக்கணிமை யிற்சூர பத்மனைக் கொன்றவனொ
டம்புலீ யாடவாவே
ஆராத கருணைமிகு பேரூரில் வேலனுடன்
அம்புலீ யாடவாவே. 70

**மயிலம்**

பொங்குந்தி ரைக்கடல்க ளேழுமேழ் தீவுமுயர்
புகழ்பூத ரங்களெட்டும்
பொன்மேரு கிரியுமணி மயமாக நின்றிலகு
பூச்சக்கர வாளகிரியும்
மங்குல்தவ ழண்டமுக டுந்தலையும் வேறுமுற
வருசூரன் மாவானநாள்
வளரனந் தங்கோடி யண்டங்கள் தனதுருவின்
வருரோம முனையினிற்க
எங்குந்தன் வடிவென விசுவரூ பங்கொண்ட
ஏகநா யகன்பிரமமிங்
கிறப்பொடு பிறப்பிலான் நம்பிறவி மாற்றவே
ஈசனொரு மதலையானோன்
அங்கைகொண்டெட்டிப் பிடிக்குமுன் முருகனுடன்
அம்புலீ யாடவாவே
அயில்வேலன் மயிலம்வரு மயில்வா கனத்தனுடன்
அம்புலீ யாடவாவே. 71

## 8. சிற்றிற் பருவம்

**வயலூர்**

முற்று நிறைந்த பரமசிவன்
முன்னே கலியா ணஞ்செய்த
முழுது முடையா ளேவல்செய்ய
முளரிப் பொகுட்டில் வீற்றிருந்தே
உற்ற வன்னக் கொடிநாட்டி
யொண்பா லன்னம்தமக்கேற
உகந்து சமைக்கும்பிரமன்முத
லுயிரா மனந்தந் தாதிகள்தாம்

பற்று மிகுந்து விளையாடப்
பாரா வார மேழுடுத்த
பாரேழ் முதலா நாதாந்தம்
பல்லா யிரமாங் கோடியண்டச்
சிற்றி லிழைத்த உமைமகனே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெல் மிகுந்த வயலூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 72

### கங்கைகொண்ட சோழபுரம்

மங்கை பாகர் பெருவுடையார்
மகிழக் கருவூர்ச் சித்தரவர்
வார ணாசி நிறைகங்கை
வானாற தற்குட் குடங்கள்வைப்ப
இங்கு ளாழ்ந்த விடத்துளந்த
இலக்க கங்கைக் குடங்கள்வர
எடுத்தே யாட்டி நிவேதனத்தை
இன்போ டருத்திச் சராசரங்கள்
எங்கு நிறைந்த படிகாட்ட
இலங்கு மகத்தாம் விமானஞ்செய்
எழிலார் சோழர் சித்தர்சென்னி
ஈசர் செங்கை வைத்தருளும்
கங்கை கொண்ட சோழபுரக்
கந்தா சிற்றில் சிதையேலே
கருணா நிதியே சிறியேஞ்செய்
கவினார் சிற்றில் சிதையேலே. 73

### திருநாரையூர்

முகில்போற் பொழியு மூவர்திரு
முறைகண் டெடுக்கச் சோழேசன்
முக்கா லத்தி னியல்புணர்ந்த
முத்தர் நம்பி யாண்டார்தாள்
புகழ வங்கே நிவேதித்த
பொற்பார் மோத காதியெல்லாம்
பொருந்தத் துதித்கை யாலெடுத்துப்
பொசிக்க வவர்தாம் பின்கேட்க

மகிழைங் கரத்தோன் கனகசபை
வாயு திக்கி லிருக்குதென்றே
வந்தே யருளத் திருமுறையால்
வைய மெல்லாம் வாழவைத்துத்
திகழு நாரை யூர்க்குமரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வக் குறப்பெண் மணவாளா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 74

## குன்றத்தூர்

காக்க நம்பி யாரூரர்
கவினார் திருத்தொண் டத்தொகைக்குக்
காரார் சோலை நாரையூர்க்
கரிமா முகத்தோன் பொருளுரைக்க
ஆக்க மெழுபத் தின்மூவ
ரணிசேர் கதையெல் லாமடக்கி
அறைந்த நம்பி யந்தாதி
அரிய சிற்றம் பலத்துள்ளே
தூக்கும் பதத்தோன் திருவாக்குத்
தோன்ற வுலகெல் லாமென்று
சொல்ல வெல்லா மறிந்துதிருத்
தொண்டர் புராணம் விரித்துரைத்த
சேக்கி ழார்வாழ் குன்றத்தூர்ச்
சேயே சிற்றில் சிதையேலே
தெய்வ யானை மணவாள
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 75

## எருக்கத்தம்புலியூர்

வைய முய்ய மதுரேசன்
வந்து பலகை யிடப்பெற்றோர்
மறைநூற் சம்பந் தப்பெருமான்
வடிவா நீபா டும்பதிகம்
கையில் யாழ்கொண் டிசைபாடும்
கருணைக் கடலாம் திருநீல
கண்ட ராகும் பெரும்பாணர்
களிகூர்ந் திருந்த பதிக்குமரா

தையல் பாக னருள்பெறவே
தடமொன் றமைத்துத் தடமேல்பால்
தண்பூங் கோயில் சமைத்தருட்கை
தன்னால் மகிழ்ந்து சிவபூசை
செய்யு மெருக்கத் தம்புலியூர்ச்
சேயே சிற்றில் சிதையேலே
செந்தா மரைப்பூஞ் சிற்றடியால்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 76

## விருத்தாசலம்

அத்தா வமரர் தமக்கிடர்செய்
அறிவி லாக்கிர வுஞ்சகிரி
அசுரர் மடவார் சிறுவீட்டை
அழித்த தெனவே பரசமயர்
பித்தா பாச மொழிந்தீசன்
பெருமை புகழு மடவார்கள்
பெருகி வாழ நின்னடியார்
பெம்மா னின்னா லயங்களெல்லாம்
முத்தா நதியின் மணலாலே
முயன்றே யமைத்துத் திருக்கோயில்
முருகா உன்னை ஐங்கரனை
முக்கட் பெருமான் திருவடியைச்
சித்தா முமைகங் கையைப்பூசை
செய்வோஞ் சிற்றில் சிதையேலே
செல்வ விருத்த கிரிக்குமரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 77

## திருநாவலூர்

தேவ தேவன் சிவனையன்றித்
திருமா லயன்வா சவனமரர்
திருப்பாற் கடலைக் கடைந்திடவே
சினந்து வெங்கா ளந்துரத்த
ஆவி விடுமென் றரிபிரமர்
அமரர் கோமா னமரரெல்லாம்
அஞ்சி யோடி வந்திடுநாள்
அகில நாதன் திருக்கயிலை

மேவுங் கண்ணா டியிற்றோன்றி
வெங்கா ளத்தை யெடுத்தளித்த
விமல வருட்சுந் தரனுலகம்
விளங்கத் திருவவ தாரஞ்செய்
நாவ லூர்வாழ் குமரகுரு
நாதா சிற்றில் சிதையேலே
நாங்க ளுனக்கு வழியடியோம்
நாட்டுஞ் சிற்றில் சிதையேலே. 78

## திருவெண்ணெய்நல்லூர்

பொய்கண் டகன்ற அம்மையப்பர்
புகழ்சேர் மைந்தன் தனைவேண்டிப்
புகலிக் குழந்தை திருமுறையிற்
போற்றிக் கயிறு தனைச்சாத்திக்
கைகொண் டவர்கள் தொழுதேவெண்
காட்டின் திருப்பாட் டெடுத்துள்ளம்
களித்தே வந்து முக்குளநீர்
கண்டே படிந்தோர் பாலுதித்து
மைகொண் டிலங்கு மணிகண்டன்
வளருங் கயிலைத் திருநந்தி
மறையா கமத்தைக் குழந்தையெனும்
வடிவாய்த் தமிழ்செய் சுவேதவன
மெய்கண் டவன்வாழ் வெண்ணெய்நல்லூர்
வேலா சிற்றில் சிதையேலே
விளையாட் டோரைந் துடையாய்நீ
விளங்குஞ் சிற்றில் சிதையேலே. 79

## திருவாமாத்தூர்

எம்பால் வந்தீ ரிரட்டையர்நீர்
எம்மைப் பாடு வீரென்றே
எம்மா னருளத் திருமுன்னே
இருந்தே கலம்ப கம்பாடச்
செம்பா கஞ்சேர் கலம்பகத்திற்
சிறந்த கங்கை மேற்கரையில்
திகழா லயங்கொண் டாரென்று
செப்பப் புலவ ரதேதென்ன

நம்பா நாங்க ளுரைத்தபடி
நதியைக் கீழ்பால் திருப்பென்ன
நாத னருளால் வடக்குவிட்டு
நண்ணுங் கீழ்பாற் பெருகிவரும்
பம்பா நதிசூழ் ஆமாத்தூர்ப்
பாலா சிற்றில் சிதையேலே
பச்சை மயில்வா கனனுன்னைப்
பணிவோஞ் சிற்றில் சிதையேலே. 80

### திருவதிகை

மெய்யன் பாகி யொருதாதி
விழவார் பழனத் துமாபதியே
விளங்கென் னுயிர்நா யகனென்று
விழிநீர் பொழியத் தினம்பாடிக்
கையில் வீணை யுடனுலகம்
காணக் கயிலை மேவியுமை
கணமா கச்சொன் மாலையென்றே
கல்லுங் கரையப் பதிகஞ்சொல்
ஐயன் திருநா வுக்கரசின்
அருட்கை யுழவா ரப்பணியும்
அம்மை யெமையாள் திலகவதி
யார்தம் பணியும் சிவன்திருமுன்
செய்யும் அதிகை மாநகர்வாழ்
சேயே சிற்றில் சிதையேலே
சேவற் கொடியாய் திருப்பதத்தால்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 81

## 9. சிறுபறைப் பருவம்

### திருவருணை

தருப்பொலியு மமரா பதிக்கர சானவன்
சபையில்நட ராசரங்கைத்
தமருகத் தெழுசத்த சூத்திர வியாகரண
சாகரம் தான்விரித்தோன்
பொருப்புயர் பரங்கிரியின் மறுகினன் மெய்க்கவிசொல்
பொய்யா மொழிப்புலவராய்ப்

பொன்போ லெனுங்கவியுன் முன்பாட வுன்பாடல்
பூவுலகி லேகொண்டுமேற்
கருப்பவ மகற்றவரும் அருணகிரி நாதராய்க்
கந்தநின் னருள்பெற்றபின்
கற்பகக் கனிரசக் கடலமுத வாரிதேன்
கடலென மகிழ்ந்துபாடும்
திருப்புகழ் முழக்கமணி ஈராறு செவியனே
சிறுபறை முழக்கியருளே
தென்னருணை வளர்கோ புரத்துவாழ் முருகனே
சிறுபறை முழக்கியருளே. 82

## திருக்கழுக்குன்றம்

உருக்கமுள வொருதாதி நாச்சிமுத் தென்னுமவள்
ஒருவை ணவன்பாடிய
உயர்கழுக் குன்றமா லைப்பிரபந் தத்தில்நா
ளொன்றினுக் கொருகவிதையா
சருக்கரை கலந்தபா லமுதமென மலையின்மேல்
தம்பிரான் முன்புபாடச்
சண்டமா ருதமழையி னாற்றப்ப வொருதினம்
தாதிதான் பாடஈசன்
அருக்கனா யிரகோடி யெனவிடையில் வரவிடையின்
அடியைப் பிடிக்குமவளோ
டவளடி பிடிக்குமவ் வைணவனை யுங்கொண்டு
போய்க்கயிலை வாழவைக்கும்
திருக்கழுக் குன்றமெனும் வேதகிரி வருமுருக
சிறுபறை முழக்கியருளே
சிறியனேன் கேட்கவே யருணாத வொலியெனும்
சிறுபறை முழக்கியருளே. 83

## திருவிரிஞ்சை

உவமைதா மானசிறு மறையோ ரனேகரில்
ஒருவர்சிவ லோகமுறவே
உம்பர்கோன் பூசைக் கவர்க்கா ளிலாமையால்
ஊரிலுள் ளாரவர்மனை
யவள்முன்பு வந்துவந் துனதுமுறை பங்கிடென
அன்னையாள் முன்போயழ

அமலன்வளர் பாலனுக் கருள்செய்து முன்னூல்
அணிந்துநீ யின்றுநம்மைக்
குவலயத் தோர்முன்பு பூசைசெய் யென்னவே
குழந்தையெட் டாமல்நிற்பக்
குழந்தைவே லாயுத னுன்பூசை யென்னக்
குனிந்தவன் பூசைகொண்ட
சிவன்வாழ் விரிஞ்சிபுரம் வருகுமர நாயகா
சிறுபறை முழக்கியருளே
செகதண்ட நின்றுபணி தேவர்சே னாபதி
சிறுபறை முழக்கியருளே. 84

### வள்ளிமலை

இந்துவடி வாங்கருணை அன்னைசுந் தரவல்லி
எம்மையாள் அமுதவல்லி
என்றேப யோததியின் நாகமெத் தைக்குள்
இரட்சைபுரி வோன்மகளிராய்
வந்தமுத வல்லிமுன் னிந்திரன் மகளாக
பற்றிளைய வல்லிகுறவர்
மகளாய் வளர்ந்திட மறைக்கிழவ னென்னவே
வலியதண் டூன்றிவந்து
கொந்தலர் கடம்பநீ கோடிமன் மதர்கள்நிகர்
கும்பனென முன்னின்றவள்
குற்றேவல் செய்திடத் தோழியுட னுள்ளம்
குளிர்ந்தம்மை காத்திருந்த
செந்தினைப் புனம்வளரும் வள்ளிமலை வேலனே
சிறுபறை முழக்கியருளே
தெய்வக் குறத்தியொடு விளையாடி நின்றவன்
சிறுபறை முழக்கியருளே. 85

### திருத்தணிகை

ஒருத்தியென வள்ளிகலி யாணமும் செய்துபின்
னுற்றிருந் தருள்மாமலை
உமைக்கர னுரைத்ததென வள்ளிக் கனைத்தையும்
உகந்தே யுரைத்தருள்மலை
மருத்தங்கு நீலமலர் மூன்றுமுப் போதினும்
மகிழ்ந்தே தினந்தருமலை

வள்ளலுனை யர்ச்சித்து வாசவன் வெள்ளானை
வாங்கக் கொடுத்தருள்மலை
கருத்தங்கு பவமெலாந் தூரத்தி லேநின்று
கண்டோர்க் கொழித்தருள்மலை
கண்ணுதலை யெந்தைநீ சிவலிங்க வடிவினில்
கண்டுபூ சித்திடுமலை
திருத்தணி மலைக்குமர ஈராறு கைகொண்டு
சிறுபறை முழக்கியருளே
தினநீல மலர்மேவு பன்னிரு புயாசலா
சிறுபறை முழக்கியருளே. 86

## குமரகோட்டம்

பொன்குலவு மண்டமா யிரத்தெட்டை யாண்டதும்
பொன்னாட ரேவல்செய்யப்
புகழ்கொண்ட சூரபத் மாவா யிருந்ததும்
பொய்யென்று விட்டருளினால்
என்கண்ணி னடுவிலும் இமையோர்கள் முடிமேலும்
எந்தைதா ளின்கீழும்வந்
திறந்தநற் கற்பத்தில் நிற்குமயில் நின்றிட
இதற்குமுன் னின்றிடுமயில்
உன்கமல பாதத்தி லத்துவித மாகியே
உல்லாச ஆனந்தமாய்
ஒழியாம லேநிற்க வர்ச்சிக்க முத்தியருள்
உபயசர ணாம்புயத்தாய்
தென்கச்சி நகரிற்கு மாரகோட் டத்துவேள்
சிறுபறை முழக்கியருளே
செகத்தில்முப் பத்திரண் டறம்வளர்த் தவள்மகன்
சிறுபறை முழக்கியருளே. 87

## திருமயிலை

உன்மலர்க் கையிலங் கனிவாங்கி யேபுசித்
துலகநீ தியைவிளக்கி
ஓங்குமும் முடியரசர் வந்துபணி யப்புவி
யுலாமவ் வைக்கிளையவர்
கன்மமல மாயையிரு ளிரவிமுன் னிருளெனக்
காணாம லேயவன்மெய்க்

காளியுட னாடும்பிர சண்டதாண் டவனுண்மை
கண்டுமா லயனாதியோர்
நன்மையென வோதினார் நாட்டறம் பொருளின்ப
ஞானமா ரீரிரண்டும்
ஞாலத்து ளோரறிய வேதந் தமிழ்செய்த
ஞானவள் ளுவர்வாழ்பதி
தென்மயிலை யம்பதியில் வருகுமர நாயகா
சிறுபறை முழக்கியருளே
திகழ்வாயி லாரென வெனக்கருள் விளங்கவே
சிறுபறை முழக்கியருளே. 88

## திருவொற்றியூர்

பொருளுற்ற வருட்குழவி வடிவாகி இடைமருதர்
புகாரெனுந் திகழ்காவிரிப்
பூம்பட் டினத்தெம்மை யாளும்வெண் காடர்தம்
புதல்வரென வேபுகுந்து
கருவுற்ற பாசமற மெய்க்குரவ னாகியே
கருணைக் கடைக்கண்வைத்துக்
காதற்ற வூசியும் வாராது காணுங்
கடைவழிக் கென்றருளவே
பருவத்தில் மண்ணாசை பெண்ணாசை பொன்னாசைப்
பற்றுக ளறத்துறந்த
பட்டினத் துப்பிள்ளை சிவலிங்க வடிவுறப்
பாடிடும் பாமாலைகொள்
திருவொற்றி யூர்மேவி வாழ்குமர நாயகா
சிறுபறை முழக்கியருளே
சிறியனே னாணவ விருட்பறவை யோடவே
சிறுபறை முழக்கியருளே. 89

## திருக்காளத்தி

முன்கருணை யாமலை சிலந்திகா ளன்யானை
மூவடிவ மாகியமலை
மூவரும் வலங்கொண்டு வந்துதே வாரங்கள்
முன்னின்று பாடியமலை
உன்கமல நயனவருள் பெற்றநக் கீரர்தாம்
உயர்முத்தி சேர்ந்திடுமலை

ஒருபிரமர் மணிகண்ட சித்தரா யர்லயம்
உண்டாக்கி வைத்திடுமலை
பொன்குலவு மலர்கொண்டு வேடர்கண் ணப்பர்செய்
பூசையை யுகந்திடுமலை
புகழாத வைணவர்தம் விழிமறைத் துப்பின்பு
புகழவிழி தந்திடுமலை
தென்கயிலை யென்னவரு காளத்தி மலைமுருக
சிறுபறை முழக்கியருளே
செகதண்ட மீன்றஞா னாம்பிகை குமரனே
சிறுபறை முழக்கியருளே. 90

### திருவக்கரை

கார்மேவு மவுணக் கருங்கங்குல் விடியவே
கடவுளர்க ளொளிபெருகவே
கந்தநின் செயசங்கு கோதண்ட நாணொலி
கவின்றுடி முழக்கியதெனப்
பார்மேவு வெள்ளையுரு நீசரொடு பஞ்சமா
பாதகமி லேச்சரான
பகையிரு ளழிந்தோட உனதுசிவ சமயமாம்
பானுவந் துதயமாகக்
கூர்மேவு நகமுள்ள சேவற் கடுங்குரல்கள்
கொடியினின் முழங்கவீரக்
கோபமுள சித்திரக் கலாபமயில் வாகனம்
கூவுபே ரொலிமுழங்கச்
சீர்மேவு திருவக் கரைக்குமர வேலவா
சிறுபறை முழக்கியருளே
சிட்டபரி பாலனம் துட்டநிக் கிரகஞ்செய்
சிறுபறை முழக்கியருளே. 91

## 10. சிறுதேர்ப் பருவம்

### சிவசுப்பிரமணியம்

அவனிக்கு ளேகுருடு மலடுசெவி டூமைமுடம்
அருவருத் திடவேமிக
அழுகிவரு குட்டங்கள் வாதபித் தஞ்சயம்
சீரணமி ளைப்பொடிருமல்

நவமுற்ற கண்படல முன்மத்தம் வயிறுவலி
நாலாமு றைச்சுரமுதல்
நாலா யிரத்துமே னானூ றுடன்கூடும்
நாறபதுட னெட்டுநோயும்
பவசத்த சாகரமு முற்றபே ரெவருமுன்
பத்தசன முண்டெறிந்த
பரிகலச் சேடத்தி னாலொழித் தானந்த
பரமசுக மாகவைக்கும்
சிவசுப்பிர மணியத்தில் வருசுப்பிர மணியனே
சிறுதே ருருட்டியருளே
தேர்ப்பிரம் பாற்பிணி யொழித்தருள் வைத்தியா
சிறுதே ருருட்டியருளே. 92

## அரிப்பாடி

உன்னருட் சந்நிதியில் வாய்தற் கபாடமேல்
ஒண்திருக் காப்பின்றியே
உயர்பூசை செய்யத்தி றந்திருந் திடும்வேலை
யுஞ்சரித் திடும்வேளையும்
தன்னெல்லை வட்டத்தி லிரவிலும் பகலிலும்
சஞ்சரித் திடுமுயிர்களைத்
தரும்செம் மணிக்கண் சிவந்திடச் சீறிமுன்
தன்பலமெ லாங்காட்டியே
பன்னகம் பகுவாய் திறந்தோடி வந்துமேற்
பல்லழுந் தத்தீண்டினும்
பலவருத் தஞ்சோக மரணமொன் றின்றியே
பாரின்மேல் வாழவைக்கும்
தென்னரிப் பாடிவா ழொருகுமர நாயகா
சிறுதே ருருட்டியருளே
சேரர்மெய்ச் செங்கோல் செலுத்துமலை நாடனே
சிறுதே ருருட்டியருளே. 93

## திருவஞ்சைக்களம்

புகழ்கொண்ட மலைநா டதற்குளுன் னூரினில்
பூதநா யகனருளினால்
பூவுலகு தொழுமால காலசுந் தரரண்டர்
பொன்னுலகி லுவாவின்மேலும்

பகர்சேர மான்குதிரை மேலும்வட கயிலைமேற்
பரமசிவ னுங்கவுரியும்
பரமகுரு நின்னோடு வீற்றிருப் பதுதொழப்
பயணம்பு றப்படும்போ
தகிலத்து மாயைமூ விருளையு மறத்துறந்
தவர்பின் தொடர்ந்துபோனால்
அவர்க்கடிமை யாகலா மவர்பின்பு போகாமல்
அவமே யிரந்தலைந்தேன்
திகழுமஞ் சைக்களத் தப்பனரு ளாறுமுக
சிறுதே ருருட்டியருளே
சிறியனேன் விழிகாண இப்போது முருகநீ
சிறுதே ருருட்டியருளே. 94

## திருக்கோகரணம்

ஏகநா யகன்கயிலை இமையவர்கள் தம்பிரான்
இராவண னுள்ளமகிழ
ஈந்துசிவ லிங்கமொன் றீதுதரை வையா
திலங்கையிற் கொடுபோவெனச்
சாகரத் தின்கரையில் வரும்வேளை யொருபிரம
சாரியாய் வாங்கியதனைத்
தரைவைக்க அதுசத்த பாதாளம் வேரூறச்
சமர்செயுமி ராவணன்றன்
ஆகமொரு பந்தென வெடுத்தண்ட கூடமுற
அம்மானை யாடிவிளையா
டதிபலப ராக்கிரம விநாயகன் மகிழ்தம்பி
அம்பரவை ரத்தினாகரச்
சீகரம் வந்துலவு கோகரணம் வாழ்முருக
சிறுதே ருருட்டியருளே
சிவன்மகா லிங்கபெல லிங்கமூர்த் தியருள்குக
சிறுதே ருருட்டியருளே. 95

## திருச்சயிலம்

உருச்சிகர தரிசனஞ் செய்தோர் பிறப்பொழித்
துயர்முத்தி யுதவுசயிலம்
உனக்குமயில் தந்திடக் காசிபன் தனைமுன்னம்
உயிரினை விடுத்தசயிலம்

கருச்சுமைமயி தென்றுடலை யருவருத் திடுபெரியர்
காயங்கள் நீக்குசயிலம்
கந்தநீ தந்தையைப் பூசித்த சயிலமுன்
கங்கைசூழ் காசிமகிமை
அருச்சனை செயுந்தலைவி மகிழவே கும்பமுனி
அன்போ டுரைத்தசயிலம்
அனந்தமடி யார்சிறிய சிலையெலாம் சிவலிங்க
மாமென் றணிந்தசயிலம்
திருச்சயில மலைவா ழருட்டரும நாயகா
சிறுதே ருருட்டியருளே
தென்மருதி லிடைமருதில் வடமருதில் வாழ்முருக
சிறுதே ருருட்டியருளே. 96

### கார்த்திகைமலை

தவசுநீ செய்தரனை யர்ச்சித் திருந்தகிரி
தவசுநீ செய்திடுதலால்
தரைமாதர் விண்மாத ரொருவரணு காதகிரி
சகமறிய வும்புசித்துப்
பவமொழித் தருள்பெறவு மையநீ யுண்டசெம்
பவளவாய் நின்றுவழியும்
பைம்பொனிமை யாசலத் துமையம்மை திருமுலைப்
பால்திரண் டேவளர்கிரி
அவனிபுகழ் காசிகண் டக்கதையை நீமுன்
பகத்தியர்க் கோதியகிரி
அம்பொதிய முனிபன்னி யுடனுன்ப தாம்புயம்
அர்ச்சித்து வாழ்த்தியகிரி
சிவசாமி கார்த்திகை யெனுங்கிரியில் வாழ்முருக
சிறுதே ருருட்டியருளே
சிவகாமி நாதர்பர தத்துவ மெனுங்குமர
சிறுதே ருருட்டியருளே. 97

### உச்சினி-அவந்திகை

கற்பக மெனுங்காசி புரிகாஞ்சி புரிதுவா
ரகாபுரி அயோத்தியாபுரி
கருதுமது ராபுரி கவின்கொள்மா யாபுரி
கலந்தவோ ராறுபுரியோ

டற்புதமி குந்திடும் தன்னோடு சத்தபுரி
யாகியே நின்றருள்புரி
அரனருளி னாற்பஞ்ச பாண்டவர்கள் விக்கிரம
வாதித்த ரேயாதியாப்
பொற்புடைய மன்னவர்க ளாண்டபுரி வாகீசர்
போற்றுபுரி காளிதாசன்
போற்றுமா காளிபூ சித்தபுரி எண்ணிலாப்
புண்ணியர்கள் வாழ்ந்திடுபுரி
சிற்பரா நதிபெருக வந்திகா புரிமுருக
சிறுதே ருருட்டியருளே
செகமெலா முச்சினி யென்னவரு புரிமுருக
சிறுதே ருருட்டியருளே. 98

**பிரயாகை**

சறுவசக மும்பெற்ற சங்கரி வலம்புரிச்
சங்கமாய் வந்ததீர்த்தம்
சகலமறை யாகமபு ராணசாத் திரமிருதி
தானுவந் தோதுதீர்த்தம்
குறுமுனிவன் முதலான முனிவரர்கள் கோடிபேர்
கொண்டாடி யாடுதீர்த்தம்
குளிர்மகர மாதத்தில் மனிதரும் தேவரும்
கூடியே மூழ்குதீர்த்தம்
நிறையுலகர் வலியவே காயங் கொடுத்தவர்
நினைந்தபொருள் வாங்குதீர்த்தம்
நினைவரிய பாதகர்கள் மூழ்கினா லவர்களையும்
நின்மலர்க ளாக்குதீர்த்தம்
திரிவேணி நிறையும்பிர யாகைநகர் முருகனே
சிறுதே ருருட்டியருளே
சீவனுடன் வாழ்பவர்கள் கேட்டவர மருள்முருக
சிறுதே ருருட்டியருளே. 99

**கயை**

அறந்தவிரொர் பெரியகெய வசுரனது முடியின்மேல்
அம்பிகா நாதனுமையாள்
ஐங்கரன் அண்ணல்நீ யரியாதி பதினெண்மர்
அருளுடன் பாதம்வைத்து

நிறைந்ததல மீதென்ன நின்றதன் னெல்லையைமெய்
நீங்கினோர் கோத்திரத்தில்
நின்றவர்கள் மூவேழு தலைமுறையுள் ளோர்பிறர்
நினைத்துவந் தடிமிதித்தால்
இறந்தோர்கள் நாலேழு கோடியெனும் நரகத்
திருந்தாலும் மண்ணில்விண்ணில்
இறப்பொடு பிறப்புற் றிருந்தாலும் முத்திமலை
யேறவே யேணிவைக்கும்
சிறந்தபற் குனிநதி நிறைந்தகெயை வாழ்முருக
சிறுதே ருருட்டியருளே
செத்தவர்கள் பிறவாத முத்திதரு குமரனே
சிறுதே ருருட்டியருளே. 100

**கேதாரம்**

அறம்பொருள்க ளின்பம்வீ டருணந்தி யாரூர
ராதியோர் மேவுகயிலை
யங்கிரிக் குத்தெற்கி லக்கமே யிருபதுடன்
ஐயாயி ரம்படியெனும்
நிறைந்தமலை யுண்டவையுள் முதன்மலையி தாதலால்
நின்னைக்க வானில்வைத்து
நீண்மந்திர சிங்கா தனத்தம்மை யுடன்மேவு
நிருமலன் வெள்ளிவெற்பில்
பிறந்திறந் துழலாம லானந்த அமுதுண்டு
பெருவாழ்வு பெற்றிருக்கப்
பேராசை யுற்றோர்ச ரீரத்து டன்வரப்
பெரியவருள் முத்திவாய்தல்
திறந்திருக் குஞ்சிவன் கேதாரம் வாழ்முருக
சிறுதே ருருட்டியருளே
தேகம்விட் டுன்சந்நி திக்கடிய னேன்வரச்
சிறுதே ருருட்டியருளே. 101

**க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**

## திருச்செந்தூர்

# சுப்பிரமணிய புஜங்கம்

### வடமொழியில்: ஆதிசங்கரர்

### தமிழில்: வித்துவான் கு. நடேச கவுண்டர்

**விநாயக வணக்கம்**

எந்நாளு மிளையோன் வினைக்குன் றழிப்பான்
இபமா முகன்பஞ்ச வதனன் மதிப்பான்
பொன்னாகர் சுரர்நாடு புனிதன் கணேசன்
பொன்றாத திருவாள னருள்பேணு வோமே. 1

## நூல்

**அவையடக்கம்**

சொல்லேது பொருளேது கவியேது வசனந்
துகளேதும் இல்லாத தேதென்ப தறியேன்
எல்லேறு மறுமா முகச்சோதி யிதயத்
திருந்தே நறுந்தே னெனும்பாடல் தருமே. 2

**செந்தில் நாயகன் வணக்கம்**

மயிலூர்தி சதுர்வேத மறைகின்ற பொருளோன்
மனந்தன் வசங்கொள் மகானுள்ள முறைவோன்
பயிலும் மகாவாக் கிலக்கன் சிவன்சேய்
பனவர்க்கு மெய்த்தேவை நினைவின்கண்
வைத்தேன். 3

என்முன்னர் வந்தோர் பிறப்பென்ற வேலை
யினையேறி னாரென்று நிலமேல் விளக்கித்
துன்னுங் கடற்செந்தி லுறைகின்ற தூயோன்
துங்கப் பராசக்தி யருள்சேயை நினைவாம். 4

திரைபொன்று மாபோலும் வினைபொன்று மின்றே
திருமுன்பு வம்மின்க ளெனநின்ற வன்போல்
திரைபந்தி யாய்வந்த கரைநின்ற செந்திற்
சேயோனை யிதயத்தி லேவைத் துளேனே. 5

இதிலேறி னோர்கைலை யதிலேறி னோரே
என்பா னெனக்கந்த வரைமீது நின்றோன்
மதிபோலு மறுமா முகச்செந்தி னாதன்
மலர்போலு மடிவாழ்க யாம்வாழு மாறே. 6

பெருவேலை யோரத்தி லேபாவ நீக்கும்
பிரசித்தி சேர்சித்தர் வாழ்கந்த வெற்பில்
ஒருசோதி வடிவோடு குகைமேவு செந்தூர்
உயிருக்கொ ருயிர்செம்பொ னடிபற்று வோமே. 7

### முருகன் திருமேனிச் சிறப்பு

பொற்கோயி லிற்பொன் மணிக்கட்டி லேறிப்
பொலிகின்ற ஒருகோடி ரவிமங்க வீசும்
விற்கோல நற்செந்தி லிற்கார்த்தி கேயன்
விபுதேச னைச்சிந்தை விழைகின்ற தாலோ. 8

### திருவடிச் சிறப்பு

அஞ்சம் பொலிந்தே சிவந்தேர் நிறைந்தே
அமுதம் பொழிந்தே பிறப்பென்ற கோடை
வஞ்சந் தவிர்ந்தே விளங்குன் பதத்தா
மரைமேவு மளிநெஞ்ச மலைவாயின் முருகே. 9

### திரு அரைச் சிறப்பு

இலகும்பொன் உடைமீது கணகண்க னென்றே
இசைகிண்கி ணீகச்சை யொடுபட்டை யம்பொன்
அலகில்வி லதுவீசு செந்தூரி லம்மான்
அரைநீடு மழகென்றன் அகமேவி யுனுமே. 10

### திருமார்பின் சிறப்பு

குறமாதி னிருதுங்க தனகுங்கு மந்தான்
கொடுசேந்த தோஅன்பர் குலமீது கொண்ட
திறமான அநுராகம் வெளிநின்ற தோநின்
திருமார்பில் ஒளிசெந்தி லாயஃது தொழுவேன். 11

### திருக் கைகளின் சிறப்பு

அயனைப் புடைத்தண்ட நிரையைப் புரந்தே
ஆனைக்கை வென்றந்த கனையும் துரந்தே
துயரிந்த்ரன் பகைவென் றபயமென்ற நின்கை
துணைசெய்க வுயர்செந்தி லிறைவா எமக்கே. 12

### திருமுகச் சிறப்பு

பனியென்று முளவாயொர் பங்கம் படாமல்
பரிபூர்ண வொளியோடு பலதிக்கு நிலவை
நனிவீசு மதிமூ விரண்டென்று முளவேல்
நளிர் செந்தி லோனாறு முகமொக்கு மாலோ. 13

சிவன்மைந்த நகையென்ற அனமென்று மேவித்
திகழுங் கடைக்கண்க ளெனும்வண் டுலாவித்
தவவின்சொ லமுதூறு கொவ்வைச்செ விதழ்சேர்
சலசங்க ளெனுமாறு முகமென்று காண்பேன். 14

### திருக்கண்களின் சிறப்பு

குறைவென்கொ லோசெந்தி லாய்கா தளாவிக்
குறையாத அருள்வீசு விழிபன் னிரண்டில்
இறையேயொர் விழியின் கடைப்பார்வை தொழுமிவ்
வெளிநாயி னேன்மீதி லொருபோது விழுமேல். 15

### திருமுடிச் சிறப்பு

எனதங்க நீமைந்த வாழ்கென்று மோந்தே
ஈசன் களிக்கின்ற தேசொன்று முடிசேர்
நினதிங்கள் முகமாறு மறவாது பணிவேன்
நிலைநின்ற செந்தூரில் வெளிநின்ற தேவே. 16

### வேண்டுகோள்

வரவேணு மடியேன் முனேசெந்தி னாதன்
மணிமாலை கேயூர மசைகுண்ட லங்கள்
பிரகாச மிகமாடை யுடையோடு கையிற்
பிசகாத வடிவேலின் மிகுசோதி வீச. 17

### தோத்திரங்கள்

குமரா எனச்சங் கரன்கைகள் நீட்டக்
குதித்தம்மை மடிநின்று பரனைத் தழீஇக்கொண்

டமரா மகிழ்ந்தாடு செந்தூரி லெம்மான்
அழகான மழமேனி மறவாது நினைவேன். 18

குமாரா சிவன்சேய் குறக்கன்னி நாதா
குகாகந்த சேனாப தீசத்தி பாணீ
எமார்வப்ரபோ தாரகாரீ மயூரா
இனாநீவு வாய்செந்தி லாயஞ்ச லென்னே. 19

சாகுந்தருவாயில் தஞ்சமளிக்க வேண்டுதல்

ஐயுந்தி மெய்நொந்து பொறியைந்து மோய்ந்தே
அறிவின்றி யுளமஞ்சி யுயிர்மங்குபோதே
நெய்நின்ற வடிவேல செந்தூர யாரே
நினையன்றி எனையஞ்சல் எனுமாவ லாரே. 20

எமதூதர் என்னை நலியாமல் காக்க

யமதூதர் சுடுவெட்டு பிளவென் றதட்டி
எனைவெஞ் சினத்தோ டொறுக்கென்று வந்தால்
நமதன்ப அஞ்சே லெனச்சத்தி யேந்தி
நவிரத்தின் மிசைசெந்தி லாய்வந்து காவே. 21

அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தல்

உயிர்மங்கு பொழுதின்க ணுனதாள்க ணினையேன்
ஓசெந்தி லாயென்கி லேன்கைகள் குவியேன்
அயர்கின்ற அவ்வேளை கைவிட்டி டேலென்
ஐயா உனக்கேகை யடையாகி னேனே. 22

மனவேதனை நீக்கவேண்டல்

அண்டங்க ளோராயி ரங்கொண்ட சூரன்
அவன்றம்பி மார்சிங்க முகனானை முகவன்
மண்டும் பலஞ்செற்ற வடிவேல அலைவாய்
மருவும் குகாஎன்றன் மனநோயு மொழியே. 23

நீயே அடைக்கலம்

அடியேன் சதாதுக்கி நீயேழை பங்கன்
அறியேன் துணைவேறு சிறியேனை நலியும்
மிடியாவு நொடியேநுண் பொடியாக அருள்வாய்
மிளிர்வேல செந்தூரி லமர்தேவ மணியே. 24

### இலை விபூதி மகிமை

கண்டால்நி னிலைநீறு கைகால் வலிப்புக்
காசங் கயம்குட்ட முதலாய நோயும்
விண்டோடு மேபூத பைசாசம் யாவும்
வினையாவு மேசெந்தி லமர்தேவ தேவே. 25

### பிரார்த்தனை

செந்திற் குமரரன் றனைக்கண்கள் காண்க
செவிஎந்தை புகழ்கேட்க வாய்சீர்த்தி பாட
கந்தன் திருத்தொண்டு கைசெய்வ தாக
கடையேன் அவன்தொண்ட னெனும்வாழ்வு சேர்க. 26

### முருகனே ஏழைபங்கன்

பிறதேவர் முனிவர்க்கு மிகுபத்தி யோர்க்கும்
பிரியங்க டருவார்கள் புலையர்க்கு மருள்வார்
பிறர்யாவர் மணிவாரி யலைவீசு செந்திற்
பிரானன்றி யறியேன் சொனேன்நம்பு வீரே.27

### வழிவழி யடிமையாக வேண்டுதல்

மனைமக்கள் உறவாள ரடியார்கள் தோழர்
மற்றுள்ள பேர்என்றன் மனைவாழும் யாரும்
உனையன்பு கொடுபூசை புரிவோர்கள் தொழுவார்
உனையோது வோராக அருள்செந்தி லானே 28

### பகை நீக்கி அருள வேண்டுதல்

கொடிதென்ற மிருகங்கள் பறவைக் குலங்கள்
கொடுநஞ்ச வகையென்னை மெலிவிக்க வந்தால்
வடிவிக்ர மச்சத்தி யாலே யழித்தே
வாழ்விக்கவே செந்தில் வாழ்கந்த வேளே. 29

### பிழை பொறுக்க வேண்டுதல்

மகார்செய்த பிழைபெற்ற பேர்மன்னி யாரோ
மகனல்ல னோயான்விண் மண்பெற்ற தந்தாய்
மகாதேவ செந்தூரில் வாழ்கந்த வேளே
மன்னிக்க யான்செய்த புன்மைக் குழாமே. 30

போற்றி

மயில்போற்றி வேல்போற்றி மறியாடு போற்றி
வன்காற் படைச்சேவ லும்போற்றி நந்தூர்
உயர்வெண் டிரைச்சிந்து வும்போற்றி முருகோன்
உபயப் பதம்போற்றி யுறைசெந்தில் போற்றி. 31

வாழ்த்து

ஜயவின்ப வடிவா ஜயச்சோதி ரூபா
ஜயப்பாவு புகழோய் ஜயத்தாவி லின்போய்
ஜயவின்ப சிந்துஜ் ஜயச்சர்வ பந்து
ஜயவின்ப வள்ளால் ஜயச்செந்தில் வாழ்வே. 32

நூற்பயன்

திருச்செந்தி னாதன் பதத்தே மணக்கும்
திருப்பாட் டிவைக்கார்வம் வைத்தே படிப்போர்
திருப்பெண்டு மக்கட் சிறப்பின்ப வாழ்வுஞ்
சிறக்கத் திகழ்ந்தின்ப வீடெய்து வாரே. 33

நடேச கவுண்டர் தமிழாக்கிய சுப்பிரமணிய
புஜங்கம் முற்றிற்று

திருச்செந்தூர்

# சுப்பிரமணிய புஜங்கம்

## வடமொழியில்: ஆதிசங்கரர்

## தமிழில்: கலா பாரதி

காலமெலாம் பாலனவன் கணேசன் திருவுடையோன்
சூலமொடு ஐம்முகத்தோன் சுரனோடு நான் முகனும்
சீலமிகு திருமாலும் தேடிவரும் கரிமுகத்தோன்
மூலவினை மலைநீக்கி முழுச்செல்வமருள் புரிவான். 1

கவியறியேன் வசனமோ கண்டறியேன் யென்றன்
செவியறியா தொலியெதையும் செப்பியு மறியேன் பொருள்
புவிபுகழும் ஆறுமுகா! உன் புனித முகம் நோக்குங்கால்
தெவிட்டாத தேன் தமிழ்ச்சொல் தெளிந்து வரும் நெஞ்சிருந்து. 2

உலகமெலாம் காக்கும் கந்தா உளம் மகிழும் ஒளி உருவே
நலமுடை சான்றோர் நெஞ்சில் நாளெலாம் வாழும் தேவே
பலர்போற்றும் சிவன் மைந்தா! பக்திமிகு அந்தணர் தம்
குலதேவா! வேதத்தின் தத்துவமே! கோலமயில்
வாகனனே! பணிக்கின்றேன் 3

செந்திற் கடலுடையோன் சேவடி துணையென்றே
வந்தவர்தம் பிறவியெனும் வரையில்லாக் கடலினியே
கந்தன் திருவருளால் கடந்திடுவர் பராசக்தி
மைந்தன் பதம்பணிவோம் மால்மருகன் சொன்னபடி. 4

ஓங்கி உயர்ந்தடிக்கும் ஒய்யாரக் கடலலையும்
ஆங்கென் அடிபணிந்து அமர்ந்திடுமாம் விந்தை போல
ஏங்கும் கவலையொடு என்முன்னே வந்திட்டால்
நீங்கும் தீங்கென்பான் நெஞ்சிலுறை செந்தூரான். 5

எந்தன்மலை வந்தவர்கள் எந்தைமலை போனவர்கள்
கந்தன்மலை வந்தவர்கள் கைலைக்கு வந்தோரென்பான்
சிந்தும் ஒளி மதிமுகத்தோன் செந்திலுறை ஆறுமுகம்
செந்தாமரை மலரொக்கும் சேவடிகள் தாம் வாழ்க. 6

எத்தனையோ பாவமெல்லாம் எளிதினிலே போக்க வல்ல
சித்தர்வாழ் கந்தன்மலை சீரலைவாய் ஓரத்தினில்
புத்தொளியாய்க் குகையினிலே புனிதகுகன் வீற்றுள்ளான்
புத்துயிராய் விளங்குமவன் பொன்னடிகள் போற்றிடுவோம்.7

மாணிக்கக் கட்டிலென்ன மாசறு பொற் கோயிலென்ன
நாணக் கண்டிடலாம் நாற்கோடி ரவி ஒளியும்
வானத்துத் தேவன் வரம்வேண்டத் தான்தருவான்
காணக்கண் குளிரும் கார்த்திகேயன் தாள்பணிவோம். 8

செந்நிறப் பாதமலர் சிந்தும் தேனமுதமலர்
இன்னொளி பாதரசம் இன்பமய மாக்கும் மனம்
உன்னினைவில் நினைவாக உலவிவரும் வண்டெனவே
என்னிதயம் இருந்தங்கே எப்போதும் களித்திடுமே. 9

தங்கமய ஒளிவீசும் தகதகக்கும் பட்டாடை
அங்க அசைவினிலே அரைஞாணும் ஒட்டியாணம்
கிண்கிணிக்கும் சலங்கை ஒலிகிறங்க வைக்கும் இடுப்பழகும்
எங்கும் ஒளி வடிவாம் எழில்முருகன் நாம் பணிவோம்.10

மங்கைகுற வள்ளிதனை மால் மருக னணைத்ததுமே
கொங்கை யழகிட்ட குங்குமமும் மார்புதைந்தே
அங்கும் செவ்வொளிவீச அன்பர்தமை யாட்கொள்வான்
தங்கநிற மார்புடையோன் தாரகனைக் கொன்றவனாம்.11

சூரபதுமனைக் கொன்றே சுரன்பகை தான் வென்றே
தூரயமனை ஓட்டி துண்டித்த யானைத்தந்தம்
பாருலகம் படைத்தவனைப் பணியவைத்த வேலவனைச்
சேரும் உயிர்காக்கச் செந்தூரான் கரம் துணையே. 12

பனிக்காலச் சந்திரனும் பருவமெல்லாம் நிறைந்தாலோ
தனித்தாறு முழுமதியின் தன்னொளிபோல் ஆறுமுகம்
தனக்குள்ளே மாசுற்றும் தரணியிலே தோணும் மதி
கனிக்காக வலம்வந்த கந்தனுக்கு நிகராமோ. 13

அன்னப் பறவைகளோ? ஆறுமுகா புன்சிரிப்பு
இன்னமுத இதழழகால் இன்சொற்கள் தாம்வருமே
வண்ணமலர்த் தாமரையில் வண்டுலவும் விழியழகை
என்ன சொல்ல! சிவபாலா! எழில் தாமரை முகனே! 14

கண்விழிகள் பன்னிரண்டும் காதுவரை நீண்டிருக்கும்
நின் கருணைப் பெருவெள்ள நீர்த்துளிதான் கிட்டாதோ
அன்பரெனத் தொழுவோர்க்கு அருள்புரிந்தால் குறைந்திடுமோ
உன்பார்வை படுமாயின் உய்வேனே உமைபாலா. 15

முன்னின்ற பாலகனை முகர்ந்திட்டு மகிழ்ந்த சிவன்
என்னின் றுதித்தமைந்தா என்றென்றும் வாழ்கவென
சொன்னதுமே ஆறுமுறை சுகவாழ்வை நிலையாக்கும்
மண்ணுலகின் சுமைதாங்கும் மணிக்கிரீட சிரம்பணிவோம். 16

மாலை மணியணிகள் மார்பில் அசைந்தாட
கோலமிகு காதணியும் குண்டலமும் தோள்வரையும்
மேலிடை பட்டாடை மேன்மையொளி வீசிடுமே
வேலன் புரமெரித்தோன் வேதமைந்தா நீ வருக. 17

''இங்குவா'' வெனறதுமே இளைய திருக்குமரன்
சங்கரிதன் மடியிருந்து சங்கரன் கரம்தழுவும்
தங்கநிற இளமேனி தவழும் குழந்தையவன்
திங்கள் முகமாறும் தினமும் பணிந்திடுவேன். 18

குமரா! ஈசன்-திருமகனே! குகனே! திருமயில் வாகனனே!
அமரர்பதியே! ஆறுமுகா! அடியார் துயர்கள் நீக்குபவா!
சமரில் தாரகனைக் கொன்றவனே! சரவண வள்ளி மணாளா!
உமையாள் உருவாம் வேல்முருகா! உம்மைப் பணிந்தோம்
காத்திடுவாய் 19

புலனடங்கி நினைவிழந்து பொறி கலங்கி கப மடைக்கப்
பலம் நலிந்து செயல் மறந்து பயம் மிகுந்து உடல் நடுங்க
நலம் நசிந்து உயிர் மறைந்து நமனை நாடும் போதினில்
உலகறிந்த துணைகள் வேறு உதவிடுமோ உனையல்லால். 20

வெட்டு, பிள, பொசுக்கென்று வெஞ்சினமாய் யமதூதர்
கிட்டவரும் காலமதில் திருமயிலும் வேலுடனே
கெட்டலைய விட்டிடாமல் கிட்டவந்து 'அஞ்சேல்' எனத்
தொட்டுக் காத்தருளத் தோன்றிடுவாய் வேலவனே. 21

உனைப்பணிந்து கேட்கின்றேன் 'ஓம் முருகா' என்றுனையே
கணப்பொழுதும் சொல்லாமல் கைகளையும் குவிக்காமல்
நினைவிழந்து தவிப்பேனே நெஞ்சிலுயிர் நீங்குகையில்
துணைபுரிவாய் அப்பொழுது துதித்திடுவேன் இப்போதே. 22

தாரகன் சிங்கமுகன் தம்பிகளின் தமையனவன்
சூரபத்மன் என்பவனும் சூழும் அண்ட மாயிரத்தை
வீரமொடு ஆளுகையில் வீழ்த்தியதும் வேலதனால்
பாரமன நோய்நீக்கிப் பார்த்தருள்வாய் வேலவனே. 23

உமையாள் திருமகனே! உன்னடியேன் துக்கமெனும்
சுமையால் தளர்ந்தவன் நான் சுந்தரவடி வேல்கொண்டு
இமையா அமரர்தேவா! ஏழைக் கிரங்கும் வேலா!
உமையன்றி வேறறியேன், உளநோய் நீக்கிடுவாய். 24

காசம்கபம் குட்டமொடு காக்கைவலி காய்ச்சலெனும்
நாசம்செய்யும் பெருநோயும் நலியவைக்கும் பைசாசம்
வாசம் செய்ய என்னுடலில் வந்திட்டால் வேலா உன்
பூசுமிலைத் திருநீற்றால் போக்கிடுவாய் தீவினையாம். 25

கந்தனைக் காணவே கண்கள் கரங்களும் அவன் பணிக்கே
செந்தில் முருகன்புகழ் செவிபடைத்த பயனாகும்
சந்ததமும் அவன்சரிதம் சந்தமொடு வாய்ப்பாடும்
சிந்தனையும் உடல்வாழ்வும் சீரலைவாய்க் கந்தனுக்கே. 26

பக்திநெறி மனிதர்க்கும் பரதத்துவ முனிவர்க்கும்
முக்தி யளித்திடுவர் மும்மூர்த்தி தெய்வங்களாம்
எந்தையு மறிந்திடாத எளியநிலைப் பஞ்சமரின்
சித்தமருள் முருகனன்றி சிறியேனெதையு மறியேனே. 27

மனைவியொடு மக்களும் மனையில்வாழும் பசுக்களும்
மனிதனொடு பெண்களும் மற்றுமுள்ள சுற்றமும்
நினைந்துமையே வணங்கவும் நித்தமும் துதிக்கவும்
வினைகள் நீங்க வேள்வியை விதிப்படி நடக்கச்செய்வீர். 28

நெடியமலைக் கிரெளஞ்சமதை நினைத்ததுமே வேல்கொண்டே
பொடிசெய்த வேலவனே! புண்படுத்தும் நோய்களையும்
கொடியவிடப் பிராணியொடு கொத்தவரும் பறவையினம்
கடுகியோடச் செய்திடுவீர் கைகள்தாங்கும் வேலதனால். 29

தன்மகன் செய்தபிழை தந்தைதாய் மன்னியரோ?
உன்மகன் நானன்றோ! உலகத்தின் தந்தையே நீ
தென்பரங் கிரிதேவா! தேவ சேனாபதியே!
என்பிழை மலையெனினும் எளியேனைப் பொறுத்தருள்வாய். 30

கந்தா! உன்மயில் போற்றி கடம்பா வேல்போற்றி சிவன்
மைந்தா! சேவல் போற்றி! மறியாடும்தான் போற்றி
சிந்தா குலந்தீர் செந்தூரா! சிந்தும் சேவடியும் போற்றி
வந்தே வரமருள்வாய் வணக்கம் வணக்கமையா. 31

வெற்றிதரும் இன்ப வடிவேலனே! சிவன்மகனே!
வெற்றியின் திருஉருவே! விளங்கும் புகழுடையோய்!
வெற்றி கொண்ட திருக்கடலே! வெள்ளப் பெருக்கினைப்போல்
வெற்றிபுகழ் இன்பமெலாம் வேண்டுவோர்க் கருளிடுவீர். 32

கந்தனின் புஜங்கமதைக் கவிபாடி பக்தியோடு
வந்தித்து வழிபட்டால் வாழ்ந்திடலாம் நெடுங்காலம்
சிந்தைக் குகந்த இல்லாள், செல்வம் நன் மக்களுடன்
தந்திடும் பேரின்பநிலை தரணிபுகழ் குகனருளே. 33

கலா பாரதி தமிழாக்கிய சுப்பிரமணிய
புஜங்கம் முற்றிற்று

திருச்செந்தூர்

# சுப்பிரமணிய புஜங்கம்

வடமொழியில்: **ஆதிசங்கரர்**

தமிழில்: **அ.வெ.ர. கிருஷ்ணசாமிரெட்டியார்**

என்றும் இளமை எழிலன் எனினும்
இடர்மா மலைக்கே இடராவான்
துன்றும் கரிமா முகத்தோன் எனினும்
சிம்ம முகச்சிவன் மகிழ்நேயன்
நன்றே நாடி இந்திரன் பிரமன்
நாடித் தேடும் கணேசனெனும்
ஒன்றே எனக்கு சுபம் திருவும்
உதவும் மங்கள மூர்த்தமதே. 1

சொல்லு மறியேன் சுதி அறியேன்
சொற்கள் சுமக்கும் பொருளறியேன்
சொல்லைச் சொல்லும் விதியறியேன்
தோய்ந்து சொல்ல நானறியேன்
எல்லை யிலாதோர் ஞான வொளி
இதயத் தமர்ந்து அறுமுகமாய்
சொல்லை வெள்ள மெனப் பெருக்கும்
தோற்றம் கண்டேன் சுடர்கண்டேன். 2

மயில்மீது ஆர்த்து உயர்வாக்கிற் பொதிந்து
மனதைக் கவரும் உடலான்
பயில்வோர்கள் உள்ளக் குகைக் கோயில் தங்கி
பார்ப்பவர் தெய்வ மானான்
உயிராகும் மறையின் பொருளாகி நின்று
உலகைப் புரக்கும் பெருமான்
கயிலாய மேவும் அரனாரின் செல்வக்
கந்தன் பதம் பணிகுவாம். 3

என்றன் சந்நிதி யடையும் மனிதர்
எப்போ தெனினு மப்போதே
இந்தப் பிறவியின் சாகரக் கரையை
எய்திக் களித்தோ ராகின்றார்

மந்தரு மறிய மறையை விளக்கிச்
செந்தில் சாகரக் கரையதனில்
சுந்தரன் சக்தி பாலன் அமர்ந்தான்
தூயன் பாதம் துதிக்கின்றேன். 4

கடலில் தோன்றும் அலையும் அழிந்து
காட்சி மறைவது போல்
திடமாய்ச் சந்நிதி சேவித் திடுவார்
தீமை யழிந்து படும்
படமாய் மனதில் பதியச் செய்ய
பரவைக் கரையில் குகன்
இடமே யமர்ந்தான் இதயமலர் மேல்
ஏற்றித் தியானம் செய்கின்றேன். 5

என்றன் இருக்கை யறிந்தே யெவரும்
இம்மலை ஏறி வரின்
எந்தைக் கயிலை மலை மீதேறும்
இனிய பலன் கொள்வார்
கந்தன் இதனைச் சுட்டிக் காட்டிக்
கந்த மான கிரிமேல்
சிந்தை மகிழ மூவிரு முகமாய்த்
திருக்கொலு வமர்ந்தே யிருக்கட்டும். 6

கொடிதாம் பாவக் குறை நீக்கிடவே
பெரிதாம் கடற்கரையில்
அடியார் தவமே நிறைவே தருமோர்
கந்தமான கிரிமேல்
குடியாம் குகையில் ஒளியின் வடிவாய்க்
குலவி விளங்கு குகன்
அடியார் மிடிமை கெடவே செய்வான்
அவனைச் சரண மடைகின்றேன். 7

மன்னும் இளமை யாயிரம் ஆதவர்
மலரும் காந்தியுடன்
நன்மலர்க் கொத்துச் சூழ்ந்து மறைக்கும்
இரத்தின மஞ்ச மதில்
கன்னிய ரறுவர் போற்றி வளர்த்த
கந்தன் கொலு காணப்

பொன்மயக் குகையில் புகுந்த மாந்தர்
சித்தம் சாந்தி யுறும். 8

மென்மை மிகுந்த கமலத் திருவடி
மேலும் அசையச் சிவப்பாகும்
மன்னும் அழகு மனதைக் கவர்ந்து
மலரின் மேலே குடியேற்றும்
சின்னம் சிறிய வண்டாம் மனது
சிக்கல் பலவும் விட்டேகி
பொன்னாம் பாதத் தாமரை சார்ந்து
பொலிவு பெற்றே வாழட்டும். 9

பொன்னெனத் திகழும் பூந்துகி லாடை
பொலிவுடன் இடையில் ஒளி துள்ள
மின்னென மணிகள்மெல்லிசை ஒலிக்க
மேகலை இடையைப் பொன்னாக்க
தன்னிக ரில்லா இடையதன் காந்தித்
தன்னொளி ஒன்றை ஏவிவிடும்
நின்னெழில் இடையின் அணியா அழகை
நெஞ்சில் தியானம் செய்கின்றேன். 10

வேடவேந்தன் திருமகள் வள்ளி
விரிந்த நகில்கள் மீதயர்ந்த
சேடல் குங்குமச் சேற்றில் தோய்ந்து
திகழும் நின்றன் தடமார்பு
நாடும் அடியர் துன்பம் துடைத்து
நலமே பொங்கச் சிவந்துவிடும்
கோடிய தாரகன் தன்னைக் கடிந்த
குமரன் மார்பைப் போற்றுகிறேன். 11

வேதன் தலையில் குட்டிய கை
விண்ணவர் கோனை வாழ்த்தும் கை
வாதனை போக்கும் யமதண்ட மதாய்
வையம் தாங்கும் விளையாட்டாய்
சாதனைக் கரியின் கை பற்றி
தன்மத மடக்கும் நின்னுடைய
காதல் கரங்கள் பன்னி ரண்டும்
கந்தா என்னைக் காத்திடுக. 12

சந்திரர் அறுவர் வான் வெளியில்
    சற்றும் களங்க மில்லாமல்
சுந்தரச் சுடர்தான் வீசி யெங்கும்
    தோற்றக் குறைவு யேதின்றி
யந்திர மென்னச் சுழன் றாங்கு
    என்றும் உதயத் தோற்றமொடு
கந்தா அவைதான் விளங்கினும்,நின்
    கருணை முகத்திற் கெதிராமோ? 13

அன்னம் அசைதல் போல்நின் புன்னகை
    அழகின் அதரம் அமுதூர
சின்னஞ் சிறிய கொவ்வைப் பழமாய்ச்
    சிவந்த உதடும் அழகூர
பன்னிரு கண்கள் வண்டாய் ஊர்ந்து
    பவனி கடைசி ஒளியாக
நின்திரு முகங்கள் ஆறும் தாமரை
    நிகர்த்தே நிற்கக் காண்கின்றேன். 14

விண்ணிலும் விரிந்த கருணை யதால்
    வியத்தகு தயவை அருளுகின்ற
பன்னிரு விழிகள் செவி வரைக்கும்
    படர்ந்து இடையீ டேதின்றி
மின்னென அருளைப் பெய்வனவாய்
    விளங்கு குகனே மனதிரங்கி
என்மீது கடைக் கண் வைத்தால்
    ஏது குறைதான் உனக்கெய்தும்? 15

மறைகள் ஆறு முறை யோதி
    வாழ்க மகனே என மகிழும்
இறைவன் உடலில் இருந்தே பின்
    எழுந்த கந்தா, முத்தாடும்
துறையாய் விளங்கும் நின் சிரங்கள்
    திகழும் மகுடத்தோ டுவகை
நிறைவாய்க் காக்கும், சிரங்களையே
    நெஞ்சில் தியானம் செய்கின்றேன். 16

இரத்தினத் தோள் வளை ஒளிகதுவ
    நல்முத்து மாலை யசைந்தாட

வரத்தில் உயர்ந்த நின் குண்டலங்கள்
வளைந்த கன்னத்தே முத்தாட
திரிபுரத்தை எரித்த சிவக் குமரா!
செந்தில் தலைவா! வேல்தாங்கி
மரகதப் பட்டை இடை யுடுத்தி
வருக என்றன் கண்முண்னே. 17

வருக குமரா! அருகெனவே
மகிழ்ந்தே இறைவன் கர மேந்த
பெருகும் சக்தி மடியிருந்தே
பெம்மான் சிவனின் கரம்தாவும்
முருகே! பரமன் மகிழ்ந் தணைக்கும்
முத்தே! இளமை வடிவுடைய
ஒரு சேவகனே! கந்தா! நின்
உபய மலர்த்தாள் தொழுகின்றேன். 18

குமரா! பரமன் மகிழ் பாலா!
குகனே! கந்தா! சேனாபதியே!
சமரில் சக்தி வேல் கரத்தில்
தாங்கி மயில்மீ தூர்பவனே!
குமரி வள்ளிக் காதல! எம்
குறைகள் தீர்க்கும் வேலவனே!
அமரில் தாரகன் தனை யழித்தாய்!
அடியேன் என்னைக் காத்திடுக! 19

தயவே காட்டும் தன்மையனே!
தங்கக் குகையில் வாழ்பவனே!
மயங்கி ஐந்து புலன் ஒடுங்கி
வாயில் கபமே கக்கிடவும்
பயந்து நடுங்கிப் பயணமெனப்
பாரை விட்டுப் புறப்படவே
அயர்ந்து கிடக்கும் போதென்முன்
ஆறுமுக! நீ தோன்றுகவே. 20

காலப் படர்கள் சினம்கொண்டு
கட்டு வெட்டு குத்தென்று
ஓலமிட்டே அதட்டி என்முன்
உயிரைக் கவர வரும்போது

கோல மயில்மேல் புறப்பட்டு
குமரா சக்தி வேலோடு
பாலன் என்முன் நீவந்து
பயமேன் என்னத் தோன்றுகவே. 21

கருணை மிகுமோர் பெருங்கடலே
கந்தா நின்னைத் தொழுகின்றேன்
அருமை மிகுநின் பொன்னொளிசேர்
அடியில் நானும் விழுகின்றேன்
எருமைக் காலன் வரும்போதென்
எந்தப் புலனும் பேசாது
அருகே வந்து காத்திடநீ
அசட்டை செய்ய லாகாது. 22

அண்ட மனைத்தும் வென் றங்கே
ஆண்ட சூர பதுமனையும்
மண்ணுள் மண்ணாய்த் தாரகனை
மாயன் சிம்ம முகத்தனையும்
தண்டித் தவனும் நீயன்றோ?
தமியேன் மனதில் புகுந்திங்கே
ஒண்டிக் கிடக்கும் கவலையெனும்
ஒருவனைக் கொல்லுத லாகாதோ? 23

துன்பச் சுமையால் தவிக்கின்றேன்
சொல்ல முடியா தழுகின்றேன்
அன்பைச் சொரியும் தீனருக்கிங்
கருளும் கருணைப் பெருவாழ்வே
உன்னை நாடித் தொழுவதலால்
ஊமை நானோர் மாற்றறியேன்
நின்னைத் தொழவும் தடைசெய்யும்
நெஞ்சின் நோவைப் போக்கிடுவாய். 24

கொடிய பிணி கள் அபஸ்மாரம்
குஷ்டம் க்ஷயமும் மூலமொடு
விடியா மேகம் சுரம்பைத்யம்
வியாதி குன்ம மெனநோய்கள்
கொடிய பிசாசைப் போன்றவைகள்
குமரா உன்றன் திருநீறு

மடித்த இலையைப் பார்த்தவுடன்
மாயம் போலப் பறந்திடுமே! 25

கண்கள் முருகன் தனைக்காணக்
காதப் புகழைக் கேட்கட்டும்
பண்ணை வாயிங் கார்க்கட்டும்
பாதத்தைக் கரமும் பற்றட்டும்
எண்சாண் உடலும் குற்றேவல்
எல்லாம் செய்து வாழட்டும்
கண்ணாம் முருகைப் புலன்களெலாம்
கலந்து மகிழ்ந்து குலவட்டும். 26

முனிவர் பக்தர் மனிதர்கட்கே
முன்னே வந்து வரமளிக்கும்
தனித்தனி தேவர் பற்பலர்கள்
தாரணி யெங்கும் இருக்கின்றார்
மனிதரில் ஈன மனிதருக்கும்
மனம்போல் வரமே நல்கிடவே
கனிவுடைக் கடவுள் கந்தனன்றி
கருணை வடிவைக் காண்கிலனே. 27

மக்கள் மனைவி சுற்றம்பசு
மற்ற உறவினர் அனைவோரும்
இக்கணத் தென்னுடன் வசித்திடுவோர்
யாவரும் ஒன்றோ லட்சியமாய்
சிக்கெனப் பற்றிநின் திருவடியைச்
சேவிக்கும் தன்மை தருவாய்நீ
குக்குடக் கொடியோய் செந்தில்வாழ்
குமரா எமக்குக் கதிநீயே! 29

கொடிய மிருகம் கடும்பறவை
கொட்டும் பூச்சி போலென்றன்
கடிய உடலில் தோன்றியுடன்
கட்டி வருத்தும் நோயினையே
நெடிய உன்றன் வேல்கொண்டு
நேராய்ப் பிளந்து தூளாக்கு
முடியாம் க்ரௌஞ்ச கிரிபிளந்த
முருகா வருக! முன்வருக! 29

பெற்ற குழந்தை பிழைபொறுக்கும்
பெற்றோர் உலகில் உண்டன்றோ
உற்ற தேவர் தம்தலைவா!
ஒப்பில் சக்தி யுடையானே
நற்ற வத்தின் தந்தாய்நீ
நாயேன் நாளும் செய்கின்ற
குற்றம் யாவும் பொறுத்தென்னைக்
குறையில் லாமல் காத்தருள்க. 30

இனிமை காட்டும் மயிலுக்கும்
இறைவன் ஊர்ந்த ஆட்டிற்கும்
தனிமெய் ஒளிகொள் வேலுக்கும்
தாங்கும் சேவற் கொடியுடனே
இனிதாம் கடலின் கரையினிலே
இலங்கும் செந்தில் நகருக்கும்
கனியும் நின்றன் அடிகட்கும்
கந்தா வணக்கம் வணக்கமதே. 31

ஆனந்த மூர்த்திக்கு வெற்றி கூறுவோம்
அளவற்ற சோதிக்கு வெற்றி கூறுவோம்
வான்புகழ் மூர்த்திக்கு வெற்றி கூறுவோம்
வையக நாயகர்க்கு வெற்றி கூறுவோம்
தீனரின் காவலர்க்கு வெற்றி கூறுவோம்
திகழ்முத்தி தருபவர்க்கு வெற்றி கூறுவோம்
மோனசிவன் புதல்வருக்கு வெற்றி கூறுவோம்
முருகனுக்கு என்றென்றும் வெற்றி கூறுவோம். 32

எந்த மனிதன் பக்தியுடன்
எழிலார் புஜங்க விருத்தமதை
சிந்தை கனிந்து படித்திடிலோ
செல்வம் கீர்த்தி ஆயுளுடன்
சுந்தர மனைவி புத்திரர்கள்
சூழ ஆண்டு பலவாழ்ந்து
கந்தன் பதத்தை அடைந்திடுவார்
காசினி மீதில் நிச்சயமே. 33

கிருஷ்ணசாமி ரெட்டியார் தமிழாக்கிய சுப்பிரமணிய
புஜங்கம் முற்றிற்று

உ

# திருவகுப்பு

## அருணகிரிநாதர்

### 1. சீர்பாத வகுப்பு

உததியிடை கடவுமர கதவருண குலதுரக
வுபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதயமென வதிகவித கலபகக மயிலின்மிசை
யுகமுடிவி னிருளகல வொருசோதி வீசுவதும்
உடலுமுட லுயிருநிலை பெறுதல்பொரு ளெனவுலக
மொருவிவரு மநுபவன சிவயோக சாதனையில்
ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசெருகி
யுணர்வுவிழி கொடுநியதி தமதூடு நாடுவதும்
உருவெனவு மருவெனவு முளதெனவு மிலதெனவு
முழலுவன பரசமய கலையார வாரமற
உரையவிழ வுணர்வவிழ வுளமவிழ வுயிரவிழ
வுளபடியை யுணருமவ ரநுபூதி யானதுவும்
உறவுமுறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
வுருவுடைய மலினபவ ஜலராசி யேறவிடும்
உறுபுணையு மறிமுகமு முயரமரர் மணிமுடியி
லுறைவதுவு முலைவிலது மடியேன் மனோரதமும்;

இதழிவெகு முககககன நதியறுகு தறுகணர
இமகிரண தருணவுடு பதிசேர்ஜ டாமவுலி
இறைமகிழ வுடைமணியொ டணிசகல மணிகலென
இமையமயில் தழுவுமொரு திருமார்பி லாடுவதும்
இமையவர்கள் நகரிலிறை குடிபுகுத நிருதர்வயி
றெரிபுகுத வுரகர்பதி யபிஷேக மாயிரமும்
எழுபிலமு நெறுநெறென முறியவட குவடிடிய
இளையதளர் நடைபழகி விளையாடல் கூருவதும்

இனியகனி கடலைபய றொடியல்பொரி யமுதுசெயு
மிலகுவெகு கடவிகட தடபார மேருவுடன்
இகலிமுது திகிரிகிரி நெரியவளை கடல்கதற
எழுபுவியை யொருநொடியில் வலமாக வோடுவதும்
எறுழிபுலி கரடியரி கரிகடமை வருடையுழை
யிரலைமரை யிரவுபக லிரைதேர்க டாடவியில்
எயினரிடு மிதணதனி லிளகுதினை கிளிகடிய
வினிதுபயில் சிறுமிவளர் புனமீது லாவுவதும்

முதலவினை முடிவிலிரு பிறையெயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல வருகால தூதர்கெட
முடுகுவது மருணெறியி லுதவுவது நினையுமவை
முடியுவரு வதுமடியர் பகைகோடி சாடுவதும்
மொகுமொகென மதுபமுரல் குரவுவிள வினதுகுறு
முறியுமலர் வகுளதள முழுநீல தீவரமும்
முருகுகமழ் வதுமகில முதன்மைதரு வதும்விரத
முநிவர்கரு தரியதவ முயல்வார் தபோபலமும்
முருகசர வணமகளி ரறுவர்முலை நுகருமறு
முககுமர சரணமென வருள்பாடி யாடிமிக
மொழிகுழற வழுதுதொழு துருகுமவர் விழியருவி
முழுகுவதும் வருகவென வறைகூவி யாளுவதும்
முடிய வழி வழியடிமை யெனுமுரிமை யடிமைமுழு
துலகறிய மழலைமொழி கொடுபாடு மாசுகவி
முதலமொழி வனநிபுண மதுபமுக ரிதமவுன
முகுளபரி மளநிகில கவிமாலை சூடுவதும்;

மதசிகரி கதறிமுது முதலைகவர் தரநெடிய
மடுநடுவில் வெருவியொரு விசையாதி மூலமென
வருகருணை வரதனிக லிரணியனை நுதியுகிரின்
வகிருமட லரிவடிவு குறளாகி மாபலியை
வலியசிறை யிடவெளியின் முகடுகிழி படமுடிய
வளருமுகில் நிருதனிரு பதுவாகு பூதரமும்
மகுடமொரு பதுமுறிய வடுபகழி விடுகுரிசின்
மருகனிசி சரர்தளமும் வருதார காசுரனும்
மடியமலை பிளவுபட மகரசல நிதிகுறுகி
மறுகிமுறை யிடமுனியும் வடிவேல னீலகிரி
மருவுகுரு பதியுவதி பவதிபக வதிமதுர
வசனிபயி ரவிகவுரி யுமையாள்த்ரி சூலதரி

வநசைமது பதியமலை விசயைதிரி புரைபுநிதை
வநிதையபி நவையநகை யபிராம நாயகிதன்
மதலைமலை கிழவனநு பவனபய னுபயசதுர்
மறையின்முத னடுமுடிவின் மணநாறு சீறடியே.

## 2. தேவேந்திர சங்க வகுப்பு

தரணியி லரணிய முரணிர ணியனுடல்
தனைநக நுதிகொடு
சாடோங்குநெ டுங்கிரி யோடேந்துப யங்கரி
தமருக பரிபுர வொலிகொடு நடநவில்
சரணிய சதுர்மறை
தாதாம்புய மந்திர வேதாந்தப ரம்பரை
சரிவளை விரிசடை யெரிபுரை வடிவினள்
சததள முகுளித
தாமாங்குச மென்றிரு தாளாந்தர அம்பிகை
தருபதி சுரரொடு சருவிய வசுரர்கள்
தடமணி முடிபொடி
தானாம்படி செங்கையில் வாள்வாங்கிய சங்கரி;
இரணகி ரணமட மயின்மருக மதபுள
கிதவிள முலையிள
நீர்தாங்கிநு டங்கிய நூல்போன்றம ருங்கினள்
இறுகிய சிறுபிறை யெயிறுடை யமபட
ரெனதுயிர் கொளவரின்
யானேங்குதல் கண்டெதிர் தானேன்றுகொ ளுங்குயில்
இடுபலி கொடுதிரி யிரவல ரிடர்கெட
வீடுமன கரதல
ஏகாம்பரை யிந்திரை மோகாங்கசு மங்கலை
எழுதிய படமென விருளறு சுடரடி
யிணைதொழு மவுனிக
ளேகாந்தசு கந்தரு பாசாங்குச சுந்தரி;

கரணமு மரணமு மலமொடு முடல்படு
கடுவினை கெடநினை
காலாந்தரி சுந்தரி நீலாஞ்சனி நஞ்சுமிழ்
கனலெரி கணபண குணமணி யணிபணி
·கனவளை மரகத
காசாம்பர கஞ்சுளி தூசாம்படி கொண்டவள்

கனைகழ னினையல ருயிரவி பயிரவி
கவுரிக மலைகுழை
காதார்ந்தசெ ழுங்கழு நீர்தோய்ந்தபெ ருந்திரு
கரைபொழி திருமுக கருணையி லுலகெழு
கடனிலை பெறவளர்
காவேந்திய பைங்கிளி மாசாம்பவி தந்தவன்;

அரணெடு வடவரை யடியொடு பொடிபட
அலைகடல் கெடவயில்
வேல்வாங்கிய செந்தமிழ் நூலோன்குமரன்குகன்
அறுமுக னொருபதொ டிருபுய னபிநவ
னழகிய குறமகள்
தார்வேய்ந்தபு யன்பகை யாமாந்தர்க ளந்தகன்

அடன்மிகு கடதட விகடித மதகளி
றனவர தமுமக
லாமாந்தர்கள் சிந்தையில் வாழ்வாம்படி செந்திலில்
அதிபதி யெனவரு பொருதிறன் முருகனை
யருள்பட மொழிபவ
ராராய்ந்துவ ணங்குவர் தேவேந்திர சங்கமே.

## 3. வேல் வகுப்பு

பருத்தமுலை சிறுத்தவிடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தவிதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும்
பனைக்கைமுக படக்கரட மதத்தவள
கசக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவர மாகும்

பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்குமொரு
கவிப்புலவ னிசைக்குருகி வரைக்குகையை
யிடித்துவழி காணும்

பசித்தலகை முசித்தழுது முறைப்படுத
லொழித்தவுண ருரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கவரு ணேரும்;

சுரர்க்குமுநி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்குமரி தனக்குநரர் தமக்குமுறு
மிடுக்கண்வினை சாடும்

சுடர்ப்பரிதி யொளிப்பநில வொழுக்குமதி
யொளிப்பஅலை யடக்குதழ லொளிப்பவொளி
ரொளிப்பிரபை வீசும்

துதிக்குமடி யவர்க்கொருவர் கெடுக்கவிடர்
நினைக்கினவர் குலத்தைமுத லறக்களையு
மெனக்கொர்துணை யாகும்

சொலற்கரிய திருப்புகழை யுரைத்தவரை
யடுத்தபகை யறுத்தெறிய வுறுக்கியெழு
மறத்தைநிலை காணும்!

தருக்கிநமன் முருக்கவரி னெருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தவிறை
கழற்குநிக ராகும்

தலத்திலுள கணத்தொகுதி களிப்பினுண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும்

தனித்துவழி நடக்குமென திடத்துமொரு
வலத்துமிரு புறத்துமரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும்

சலத்துவரு மரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை யெனச்சிகையில்
விருப்பமொடு சூடும்;

திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையு முடைப்படைய வடைத்துதிர
நிறைத்துவிளை யாடும்

திசைக்கிரியை முதற்குலிச னறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கவற
விசைத்ததிர வோடும்

சினத்தவுண ரெதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும்

திருத்தணியி லுதித்தருளு மொருத்தன்மலை
விருத்தனென துளத்திலுறை கருத்தன்மயி
னடத்துகுகன் வேலே.

## 4. திருவேளைக்காரன் வகுப்பு

ஆனபய பத்திவழி பாடுபெறு முத்தியது
வாகநிகழ் பத்தசன வாரக் காரனும்
ஆரமது ரித்தகனி காரணமு தற்றமைய
னாருடனு ணக்கைபரி தீமைக் காரனும்
ஆகமம்வி ளைத்தகில லோகமு நொடிப்பளவி
லாசையொடு சுற்றுமதி வேகக் காரனும்
ஆணவவ ழுக்கடையு மாவியை விளக்கியநு
பூதியடை வித்ததொரு பார்வைக் காரனும்
ஆடலைவு பட்டமரர் நாடதுபி ழைக்கவம
ராவதிபு ரக்குமட லாண்மைக் காரனும்
ஆடகவி சித்ரகன கோபுரமு கப்பிலரு
ணாபுரியி னிற்குமடை யாளக் காரனும்
ஆயிரமு கத்துநதி பாலனும கத்தடிமை
யானவர்தொ டுத்தகவி மாலைக் காரனும்
ஆறுமுக வித்தகனு மாறிருபு யத்தரசு
மாதிமுடி வற்றதிரு நாமக் காரனும்;

யானெனதெ னச்சருவு மீனசம யத்தெவரும்
யாருமுணர் தற்கரிய நேர்மைக் காரனும்
யாதுநிலை யற்றலையு மேழுபிற விக்கடலை
யேறவிடு நற்கருணை யோடக் காரனும்
ஏரகமி டைக்கழிசி ராமலைதி ருப்பழநி
யேரணிசெ ருத்தணியில் வாசக் காரனும்
ஏழையினி ரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருள்நி யாயக் காரனும்
யாமளைம ணக்குமுக சாமளைம ணிக்குயிலை
யாயெனவ ழைத்துருகு நேயக் காரனும்
ஏதமற நிச்சயம னோலயவி ளக்கொளியும்
யாகமுநி வர்க்குரிய காவற்காரனும்
ஈரிரும ருப்புடைய சோனைமத வெற்பிவரும்
யானையள விற்றுவளு மாசைக் காரனும்
ஏடவிழ்க டப்பமலர் கூதளமு டிக்குமிளை
யோனுமறி விற்பெரிய மேன்மைக் காரனும்;

வானவர்பொ ருட்டுமக வானதுபொ ருட்டுமலர்
வாவியிலு தித்தமுக மாயக் காரனும்

வாரணப திக்குதவு நாரணனு வக்குமரு
மானுமய னைக்கறுவு கோபக் காரனும்
வாழியென நித்தமற வாதுபர விற்சரண
வாரிசம ளிக்குமுப காரக் காரனும்
மாடமதில் சுற்றியத்ரி கூடகிரி யிற்கதிர்செய்
மாநகரி யிற்கடவு ளாயக் காரனும்
வாளெயிற துற்றபகு வாய்தொறுநெ ருப்புமிழும்
வாசுகியெ டுத்துதறும் வாசிக் காரனும்
வாளகிரி யைத்தனது தாளிலிடி யப்பொருது
வாகைபுனை குக்குடப தாகைக் காரனும்
மாசிலுயி ருக்குயிரு மாசிலுணர் வுக்குணர்வும்
வானிலணு வுக்கணுவு பாயக் காரனும்
வாதனைத விர்த்தகுரு நாதனும் வெளிப்படம
காடவியி னிற்பதொர்ச காயக் காரனும்;

மீனவனு மிக்கபுல வோருமுறை பொற்பலகை
மீதமர்த மிழ்த்ரயவி நோதக் காரனும்
வேரிமது மத்தமதி தாதகிக டுக்கைபுனை
வேணியர்து திப்பதொரு கேள்விக் காரனும்
வேலைதுகள் பட்டுமலை சூரனுடல் பட்டுருவ
வேலையுற விட்டதனி வேலைக் காரனும்
மீனுலவு கிர்த்திகைகு மாரனுநி னைக்குமவர்
வீடுபெற வைத்தருளு தாரக் காரனும்
மேனையரி வைக்குரிய பேரனும தித்ததிறல்
வீரனும ரக்கர்குல சூறைக் காரனும்
வேதியர்வெ றுக்கையும நாதிபர வஸ்துவும்வி
சாகனும்வி கற்பவெகு ரூபக் காரனும்
வேடுவர்பு னத்திலுரு மாறிமுனி சொற்படிவி
யாகுலம னத்தினொடு போம்விற் காரனும்
மேவியபு னத்திதணி லோவியமெ னத்திகழு
மேதகு குறத்திதிரு வேளைக் காரனே.

## 5. பெருத்த வசன வகுப்பு

அருக்க னுலவிய சகத்ர யமுமிசை
யதிற்கொள் சுவையென வனைத்து நிறைவதும்
அவஸ்தை பலவையு மடக்கி யகிலமு
மவிழ்ச்சி பெறவினி திருக்கு மவுனமும்

அசட்டு வெறுவழி வழக்கரறுவரு
மரற்று வனபொருள் விகற்ப மொழிவதும்
அழுக்கு மலவிருண் முழுக்கி னுழல்வதை
யடக்கி யவநெறி கடக்க விடுவதும்;

எருக்கு மிதழியு முடிக்கு மிறைகுரு
வெமக்கு மிறையவ னெனத்தி கழுவதும்
இரட்டை வினைகொடு திரட்டு மலவுட
லிணக்க மறவொரு கணக்கை யருள்வதும்
இருக்கு முதலிய சமஸ்த கலைகளு
மிதற்கி தெதிரென விணைக்க வரியதும்
இறக்க வெனதெதிர் நடக்கும் யமபடர்
கடக்க விடுவதொ ரியற்கை யருள்வதும்;

நெருக்கு வனவுப நிடத்தி னிறுதிகள்
நிரப்பு கடையினி லிருப்பை யுடையதும்
நெருப்பு நிலம்வெளி மருத்து வனமென
நிறைத்த நெறிமுறை கரக்கு முருவமும்
நினைப்பு நினைவது நினைப்ப வனுமறு
நிலத்தி னிலைபெற நிறுத்த வுரியதும்
நிலைத்த வடியவர் மலைத்த லதுகெட
நிவிர்த்தி யுறவநு பவிக்கு நிதியமும்;

உருக்கு திருவருள் திளைத்து மகிழ்தர
வுளத்தொ டுரைசெய லொளித்து விடுவதும்
ஒளிக்கு மொளியென வெளிக்கும் வெளியென
உயிர்க்கு முயிரென நிகழ்ச்சி தருவதும்
உரத்த தனிமயி லுகைத்து நிசிசர
ரொளிக்க அமர்பொரு சமர்த்த னணிதழை
உடுத்த குறமகள் மணக்கும் அறுமுகன்
ஒருத்த னருளிய பெருத்த வசனமே.

## 6. பூத வேதாள வகுப்பு

அருண கணபண புயக சுடிகையி
னகில புவனமு முதவு மலைமகள்
அமலை யாரியை யந்தரி சுந்தரி
யிமய மாமயி லம்பைத்ரி யம்பகி

அச்சுதச கோதரிய னைத்துவே தத்தலைவி
யற்புதபு ராதனிவ ரப்ரகா சப்ரக்ருதி
அம்பொற் குண்டலப் பேதை சாம்பவி
விம்பக் கிஞ்சுகப் பூவை பூங்கொடி
அக்ஷர லக்ஷஜ பத்தர்க்ர மத்திடு
சக்ரத லத்தித்ரி யக்ஷிச டக்ஷரி
ஆயிதிரு மைந்தன்முக மாயிரம்வி ளங்கியதொ
ராறுதர வந்தருளு மாறுமுக புண்டரிகன்
அருவரை திறந்துவன் சங்க்ராம கற்கிமுகி
யபயமிட வஞ்சலென் றங்கீர னுக்குதவி
அரசறிய வாமனமு நிக்கொருத மிழ்த்ரயமு
மபரிமித மாகவிவ ரித்தகட வுட்புலவன்
அநுபவ சித்த பவக்கட லிற்பு காதெனை
வினவியெ டுத்தருள் வைத்த கழற்க்ரு பாகரன்
ஆசிலா சார தபோதன ரின்புறும்
வாசகா தீத மனோலய பஞ்சரன்
அகரு ம்ருகமத களப பரிமள
விகட முகபட கடின புளகித
அமிர்த பூதரி யண்டர்செ ழுங்கொடி
குமுத வாய்மயில் குஞ்சரி மஞ்சரி
அக்கமொரு கோடிபெறு வஜ்ரபா ணிக்குமரி
தக்கவம ராவதிபு ரக்குமா னைக்கிறைவன்
ஐம்பத் தொன்றில்எட் டாறில் மூன்றினில்
ஐந்திற் றங்குமப் பாலை வான்பொருள்
அப்படி பத்தி பழுத்த மனத்தின
ரர்ச்சனை மெச்சிய செச்சை மணிப்புயன்
ஆறுநிலை யென்றுமுத லாகியப ரங்கிரியு
மாவின னெடுங்குடியு மாரண முடிந்திடமும்
அருணையு மிலஞ்சியுஞ் செந்தூர்தி ருப்பழநி
யடியர்மன பங்கயஞ் செங்கோடி டைக்கழியும்
அநவரத நீலமலர் முத்தெறிசு னைப்புனலி
லருவிகுதி பாய்தருசெருத்தணியென்வெற்புமெனும்
அலகில் திருப்பதி யிற்பயில் கற்ப காடவி
யநுபவ னத்தனி ருத்தன ரத்த வாடையன்
ஆறுமா மாதர் பயோதர பந்தியி
லார்ரவே பாலமு தாருநெ டுந்தகை;

வருண சரவண மடுவில் வருமொரு
மதலை மறைகமழ் குதலை மொழியினன்
மதுக ராரவ மந்திர சிந்துர
மணம றாத கடம்பு புனைந்தவன்
மட்டொழுகு சாரமது ரித்ததே னைப்பருக
மர்க்கடச மூகமமை தொட்டிறா லெட்டுவரை
மன்றற் பைம்புனத் தாள்ப தாம்புயம்
வந்திக் குந்தனிக் காம வாஞ்சையன்
மத்தமு டித்தரு ளத்தர்ப்ரி யப்பட
நித்தம றைப்பொரு ளைத்தெளி வித்தவன்
மாதிரமு மந்தரமு நீருநில னுங்கனக
மால்வரையு டன்சுழல வாசுகிவி டம்பொழிய
மகரசலி லங்கடைந் திந்த்ராதி யர்க்கமுது
பகிர்தரு முகுந்தன்மன் பஞ்சாயு தக்கடவுள்
மருகன்மற வாதவர்நி னைப்பவைமு டிக்குமவ
னுருகுமடி யாரிருவி னைத்தொகைய றுக்குமவன்
மறவர்பொ ருப்பி லொருத்திபொ ருட்ட நாளிள
வடிவ மூக்க நரைத்தவி ருத்த வேதியன்
மாதரா ரூப னிராகுல சிந்தைய
னாதிகூ தாள மதாணிய லங்க்ருதன்
வரத விதரண விரத அநுபவ
மவுன குருபர னிபுண குணதரன்
வனஜ ஜாதனை யன்றுமு னிந்தற
வலிய பாரவி லங்கிடு புங்கவன்
மட்டிலிரு நாலுதிசை கட்டுநே மிக்கிரியு
முத்தரகு ணாதிகுட தக்ஷிணா திக்கிரியும்
மங்கத் துங்கவிட் டேறு வாங்கிய
செங்கைப் பங்கயச் சோதி காங்கெயன்
மத்தம லத்ரய மித்தைத விர்த்தருள்
சுத்தப வித்ரநி வர்த்திய ளிப்பவன்
வாரணமு கன்றனது தாதையைவ லஞ்சுழல
வாகைமயில் கொண்டுலகு சூழ்நொடிவ ருங்குமரன்
மயமுறு ப்ரபஞ்சமுஞ் சங்கேத ஷட்சமய
வழியுமன முங்கடந் தெங்கேனு நிற்குமவன்
மதுரமொழி யாலுலக னைத்தையுமு ணர்த்துமவன்
வடவனல நேர்கொடிய குக்குடமு யர்த்தகுகன்

மரகத பக்ஷ குலத்துர கத்தி வாகரர்
வடிவையு ருக்கி வடித்தகி ருக்கை வேல்கொடு
வாரிகோ கோவென வாய்விட வந்தெதிர்
சூரமா சேனையை மோதுக ளந்தனில்,

உருவ மிருளெழ வெயிறு நிலவெழ
வுலகு வெருவர வசைய வருவன
உடைய நாயகி கண்டும கிழ்ந்திட
நடைவி நோதவி தம்புரி பந்திய
ஒக்கலைவி டாதழுத ரற்றுபா லர்க்குமிக
வுச்சிவெடி யாதுநிண மெத்தவே தப்புவன
உங்குக் கிங்குவிட் டாழி நான்கினு
மொன்றுக் கொன்றடி பாய்தல் காண்பன
யுத்தக ளத்தினில் ரத்நம ணிக்குவை
யொட்டமொ டொற்றையி ரட்டைபி டிப்பன
யோகினிக ளும்பெரிய சாகினிக ளும்புதிய
மோகினிக ளும்பழைய டாகினிக ளும்புகழ
உவணநிரை கொண்டிடுஞ் செங்காவ ணத்திடையி
லுறவுகொள வந்துதம் பெண்காறை கட்டுவன
உமிழ்குருதி யாறடைப டக்குறட டுக்கியதி
லுபவனமொ ரேழையுமு றித்தருகொ ழுக்குவன
உடுபட லத்தை மறைத்த குறைக்கு வாலுட
லுதிரச முத்திர முற்று நிலைப்ப டாதன
ஓடைமால் வாரண யூகம டங்கலு
மோரொர்பேய் நீள்கடை வாயி லடங்குவ
உடலி னிசிசரர் மவுலி யொலியலு
முதடு மலைவன பதடி முலையின
உததி யேழும டங்கவு றிஞ்சியு
முதர வாரழ னின்றுகொ ளுந்துவ
உக்கிரவி ராவணனெ டுத்தமே ருக்கிரியு
மொற்றியிரு தோள்கொடுப றித்திடா தப்புவன
ஒன்றித் திண்குரற் கூகை பாம்பொடு
வென்றிச் செந்தலைத் தாலி பூண்பன
ஒக்கமி டற்றி லிறக்கு குறைத்தலை
விக்கி வெளுக்க வெளுக்க விழிப்பன
யோகுபுரி யுங்குகையும் யோகபர ரும்பொருவ
ஓடைமத தந்திவயி றூடினிது றங்குவன

உசிதபிசி தங்கொணர்ந் திங்கேற விற்றுமென
மதமலையெ லும்புகொண் டங்காடி கட்டுவன
உதிரநிண வாள்பெருக வொட்டுவன வெட்டுவன
உடலினடு வூடுருவ முட்டுவன தட்டுவன
ஒழுகுபி ணத்துநி ணத்தின ளற்றி லேபழு
ஒடியவு ழக்கிவ ழுக்கி யுருட்டி வீழ்வன
ஊசலார் வார்குழை யோலை யிடும்படி
யோதுசா மீகர நேமி பிடுங்குவ;

கரண மிடுவன குணலை யிடுவன
கழையை நடுவன பவுரி வருவன
ககன கூடமு டைந்துவி ழும்படி
கதறி வாயனல் கண்கனல் சிந்துவ
கைச்சதியி னாமுறைவி தித்தவா முற்கடித
சச்சபுட சாசபுட சட்பிதா புத்திரிக
கண்டச் சம்பதிப் பேத மாம்பல
கஞ்சப் பஞ்சகத் தாள மாம்படி
கற்சரி யுற்சவ தர்ப்பண லக்ஷண
சச்சரி மட்டிசை யொற்றிய றுப்பன
காயெரிய பங்கியொடு சேகரமி குந்தசைவ
காதுபடு சங்கவள மாலிகைபு னைந்திசைவ
கருணைய திகந்துவந் தொண்கோகு லப்பெரிய
கருமுடியொ டும்படுங் கங்காள மொத்துவன
கடிபயிர வாதிகள் ப்ரியப்படுக திக்கிசைய
நடைநவிலு பாவனை யுதிக்குநட வித்தையின
கடகம டுத்த விடக்கை வலக்கை வாளின
கருதிய லக்ஷிய லக்ஷண முற்று மோதுவ
காலமா றாத வராளிசி கண்டிகை
பாலசீ காமர மானவி பஞ்சிகை
கவுட பயிரவி லளிதை கயிசிகை
கவுளி மலகரி பவுளி யிசைவன
கனவ ராடிய ரும்பட மஞ்சரி
தனத னாசிவி தம்படு பஞ்சமி
கைச்சுலவு கோன்முறைவி தித்தரா கத்தடைவி
லுச்சமது சாதிகமெ டுத்துமே லெட்டுவன
கஞ்சக் கஞ்சநற் றேசி ராஞ்சிகு
றிஞ்சிப் பண்குறித் தியாழை யேந்துவ

கற்றவு டுக்கையி டக்கைக ளப்பறை
மத்தளி கொட்டிய முற்றும டிப்பன
காரெனமு ழங்குகுர லேறுதுடி சந்த்ரவளை
வீரமுர சுந்திமிற டாரிகுட பஞ்சமுகி
கரடிபறை யங்கனந் தங்கோடி கொட்டுவன
முறைமுறை கவந்தநின் றொன்றோடு கிட்டுவன
கசரதப தாகினிய ரக்கர்துணி பட்டுவிழு
களமுழுதும் வாழியதி ருப்புகழ்மு ழக்குவன
கடியகு ணத்த சினத்த சகத்ர யோசனை
நெடிய கழுத்த சுழித்த விழித்த பார்வைய
காதநூ றாயிர கோடி வளைந்தன
பூதவே தாள மநேகவி தங்களே.

## 7. பொருகளத் தலகை வகுப்பு

அதிர்த்த பரிபுர பதத்தி பயிரவி
யமைத்த கரதலி ப்ரியத்தை யுடையன
அடித்த தமருக கரத்தர் பயிரவர்
நடித்த நவரச நடத்தை யறிவன
அருக்கர் பதமல வுடுக்கள் பதமள
வடுக்கு பிணமொரு குறட்டி லடைசுவ
அளக்க ருடைபட மிகுத்த குருதியை
யடைத்து மடைபட வுடைத்து விடுவன
அரக்கர் முடிகளை யடுப்பு வகிர்வன
அவற்றி னுலையென இரத்தம் விடுவன
அடுக்க லெனுமவ ரெயிற்றை யவர்கர
வகப்பை யவைகொடு புகட்டி யடுவன
அமிழ்த்தி யடிவிழு பிணத்தி னிணவெளி
றளற்றி னிடையடி வழுக்கி விழுவன
அடப்பை யிடவரு மணுக்க ருடன்வரு
தடக்கை மதமலை நடத்தி வருவன;

குதித்து மகிழ்வொடு மிதித்து நடமிடு
குறட்கு மிகுதசை கொடுத்து வருவன
கொழுத்த குரகத விறைச்சி வகைவகை
குவித்து முறைமுறை யவித்து நுகர்வன
குருத்து மலரினும் வெளுத்த நிணமது
கொளுத்தி யனலதில் வெதுப்பி யிடுவன

குதட்டி நெடியன வுதட்டி லிடுதசை
கொடிக்கு முதுசின நரிக்கு முமிழ்வன
குணக்கு வளைகடல் வடக்கி யமதிசை
குடக்கு முழுவது மடக்கு வயிறின
குரக்கு மிடறின கரத்தி லெழுகிரி
குலுக்கி யடியொடு பறித்து நிமிர்வன
குதித்து முழுகியு மிரத்த நதியிடை
குடித்து முணர்வொடு களித்து வருவன
குறத்தி யிறைவனை நிறைத்து மலரடி
குறித்து வழிபடு குணத்தை யுடையன;
துதிக்கை மலைகளை யடுக்கி யலகைகள்
துதிக்க அவைமிசை யிருக்கு மரசின
துளக்க முறுசுடர் விளக்கை யனையன
கழித்து வெருவர விழித்த விழியின
துதித்து வழிபட நடத்தல் குறையன
சுகித்து வெளிபட நகைத்து வருவன
துணித்த கரியுட றிணித்த மிடறிடை
துவக்கி யவசமொ டுவிக்கி நிமிர்வன
தொலைத்த முடிநிரை பரப்பி வயிரவர்
சுழற்றி நடமிடு துருத்தி யிடுவன
துணுக்க முளவவர் துணுக்க மிலையென
எடுத்த கழிநெடில் படித்து வருவன
சுரர்க்கு மகபதி தனக்கு மினியொரு
துளக்க மிலையென மகிழ்ச்சி புகல்வன
தொகுக்கு தொகுதொகு தொகுக்கு தொகுதொகு
தொகுக்கு தொகுவென நடித்து வருவன;
எதிர்த்து மலைவன முடித்து வெளிமுக
டிடித்து விழுமிடி யிடித்த குரலின
இரட்டை யிளமதி யுதித்த வெனவெளி
றெயிற்றி னிலவெழு மிருட்டு வடிவின
இயக்க முறுபல ரதத்தி னுருளைக
ளிருத்தி யணிதரு பெருத்த குழையின
இடக்கை குடமுழ வுடுக்கை துடிபறை
யெடுத்து முகிலென முழக்கி வருவன
இதத்த கயிசிக மினித்த பயிரவி
யெழுப்பு யெழுவகை நிருத்த மிடுவன

இறப்பும் வருமெழு பிறப்பு மறவினி
திருத்து மெனமயில் விருத்த மொழிவன
இடைக்க ழியிலொரு செருத்த ணியிலினி
திருக்கு மறுமுக னொருத்த னிளையவன்
இளைத்து நிசிசரர் பதைத்து மடியவொ
ரிமைப்பி லமர்பொரு களத்தி னலகையே.

## 8. செருக்களத் தலகை வகுப்பு

குதிரைத் திரள்பட் டபிணத் தையெடுத்
துதிரப் புனலிற் குளிக்கு மொருதிரள்
குருதிக் கடலைப் பெருகப் பருகிக்
குணலைத் திறனிற் களிக்கு மொருதிரள்

கொடுகொட் டிபடத் துடிகொட் டிநடத்
தடமிட் டுவளைத் திருக்கு மொருதிரள்
குடரைப் புயமிட் டுடலைச் சிறுகக்
குலையிட் டதிரச் சிரிக்கு மொருதிரள்

சதையைச் சிலகைக் கொளமற் றதனைச்
சருவிச் சருவிப் பறிக்கு மொருதிரள்
தறுகட் சிறுகட் டவளக் கவளத்
தமரத் திமிரப் பனைக்கை மதமலை

தலையுக் குளநற் றருணக் கிரணத்
தரளத் திரளைக் குவித்த டியெனுரல்
தனிலிட் டதனைத் தகுகைத் தலமுற்
றிடுநெட் டைமருப் புலக்கை முறைமுறை;

எதிரிட் டதுகுத் திமுடித் தலையொப்
பவடுப் பெனவைத் தெலுப்பு விறகினை
எரியிட் டெரியிட் டுருவத் துடனெட்
டுலைவைத் துணவைச் சமைக்கு மொருதிரள்

இருள்செற் றதடித் தினையொத் திடுகட்
கமெடுத் தெறியத் தெறித்த தலைகளை
இதெனக் கதுனக் கதுமற் றதனுக்
கெனமொய்த் துலவிப் பொறுக்கு மொருதிரள்;

அதரத் துவிரற் படவைத் துமிகுத்
தரவத் தொடுகொக் கரிக்கு மொருதிரள்
அமுதொத் தநிணத் தசைமுக் கியறத்
தவசத் துயிலிற் கிடக்கு மொருதிரள்

அடவிப் புனமுற் றகுறத் திருவுக்
கமைவுற் றமணிப் புயத்த னறுமுகன்
அடன்மிக் கதயித் தியர்பட் டுவிழப்
பொருதிட் டசெருக் களத்தி லலகையே.

## 9. போர்க்களத் தலகை வகுப்பு

பகலிர வின்றியொர் புகறிசை நந்திய பற்பா னுத்தகை
படமுதல் விசும்பு தூர்த்த டுக்கு பிணமலை
பவுரிவ ரும்பரி புரநரல் பங்கய வித்தா ரத்தன
பயிரவி பதங்கள் வாழ்த்தெ டுத்த பசியன
பரியகொ ழுந்தசை பயிரவ ரென்றுப லிக்கா நிற்பவர்
பகரிட மறிந்து பாத்தி ரத்தி லிடுவன
பரவிவ ருங்குறள் பசிதணி யும்படி பட்டார் கைப்படு
பரிசையின் முகந்து சூட்டி றைச்சி சொரிவன
படுகள மென்பதொர் செறுவில் விளைந்தன பற்கோ வைப்பயில்
பவுரிவி சைகொண்டு தீட்டி மெத்த வடுவன
பரியணி திண்பணை முடியம டிந்துடல் பப்பா தித்துணி
படவிழு பெருங்கை மாக்க ருக்கல் பகிர்வன
படைவிச யந்தெரி சலதிவ லம்புரிப் பற்றார் பட்டுள
பலபல விதங்க ளார்ப்பெ டுக்கு முதடின
பகடுபி ளந்தத னுரிவைபு னைந்திடு குப்பா யத்தன
பதவிய ரிணஞ்செ யூட்டு டுத்த வுடையின;

உகமுடி வன்றினும் வெருவவ ரும்பல வுற்பா தத்தன
வொளிமதி வகிர்ந்த கீற்றெ யிற்று நிலவின
உருவமி ருண்டன திகிரிவி லங்கலி னுட்பாய் கிற்பன
உலவிநி ணமொண்டு கூட்ட மைத்து நுகர்வன
உததியு றுஞ்சுவ வடவைநெ டுங்கன லுட்கா கப்பெரு
குதிரபி சிதங்கள் பேர்த்தி றக்கி யிடுவன
உருமுமி டைந்தென வதிர்குர லின்றமி லொரப்பே றிட்டுநி

ருதர்மவு லிகொண்டு கோட்டை யிட்டு மலைவன
உலகுகு லுங்கிட வரியது ணங்கையி னைச்சா திப்பன
உவணப டலங்கள் காக்கை சுற்றி வருவன
உலைதரு மென்குட ரிடைபட இந்திர னுத்யா னத்தல
ருகிர்கொடு புனைந்த சூட்டு முற்றி மலைவன
உயரிப முங்குர கதகுல முங்கன பொற்றேர் வர்க்கமு
முடைபடு கலங்கள் போற்சு ழித்து விரைபட
ஒழுகுதி ரந்தனின் முழுகியெ ழுந்தன உச்சா டத்துட
னுடைகட லதிர்ந்து கூப்பி ளக்கு நடையின;

செகதல மெங்கணு மதிரமு ழங்கிய டிப்பாய் வெற்றிய
திரள்வரை பிடுங்கி நாட்டி யொட்டு குழையின
சினமலி வெங்குற ளினமொடு திண்டிறன் மற்போர்
கற்பன
திசையள வுநின்று நீட்டி வைக்கு மடியின
திசைகடொ றும்பல குறைகளெ ழுந்து துடித்தாடச்
சிறை
செறிகழு கரங்கில் வீற்றி ருக்கு மரசின
திமிரபி லங்கிழி படவிசை கொண்டுகு தித்தா லிப்பன
சிகரவ டகுன்றி னூற்றி ரட்டி நெடியன
சிறியன கிண்கிணி யணிகுரு வின்சர ணத்யா னத்தின
திசைபட வகண்ட சீர்த்தி மெச்சி யிரைவன
திமிலைபெ ரும்பறை சிறுபறை நின்றதி ரச்சே
வித்துயர்
சயமகள் விளங்கு வேற்க ரத்தை மொழிவன
திரிகட தொங்கிட திரிகட திங்கிட தித்தீ செக்கண
செககண மொழிந்து கூத்த னைத்து நவில்வன
சிலைமலி திண்புய வசுரர்சி ரங்கள டுப்பா வைத்தவர்
செறிகுடர் நிணங்கள் காய்ச்சி மிக்க வயில்வன;
நிகரில றம்புரி குருகுல பஞ்சவர் மொய்த்தூ துக்கொரு
நிமிடம திலன்று போய்க்க வித்த மணிமுடி
நிருபர்ப யங்கொள நெறுநெ றெனும்படி பொற்பீ
டத்திடை
நிலைபெற விருந்து நூற்று வர்க்கு மவரறி
நினைவுற வன்புறு மொருபதி னெண்குண வக்ரோ
ணிப்படை
நிகிலமு மடிந்து கூற்று வற்கு நிறைவுற

நிலமகள் வன்பொறை கடியுமு குந்தன்மு தற்சேண்
முட்டவு
நெறிபட நிமிர்ந்த வாக்கை யற்கு மருமகன்
நிமிலைத்ரி யம்பகி கவுரிதி கம்பரி நிர்ப்பா வக்குண
நிருமலி யிரங்கு தாய்ப்ரி யத்த னறுமுகன்
நிகரக னங்குல சிகரிதொ டும்பெரு வெற்பா ருற்பல
நிறையருவி கொஞ்ச வோச்சி யத்தி லொளிர்சுனை
நியதியி னன்கலர் தணிகையெ னும்பதி நிற்பான்முற்பட
நெடுமகர சிந்து தீப்ப றக்க வெகுவித
நிபுடது ரங்கக சவிரத சங்க்ரம நிட்டூ ரக்கொலை
நிருதரை முனிந்த போர்க்க ளத்தி லலகையே.

## 10. திருஞான வேழ வகுப்பு

சடலை பட்டலை யுடலெ னப்படு
தரும சித்திர கூடமானவை
தவிர நிட்கள வெளியி னிற்பன
சமய தர்க்கவி ரோத வாதிகள்
தகர வெற்றுவ புகர்ம னக்கிரி
தனைமு ருக்குவ வாசை யாணவ
தளையி யற்கையை விடந டிப்பன
சனன முற்றிய சாத மாமெழு;

கடல்க டப்பன படுகொ லைச்சமர்
கடக மப்படி சாய மோதுவ
கருவி னைத்தரு மிருவி னைத்தொடர்
கழல்ப தத்தன யோக சாதகர்
களைப றிப்பன கிளையெ னப்படு
கவலை சுற்றிய காடு சாடுவ
கருணை மெய்த்தவ திருவ ருட்கன
கவள மொக்குவ காம ராசனை;

அடல்கெ டுப்பன அகில கற்பனை
யரண ழிப்பன கோப மானவை
அவிய நற்பொறை யெனுந திப்பிர
ளயமி றைப்பன லோப மோகிதம்
அவைமு றிப்பன மதமு ழுத்தறி
யடிப றிப்பன ராச தாதியின்

அதிகு ணத்ரய மதிலி டிப்பன
அளவி றத்துவ தூளி வீசுவ;

திடமு டைச்சிறை மயிலு கைத்தெழு
சிகரி குத்திய வேலை நீள்சுனை
தினமு முற்பல மலர்தி ருத்தணி
யிறைதி ருப்புகழ் பாடு நாவலர்
திரள்ப்ரி யப்பட வினித ளிப்பன
செயலொ ழித்தநு பூதி மீமிசை
திகழு மற்புத மவுன நிர்க்குண
சிவம யத்திரு ஞான வேழமே.

## 11. திருக்கையில் வழக்க வகுப்பு

தருக்குவ செருக்களம் வெருக்கொள வதிர்ப்பன
தடக்கர நிமிர்த்துய ருடுக்குல முதிர்ப்பன
தடித்தெழு குலப்புவி நடுக்குற வதிர்ப்பன
தழைச்செவி படைப்பன திரட்கயிலை யொப்பன
சதுர்த்தச தலத்தையு மெடுத்தக டவுட்பணி
சகஸ்ர பணபத்தியு மொடுக்குற நடப்பன
சமுத்ர மதனத்தி லமுதத்துட னுதிப்பன
தரத்தன தலைச்சுர நதிப்புனல் குளிப்பன;

அருக்கர் பதமுட்பட மிதித்திடு பதத்தன
அறப்படு கொலைத்தொழில் புறப்படு முகத்தன
அரக்கர்படை கெட்டுமுறி யப்பொரு பதத்தன
அயற்கு மமரர்க்கு மொருபொற்பதி யளிப்பன
அளித்தவ முதுக்கவள மொக்குவன முத்தெறி
யலைக்கடல் கலக்குவ குலக்கிரி குலுக்குவ
அடித்தெழு பொருப்பினை நெருப்பெழ விழிப்பன
அதிக்ரம கமப்ரவுட விக்ரம மதத்தன;

மருக்குலவு கற்பக வனத்தலர் பறிப்பன
வளைத்தெழு தருக்களை மொளுக்கென முறிப்பன
மதிப்பிள வெனச்செருகி வைத்தென மணிச்சதுர்
மருப்பின விமைப்பற விழித்த நயனத்தன
வளைத்த கிரியைப் பொடிபடுத்தி யிபமெட்டையு
மலைத்தவ ணடிப்பட மடப்பிடி யணைப்பன

மழைப்புயல் கிழிப்பன புனற்பசி தணிப்பன
மணிக்கண கனப்பண மதத்ரயம் விதிர்ப்பன;
திருத்திய புனத்திடை வனத்தழை யுடுத்தினி
திருப்பவள் விருப்புறு வரைப்புயன் வினைப்பகை
செகுப்பவ னினைத்தவை முடித்தருள் க்ருபைக்கடல்
சிவத்த கமலச் சரவணத் தறுமுகப்பொருள்
செகத்ரய முகிழ்த்த வுதரத் திரிபுரைக்கொரு
திருப்புதல்வ னுற்பல கிரிப்பெயர் தரித்தருள்
திருத்தணி மலைக்கிறை திருப்புகழ் படிப்பவர்
சிறப்பொடு பெறத்தரு திருக்கையில் வழக்கமே.

## 12. வேடிச்சி காவலன் வகுப்பு

உதரகம லத்தினிடை முதியபுவ னத்ரயமு
யுகமுடிவில் வைக்குமுமை யாள்பெற்ற பாலகனும்
உமிழ்திரை பரப்பிவரு வெகுமுக குலப்பழைய
உதகமகள் பக்கல்வரு சோதிச் சடானனனும்
உவகையொடு கிர்த்திகைய ரறுவருமெ டுக்கவவ
ரொருவரொரு வர்க்கவணொ ரோர்புத்ர னானவனும்
உதயரவி வர்க்கநிகர் வனகிரண விர்த்தவித
முடையசத பத்ரநவ பீடத்து வாழ்பவனும்
உறைசரவ ணக்கடவுள் மடுவிலடர் வஜ்ரதர
னுடையமத வெற்புலைய வேதித்த வீரியனும்
உரைபெற வகுத்தருணை நகரினொரு பத்தனிடு
மொளிவளர் திருப்புகழ்ம தாணிக்ரு பாகரனும்
உரககண சித்தகண கருடகண யக்ஷகண
முபநிட முரைத்தபடி பூசிக்கும் வானவனும்
ஒருவனு மகிழ்ச்சிதரு குருபரனு முத்தமனு
முபயமுறு மக்நிகர மீதிற்ப்ர பாகரனும்;

அதிமதுர சித்ரகவி நிருபனு மகத்தியனு
மடிதொழு தமிழ்த்ரயவி நோதக் கலாதரனும்
அவரைபொரி யெட்பயறு துவரையவல் சர்க்கரையொ
டமுதுசெயும் விக்நபதி யானைச் சகோதரனும்
அவுணர்படை கெட்டுமுது மகரசல வட்டமுட
னபயமிட விற்படைகொ டாயத்த மானவனும்
அருணையி லிடைக்கழியி லுரககிரி யிற்புவியி
லழகிய செருத்தணியில் வாழ்கற்ப காடவியில்

அறிவுமறி தத்துவமு மபரிமித வித்தைகளு
மறியென விமைப்பொழுதின் வாழ்வித்த வேதியனும்
அரிபிரம ருக்குமுத லரியபர மற்குயரு
மருமறை முடிப்பையுப தேசித்த தேசிகனும்
அமலனு மெனக்கரசு மதிகுணனு நிர்க்குணனு
மகிலபுவ னத்தமர சேனைக்கு நாயகனும்
அநுபவனு மற்புதனு மநுகுணனு மக்ஷரனு
மருமனமொ ழிக்குமநு பூதிச் சுகோதயனும்;

இதமகிதம் விட்டுருகி யிரவுபக லற்றவிட
மெனதறவி ருக்கைபுரி யோகப் புராதனனும்
எனதுமன சிற்பரம சுகமவுன கட்கமதை
யமன் முடி துணிக்கவிதி யாவைத்த பூபதியும்
எழுமையுமெ னைத்தனது கழல்பரவு பத்தனென
இனிதுகவி யப்படிப்ர சாதித்த பாவலனும்
இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்புமென
திதயமு மணக்குமிரு பாதச் சரோருகனும்
எழுதரிய கற்பதரு நிழலில்வளர் தத்தைதழு
வியகடக வஜ்ரவதி பாரப் புயாசலனும்
எதிரில்புல வர்க்குதவு வெளிமுகடு முட்டவள
ரிவுளிமுகி யைப்பொருத ராவுத்த னானவனும்
எழுபரி ரதத்திரவி யெழுநிலமொ டக்கரிக
ளிடர்பட முழக்கியெழு சேவற் பதாகையனும்
இணையிலியு நிர்ப்பயனு மலமிலியு நிஷ்களனு
மிளையவனும் விப்ரகுல யாகச் சபாபதியும்;

மதுகையொடு சக்ரகிரி முதுகுநெளி யப்புவியை
வளையவரும் விக்ரமக லாபச் சிகாவலனும்
வலியநிக ளத்தினொடு மறுகுசிறை பட்டொழிய
வனஜமுனி யைச்சிறிது கோபித்த காவலனும்
வருசுரர் மதிக்கவொரு குருகுபெயர் பெற்றகன
வடசிகரி பட்டுருவ வேல்தொட்ட சேவகனும்
வரதனு மநுக்ரகனு நிருதர்குல நிஷ்டுரனு
மநுபவன சித்தனும நோதுக்க பேதனனும்
வயரிசை முழக்கமிகு மழைதவழ் குறிச்சிதொறு
மகிழ்குரவை யுட்டிரியும் வேடிக்கை வேடுவனும்
மரகத ·மணிப்பணியி னணிதழை யுடுத்துலவும்
வனசரர் கொடிச்சிதனை யாசிக்கும் யாசகனும்

மதனன்விடு புட்பசர படலமுட லத்தனையு
மடலெழுதி நிற்குமதி மோகத் தபோதனனும்
வரிசிலை மலைக்குறவர் பரவிய புனத்திதணின்
மயிலென இருக்குமொரு வேடிச்சி காவலனே.

## 13. சேவகன் வகுப்பு

இருபிறை யெயிறு நிலவெழ வுடல
மிருள்படு சொருப முடைக்கோ விடவே
இறுகிய கயிறு படவினை முடுகி
யெமபடர் பிடரி பிடித்தே கொடுபோய்;

அருமறை முறையின் முறை முறை கருதி
யதரிடை வெருவ ஒறுத்தால் வகையால்
அறிவொடு மதுர மொழியது குழறி
யலமரு பொழுதி லழைத்தால் வருவாய்;

ஒருபது சிரமு மிருபது கரமும்
விழவொரு பகழி தொடுத்தோன் மருகா
உரமது பெரிய திரிபுர மெரிய
வுயர்கன கிரியை வளைத்தோர் புதல்வா;

மருவள ரடவி வனிதையர் பரவ
மரகத விதணி லிருப்பாள் கணவா
வளைகடல் கதற நிசிசரர் மடிய
மலையொடு பொருத முழுச்சே வகனே.

## 14. வேல்வாங்கு வகுப்பு

திடவிய நெஞ்சுடை யடியரி டும்பைகெ டும்படி
தீயாங்குறை போயாழ்ந்தது
செயசெய வென்றிசை பரவிய வெங்கள்கொ டுங்கலி
தேசாந்தர மேசாய்ந்தது
செயலுரை நஞ்சுறழ் மயலுறு நெஞ்சினர் வஞ்சகர்
தீமான்கதர் தாமேங்கினர்
சிகரத ரங்கித மகரநெ ருங்குபெ ருங்கடல்
தீமூண்டுதன் வாய்மாண்டது
தெரியலர் சென்றடை திசைகளி லெண்கரி சிம்பெழ
மாறாங்கிரி நூறாந்தொளை

சிகரநெ டுங்கிரி குகைகடி றந்துதி கந்தமும்
லோகாந்தமு நீர்தேங்கின
சிறையுள ழுந்திய குறைக ளொழிந்துசெ யங்கொடு
தேவேந்திரர் சேணாண்டனர்
திரிபுவ னங்களு மொருபய மின்றிவ ளங்கெழு
சீர்பூண்டற நேர்பூண்டன;

விடவச னஞ்சில பறையும்வி ரிஞ்சன்வி லங்கது
கால்பூண்டுதன் மேல்தீர்ந்தனன்
விகசித சுந்தர விதரண வைந்தரு வெந்தெழில்
வீவான் பொழில் பூவாய்ந்தது
விழைவுத ரும்பத சசிதன்வி ளங்கிய மங்கல
நூல்வாங்குகி லாள்வாழ்ந்தனள்
வெருவியொ துங்கிமை யவரெவ ருஞ்சிறை வென்றித
மேலாம்படி யேமீண்டனர்
விழியொரி ரண்டொரு பதுசத நின்றெரி கண்டகன்
மேல்வாங்கிளை கால்சாய்ந்தது
வெளிமுழு துந்திசை முழுதும்வி ழுங்கியெ ழுங்கன
சூர்மாண்டற வேர்மாய்ந்தது
விபுதர்ப யங்கெட நிருதர் தளங்கெட விண்கெடு
மேடாம்படி பாடோங்கின
மிடைகுறள் வெங்கொடி கழுகுப ருந்து விருந்தென
வூனார்ந்தகல் வானார்ந்தன;

அடவிப டுஞ்சடை மவுலியில் வெம்பணி யம்பணி
யாமாங்கதர் வாமாங்கனை
அநுபவை யம்பிகை யநுதிதை யம்பைத்ரி யம்பகி
யாசாம்பரை பாசாங்குசை
அநகைய சஞ்சலை யதிகுண சுந்தரி யந்தரி
காலாந்தகி மேலாந்திரு
அமலய லங்க்ருதை யபிநய பங்குரை சங்கினி
மானாங்கணி ஞானாங்குரை
அணிமுக பந்திகள் சிறுபொறி சிந்தவி ளைந்தழல்
வாய்கான்றிடு நாகாங்கதை
அபயவ ரம்புரி யுபயக ரந்திக ழுந்தணி
யாமாங்கறி தாய்மாண்பினள்
அதுலைத ருந்திரு மதலையி பங்கொள்ப யங்கொடு
பாய்மாண்கலை வாய்மாண்புன

அணிகுற மின்புணர் தணிகையி லந்தண னிந்திர
ராசாங்கம தாராய்ந்தவன்;

வடவையி டும்படி மணிமுடி பஞ்செழ விஞ்சிய
மாடாம்புடை நாடாண்டகை
வசைகரு துங்குரு பதியொடு தம்பிய ரும்பட
வேபாண்டவர் தேரூர்ந்தவன்
வளவில்வ ளர்ந்திடை மகளிர்கு விந்துத டங்குடை
வார்பூந்துகில் வார்பூம்புயல்
வரைநிரை கன்றின முழுதும யங்கிய பண்கெழு
வேயேந்திய வாயான்கழல்
மருதிடை சென்றுயர் சகடுத டிந்தடர் வெம்புளை
வாய்கீண்டொரு பேய்காய்ந்தவன்
மதசயி லம்பொர வரவிடு நெஞ்சினில் வஞ்சக
மாமான்பகை கோமான்றிரு
மருகனி ரம்பிய மதிமுக மஞ்சரி குஞ்சரி
வாகாம்பரை தோய்காங்கெயன்
மகபதி தன்பதி பகைகிழி யும்படி யன்றடல்
வாளோங்கிய வேல்வாங்கவே.



## 15. புய வகுப்பு

வசைதவிர் ககன சரசிவ கரண மகாவ்ருத
சீல சால வரமுநி சித்தரை
யஞ்ச லஞ்ச லென்று வாழ்வித் துநின்றன
மணிவட மழலை யுடைமணி தபனிய நாணழ
காக நாடி வகைவகை கட்டும
ருங்கு டன்பொ ருந்து ரீதிக் கிசைந்தன
வருணித கிரண வருணித வெகுதரு ணாதப
சோதி யாடை வடிவுபெ றப்புனை
திண்செ ழுங்கு றங்கின் மேல்வைத் தசைந்தன
வளைகட லுலகை வலம்வரு பவுரி வினோதக
லாப கோப மயில்வத னத்துவி
ளங்கு மங்கு சங்க டாவிச் சிறந்தன
வரைபக நிருதர் முடிபக மகர மகோததி
தீயின் வாயின் மறுகவி திர்த்தயில்
வென்றி தங்கு துங்க வேலைப் புனைந்தன

மதியென வுதய ரவியென வளைபடு தோலவி
சால நீல மலிபரி சைப்படை
கொண்டு நின்று மூன்று சாதிக்க முந்தின
மனகுண சலன மலினமில் துரியஅ தீதசு
காநு பூதி மவுனநி ரக்ஷர
மந்தி ரம்பொ ருந்தி மார்பிற் றிகழ்ந்தன
வகைவகை குழுமி மொகுமொகு மொகென அநேகசு
மூக ராக மதுபம்வி மூச்சிறு
சண்ப கஞ்செ றிந்த தாரிற் பொலிந்தன;
மிசைமிசை கறுவி வெளிமுக டளவு நிசாசர
சேனை தேடி விததிபெ றச்சில
கங்க ணங்க றங்க மீதிற் சுழன்றன
வெருவுவ வெருவ எரிசொரி விழியுள பூதபி
சாசு போத மிகுதொனி பற்றிமு
ழங்கு விஞ்சு கண்டை வாசிக் கைகொண்டன
விதமிகு பரத சுரவனி தையர்கண மேறொறும்
லீலையாக விமலச லத்தினை
விண்டி றந்து மொண்டு வீசிப் பொலிந்தன
விதரண தருவின் மலரிடை செருகிய கூதள
நீப மாலை விபுதர்கு லக்குலி
சன்ப யந்த செங்கை யானைக் கிசைந்தன
விகசித தமர பரிபுர முளரி தொழாவபி
ராம வேடர் விமலைதி னைப்புன
மங்கை கொங்கை கண்டு வேளைப் புகுந்தன
விதிர்தரு சமர முறிகர கமல நகாயுத
கோழி வீற விதரண சித்ரவ
லங்க்ரு தம்பு னைந்து பூரித் திலங்கின
விரகுடை யெனது மனதுட னகில்பனி நீர்புழு
கோட ளாவி ம்ருகமத கற்புர
குங்கு மங்க லந்து பூசித் துதைந்தன
வினைபுரி பவனி தொழுதழு துருகிய கோதையர்
தூது போக விடுமது பக்ஷண
வண்டி னந்தி ரண்டு சூழப் படிந்தன;
இசைதனி லினிய கயிசிகை கவுட வராளித
னாசி தேசி பயிரவி குச்சரி
பஞ்சு ரந்தெ ரிந்து வீணைக் கிசைந்தன

இறுதியி லுதய ரவிகண நிகரென ஆறிரு
காது தோயு மிலகும ணிக்கன
விம்ப குண்ட லங்கண் மேவிப் புரண்டன
எதிர்படு நெடிய தருவடு பெரிய கடாமுமிழ்
நாக மேக மிடிபட மற்பொரு
திண்சி லம்ப டங்க மோதிப் பிடுங்கின
எழுதரு மழகு நிறமலி திறலிசை யாகவு
தார தீர மெனவுரை பெற்றவ
டங்கலுஞ் சிறந்து சாலத் ததும்பின
இருள்பொரு கிரண விரணிய வடகுல பாரிய
மேரு சாதி யினமென வொத்துல
கங்க ளெங்க ணும்ப்ர காசித்து நின்றன
இயன்முநி பரவ வொருவிசை யருவரை யூடதி
பார கோர இவுளிமு கத்தவள்
கொங்கை கொண்ட சண்ட மார்பைப் பிளந்தன
இபரத துரக நிசிசரர் கெடவொரு சூரனை
மார்பு பீறி யவனுதி ரப்புனல்
செங்க ளந்து ளங்கி யாடிச் சிவந்தன
எவையெவை கருதி லவையவை தருகொடை யான்மணி
மேக ராசி சுரபிய வற்றொடு
சங்க கஞ்ச பஞ்ச சாலத்தை வென்றன;

அசைவற நினையு மவர்பவ மகலவெ மேல்வரு
கால தூதரை யுடையு மப்படி
யங்கு மிங்கு மெங்கு மோடத் துரந்தன
அகிலமு மெனது செயலல திலையென யானென
வீறு கூறி யறவுமி குத்தெழு
மைம்பு லன்றி யங்கி வீழத் திமிர்ந்தன
அனலெழு துவச முடுகுல முதிரவி யோமமு
மேழு பாரு மசலமு மிக்கபி
லங்க ளுங்கு லுங்க வாலித் ததிர்ந்தன
அடனெடு நிருதர் தளமது மடிய வலாரிதன்
வானை யாள அரசுகொ டுத்தப
யம்பு குந்த அண்ட ரூரைப் புரந்தன
அடவியில் விளவு தளவலர் துளவு குராமகிழ்
கோடல் பாட லளிமுரல் செச்சைய
லங்கல் செங்க டம்பு நேசித் தணிந்தன

அரியதொர் தமிழ்கொ டுரிமையொ டடிதொழு
தேகவி
மாலை யாக அடிமைதொ டுத்திடு
புன்சொ லொன்று நிந்தி யாமற் புனைந்தன
அழகிய குமர னுமைதிரு மதலை பகீரதி
மாதர் வாழு மறுவர் ப்ரியப்படு
கந்த னெந்தை யிந்த்ர நீலச் சிலம்பினன்
அநுபவ னநக னனனிய னமல னமோகன
நேக னேக னபினவ னித்திய
னஞ்ச லென்ப்ர சண்ட வாகைப் புயங்களே.

## 16. சித்து வகுப்பு

அடல்பு னைந்த வேலு மயிலு மென்றும் வாழி
யரிய தொன்று கூற வருகி ருந்து கேண்மின்
அளவில் பலகாய மோடாடி யண்ட
ரறிய விளையாட லாழூலி யொன்றில்
ஆசை வேறிலை யறுமுக வன்றிரு
வாணை மேருவை யடிதலை கண்டனம்
அகில லோகமு மடைவடை வேமுத
லருளி னோமது சிவனறி யாதல
அமையு மெனும்படி நின்றம நோரத
மவைமுழு துந்தரு வம்பத றாதுகொள்
ஆதியு முடிவுமி லாநந் தந்தரு
மாறிரு கரதல நாதன் றந்தவை
அவுஷத முளசில கிலுகி லுப்பைக
ளரசிலை நறுவிலி கரிய கக்கரி
அத்தி செம்பி ராகை முட்காவளை
துத்தி சங்க மோரி தழ்த்தாமரை
அவுரி கற்றாழை யொடுவைகு றிஞ்சிலி
சிவிறி கத்தாரி பொடுதலை சண்பகம்
ஆரைகொடு வேலி வேல்காஞ்சிரம்
வீரையிரு வேலி பேரீந்திலை
அழுக்குர வெருக்கிலை முருக்கிதழ் செருப்படை
யகத்தி தமரத்தை மதமத்தமொடு பித்திகை
ஆல மாத்தி கடுக்கை கொடிக்கழல்
கோலி தேட்கடை நெய்க்கொடை வக்கணை

அகில்ப ரம்பை காரை துடரி தும்பை சூரை
யலரி சம்பு நாவன் மருது சிந்து வாரம்
அறுகு தழுதாழை மாபாலை புன்கு
புரசு பழுபாகல் பூலா வழிஞ்சில்
ஆயி லாவிரை யிறலியி ரும்பிலி
யாடி யாவணி புடமிட வென்றழை
அவனி பாடல மனல மகீருக
மிவைச மூலமு மெழுபது சாலடை
அதிம துரந்தக ரஞ்சிறு பாலடை
பதிமுக வெந்தய மின்கய மோதகம்
ஆறிடை யபினரி தாரங் கந்தக
நூறிடை திரிபலை யோரொன் றெண்பலம்
அதிவிட யமுமொழி கிருமி சத்ருவு
மனன்முறு கலுமற முறுகு துத்தமு
அற்ப மொன்று கீரை வித்தேழிடை
யத்தி லொன்று பாதி தக்கோலமும்
அடவி கச்சோல நிமிளை நறும்பிசி
னரிதம் வெட்பாலை யரிசி கருங்கணி
ஆமலக மேல நான்மூன்றிடை
சேமசிலை கூட லோகாஞ்சனம்
அரப்பொடி கடிப்பகை விடத்திர ணமப்பிர
கசத்தைசத குப்பிவிதை கொத்தமலி திப்பிலி
ஆலி கோட்ட மெலிப்பகை கச்சிலை
நீலி காய்ச்சு நிலப்பனை கற்பிசின்!

மடல்சி வந்த தாழை மணவ சம்பு நீலம்
வருகு ரும்பை கோட றுருசு சம்பிராணி
மரிசி வசவாசி காகீச மஞ்சள்
மகிழ விதைமேதை மாமேதை குன்றி
வாரி வாய்நுரை சயில சலம்புரி
பூரி வாதுமை சணவுபெ ருங்குமிழ்
வடுவில் சீரக பலமயி ரோசனை
கடுகு ரோகணி சிவதைம னோசிலை
வகைவகை கொண்டொரு மண்டல மோரொடு
குகையினி லெண்பது செம்பினி லூறவை
வாதநல் வழிக ளநேகம் பண்டையில்
வாகட மலகுரு நாதன் றந்தது

வழிபடு மரியர பிரம ருட்பட
மொழிகிற வகையிது சிறிது பெற்றிலர்
மற்று மிந்த்ர சால முச்சாடன
முற்று மிங்ங னேத ரத்தாழ்விலை
மதலை யர்க்கீது மொழிவது பண்பல
கதவி னிற்றாழை யிடுபய மொன்றிலை
வாலுமுலை யோரி காராம்பசு
வாலின்மயிர் கீரி தேவாங்கழை
மரித்தவர் சனித்தகுழி யுப்புறு சலத்தினை
வடித்தினி தெடுத்தொரு குடத்தினி னிறைத்துவை
மாறில் தோத்திர வித்தை பலித்திடின்
மாடை சேர்க்க வருத்த முனக்கிலை

மணம தின்று நாளை யெனமொ ழிந்து கேளு
மனைக ளெங்கு மோடி யினிவி ரைந்து தேடு
வளையல் குழைபீலி காலாழி தண்டை
மணிவ யிரவீடு மேலீடு செம்பொன்
வாளி பாடக மணிபிறை சங்கிலி
பாளை சூடக மயில மிலம்பகம்
மவுலி நூபுர மயில்திரு வாசிகை
சவடி தோள்வளை முகவளை மேல்வளை
மரகத குண்டலம் வெண்டய மேகலை
யரசிலை கம்பி குறுங்குணி சாலகம்
வாரணி யுடைமணி யாரங் கிங்கிணி
வாகுவ லயநெளி பீடங் கண்டிகை
மணிமக ரிகைவளி திகிரி பட்டிகை
பணிகளி லழகிய பணிகள் கொக்கிகள்
வட்ட வம்பொ னோலை முத்தாவளி
சுட்டி சந்து காறைகைக் காறைகள்
வடக முத்தோலை யரைவட முஞ்செறி
கடகம் வித்தார மகர நெடுங்குழை
மாதரணி தாலி நூல்காஞ்சன
மாலிகை மதாணி பீதாம்பரம்
மதிப்பரிய கைச்சரி சரப்பணி யிலைச்சினை
பதக்க மிவையுட்பட வணிப்படல மிட்டுவை
மாடை பாட்டிபு தைத்த குடப்பண
மோடு கூட்டியு ருக்கவி ருப்புடன்;

இடுப்ர சங்கி யாம லுலைய நந்த கோடி
யெரியில் வெந்தி டாத கரிநி ரம்ப வேணும்
இதுபழைய கவுரி பாஷாண வுண்டை
யிடுசகல வேதி பூநாக செம்பின்
ஈய மானதொ ரிரதமு மெண்பல
மேழு கோடியு மிரவு சிவந்திடும்
யமுனை நீர்கொடு குகைபதி னாயிர
மிறுக வேசமை நிலவரை யூடுவை
எழுபதொ டெண்பது வண்டியி லேபத
ரிடுகொடு வந்து சொரிந்து குவாலிடு
யாமொழி படரச வாதந் தந்தன
நீசிவ குருவுப காரங் கண்டிரு
இரதமொ டுருகிய சருகு பித்தளை
யிவையிவை குகைதொறு மிடை நறுக்கிவை
எற்ற வந்தி ராது பொய்க்காளல
வெட்டி ரண்டு மாறு தப்பாதுகொள்
எழுப தக்ரோணி புடமுள செங்களம்
ரணமு கத்தானை படையொடு வந்திரு
ஈழம்வெகு கோடி யாமீந்திட
வேழுநிலை மாட நீமேய்ந்துகொள்
இபத்திர ளூரித்தன பருத்தன துருத்திக
ளிலக்கற வுனக்கரு கடுக்கின்வ சடக்கென
யாவும் வாய்ப்பது சத்ய முனக்கிவை
யேழு நாட்டரு மெத்த விளைத்தனம்

இறைவர் குன்ற மானை மணம கிழ்ந்த நாளி
லிணையி லண்ட ரோடு முணவு கொண்ட தாகும்
எமது பசிதீர மாராச விந்த்ர
வமுது படைபோத வாகாச கங்கை
யாறு போலநெய் சொரிவட கம்படை
நூறு சாலொடு பொரியலை யிங்கழை
இடுக மாவடு வடையிடை கீரையி
லவண மூறிய கறியடை வேபடை
இருபது தண்டை யுடும்பு குவால்சமை
துருவைகள் பன்றி சமைந்தவெ லாமழை
யாமைஅ வியல்முய லாணங் கண்டறி
யோமிது சிவசிவ மேலெங் கும்படை

இடைவெளி யறமிகு விடுக ருக்களை
யிறவகை கயல்கெளி றிவைபொ டித்தன
எட்டு வண்டி வாளை யிற்பீலியி
லிட்ட முண்டு தீயன் முற்பாடமை
இடைகொ ழுப்பாடி லிளையவெ லும்புட
னடைசு ரைக்காயி லடுபடை முன்கறி
ஈறுபுளி வார்வி டாய்போம்படி
யேடுபிரியாத பால்தேன்சொரி
இருக்கிற சருக்கரை வருக்கை கதலிக்கனி
ரசத்தினை யனைத்தையு மிலைக்கு ளடையப்படை
ஈக பாக்குடன் வெற்றிலை கர்ப்புரம்
யாரு மேத்த வினிச்சுக முற்றிரு;

மிடைத ரும்ப்ர வாள சடைபெ ரும்ப்ர வாகசு
விமலர் கொன்றை மாலை தருண சந்த்ர ரேகை
விரவு மணநாறு பாதார விந்த
விதரண விநோத மாதாவின் மைந்தன்
மீன கேதன னுருவின் மிகுந்தரு
டான வாரிதி சரவண சம்பவன்
விகிர்தி வேதனன் மவுன சுகாதன
னகில காரண னகில கலாதரன்
விகிசித சுந்தர சந்தன பாளித
ம்ருகமத குங்கும கஞ்சப யோதரி
வேழமு முழைகளு மாரும் பைம்புன
மேவுறு குறமகண் மேவுந் திண்புயன்
விரிகடல் துகளெழ வெகுளும் விக்ரமன்
அரிதிரு மருமக னறுமு கத்தவன்
வெட்சி கொண்ட தோளன் வெற்பூடுற
விட்டவென்றி வேன்மு மூச்சேவகன்
வெருவு நக்கீரர் சரணென வந்தருள்
முருக னிஷ்க்ரோத முநிகுண பஞ்சரன்
மேதகுபு ராண வேதாங்குர
னோதரிய மோன ஞானாங்குரன்
மிகைத்தவர் புரத்ரய மெரித்தவர் ப்ரியப்பட
அகத்திய முநிக்கொரு தமிழ்த்ரய முரைத்தவன்
வேத மூர்த்தி திருத்தணி வெற்புறை
சோதி கார்த்திகை பெற்ற விளக்கொளி

வெகுளி வென்ற வேள்வி முநிவர் சங்க மேற
விரவு மிந்த்ர லோக வழிதி றந்த மீளி
மிகவிருது கூறு மேவார்கள் கண்டன்
விகட வசுரேசர் சாமோது சண்டன்
மேக வாகன மிகுமத வெண்கய
பாக சாதன னகரி புரந்தவன்
விபுத தாரகன் விபுத திவாகரன்
விபுத தேசிகன் விபுத சிகாமணி
விபரித கஞ்ச விரிஞ்ச பராமுக
னபினவ கந்த னடைந்தவர் தாபரன்
மேருவை யிடிபட மோதுஞ் சங்க்ரம
தாரகன் மகுட விபாடன் புங்கவன்
வெயிலுமிழ் கொடி யொடு வினைமு கத்தினின்
மயில்மிசை வருமொரு வரத னிர்ப்பயன்
வித்தகன் சுவாமி நிர்ப்பாவகன்
சத்தியன் ப்ரதாப வித்யாதரன்
விரத நட்பாளர் பரியும சஞ்சல
னிருத நிட்டூர னிருதர் பயங்கரன்
வீரமத லோக வேள் காங்கெயன்
சூரரண சூர சூராந்தகன்
வினைப்பகை யறுப்பவ னினைத்தது முடிப்பவன்
மனத்துயர் கெடுத்தெனை வளர்த்தருள் க்ருபைக் கடல்
வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர்
சீல மேத்திய சித்தப்ர சித்தரே.

## 17. கடைக்கணியல் வகுப்பு

அலைகடல் வளைந்து டுத்த வெழுபுவி புரந்தி ருக்கு
மரசென நிரந்த ரிக்க வாழலாம்
அளகையர சன்ற னக்கு மமரரர சன்ற னக்கு
மரசென அறஞ்செ லுத்தி யாளலாம்
அடைபெறுவ தென்று முத்தி யதிமதுர செந்த மிழ்க்கு
மருள்பெற நினைந்து சித்தி யாகலாம்
அதிரவரு மென்று முட்ட அலகில்வினை சண்டை நிற்க
அடலெதிர் புரிந்து வெற்றி யாகலாம்;

இலகிய நலஞ்செய் புட்ப கமுமுட னிறம் வெளுத்த
இபவர செனும்பொ ருப்பு மேறலாம்

இருவரவர் நின்றி டத்து மெவரெவ ரிருந்தி டத்து
மொருவனிவ னென்று ணர்ச்சி கூடலாம்
எமபடர் தொடர்ந்த ழைக்கி லவருட னெதிர்ந்து ளுட்க
இடியென முழங்கி வெற்றி பேசலாம்
இவையொழிய வும்ப லிப்ப தகலவிடு முங்கள் வித்தை
யினையினி விடும்பெ ருத்த பாருளீர்;

முலையிடை கிடந்தி ளைப்ப மொகுமொகென வண்டி ரைப்ப
முகையவிழ் கடம்ப டுத்த தாரினான்
முதலிபெரி யம்ப லத்துள் வரையசல மண்ட பத்துள்
முனிவர்தொழ வன்று நிர்த்த மாடினான்
முனைதொறு முழங்கி யொற்றி முகிலென விரங்க வெற்றி
முறைநெறி பறந்து விட்ட கோழியான்
முதியவுண ரன்று பட்ட முதியகுடர் நன்று சுற்று
முதுகழுகு பந்த ரிட்ட வேலினான்;

மலைமருவு பைம்பு னத்தி வளருமிரு குன்ற மொத்தி
வலிகுடி புகுந்தி ருக்கு மார்பினான்
மழலைகள் விளம்பி மொய்த்த அறுவர்முலை யுண்டு முற்றும்
வடிவுடன் வளர்ந்தி ருக்கும் வாழ்வினான்
மலையிறை மடந்தை பெற்ற வொருமதலை யென்று தித்து
மலையிடிய வுந்து ணித்த தோளினான்
மயிலையு மவன்றி ருக்கை யயிலையு மவன்க டைக்க
ணியலையு நினைந்தி ருக்க வாருமே.

## 18. சிவலோக வகுப்பு

உரகமு மிதழியு முதகமு முடுபதி யும்புனை
யும்பஞ் சாட்சரர் பங்கின் கொடிதாளினில்
உலகமு மலைகளு முததியு முயிரும டங்கவொ
டுங்கும் பார்ப்பதி மைந்தன் கமலாலயன்
உபநிட முடிவினு மிடபம தனிலுமு யங்கிவ
யங்குஞ் சீர்ப்பதி யொன்றென் றவிதாவென
உறைவிடு படையின னடலுடை நிசிசரர் தண்டமு
டைந்தங் கார்ப்பெழ வங்கம் பொருசேவகன்;

வரபதி சுரபதி சரவண மடுவினில் வந்தருள்
கந்தன் கார்த்திகெ யன்செங் கழுநீர்மலர்
மருவிய குருபரன் வனசரி பதயுக கஞ்சம்வ
ணங்கும் பாக்யக தம்பன் கருணாகரன்
வடதரு விலையிலும் வெகுமுக மவுலிய னந்தனெ
னுஞ்செஞ் சேக்கையி லுங்கண் டுயின்மால்திரு
மருமக னிமையவர் வழிபடு மணியணி கிங்கிணி
பண்கொண் டார்த்திசை கொஞ்சும் பதசூடிகை;

அருவுரு வொழியவொ ரபிநவ வடிவரு ளுந்தனி
யந்தந் தீக்ஷெ னுங்குண் டலபூஷணம்
அணிமய மெனுமொரு சிவிகையொ டதிகுண மஞ்சினு
மஞ்சொன் றாக்கிய தென்பொங் கரியாசனம்
அறநெறி முறைமையி லொழுகிய வழகிய பண்பெனு
மம்பொன் சேர்த்தக லிங்கஞ் சயசாரமும்
அவனவ ளதுவென மொழியவு மிலதொரு வன்பிணி
யுங்கொண் டாக்கமு மின்பங் களுமேதரும்;

இரவலர் மிடிகெட வுதவிய விதரண கங்கண
மிங்கங் காப்பிலெ னுஞ்சுந் தரகாகளம்
எனதறு துறவினு முயர்கொடை யவிரத சங்குல
கெங்குங் கேட்டுவ ழங்கும் பொறைமாமுர
சிமையவர் கணமுனி கணமுட னினிதுப்ர பஞ்சமி
றைஞ்சுங் கீர்த்திது ரங்கந் திறல்வாரணம்
இருவினை கெடவொரு நிரமய பரமவு னந்தரு
மின்பந் தேக்கிய வன்பின் சிவலோகமே.

## 19. மயில் வகுப்பு

ஆதவனு மம்புலியு மாசுறவி முங்கியுமி
ழாலமரு வும்பணியி ரண்டு மழுதே
ஆறுமுக னைந்துமுக னானைமுக னெங்கடவு
ளாமெனமொ ழிந்தகல வென்று விடுமே
ஆர்கலிக டைந்தமுது வானவர ருந்தவரு
ளாதிபக வன்றுயில நந்தன் மணிசேர்
ஆயிரமி ருந்தலைக ளாய்விரிப ணங்குருதி
யாகமுழு துங்குலைய வந்த றையுமே;

வேதமுழு தும்புகலி ராமனொரு தம்பிமிசை
வீடணன ருந்தமையன் மைந்த னிகலாய்
வீசுமர வஞ்சிதறி யோடவரு வெங்கலுழன்
மேலிடி யெனும்படிமு ழங்கி விழுமே
மேதினிசு மந்தபெரு மாசுணம யங்கநக
மேவுசர ணங்கொடுல கெங்கு முழுமே
வேலியென வெண்டிசையில் வாழுமுர கந்தளர
வேயழலெ னுஞ்சினமு டன்ப டருமே;

போதினிலி ருந்தகலை மாதினைம ணந்தவுயர்
போதனை யிரந்துமலர் கொண்டு முறையே
பூசனைப ரிந்துகொடி யாகிமகி ழொன்றுதுகிர்
போன்முடிவி ளங்கவரு மஞ்ச மடுமே
பூதரொடு கந்தருவர் நாதரொடு கிம்புருடர்
பூரணக ணங்களொடு வந்து தொழவே
போரிடுவ வென்றுவெகு வாரணக ணங்களுயிர்
போயினமெ னும்படியெ திர்ந்து விழுமே;

கோதகலு மைந்துமலர் வாளிமத னன்பொருவில்
கோலவுட லங்கருகி வெந்து விழவே
கோபமொடு கண்டவிழி நாதரணி யும்பணிகள்
கூடிமன மஞ்சிவளை சென்று புகவே
கூவியிர வந்தமுணர் வாழியென நின்றுபொரு
கோழியொடு வென்றிமுறை யும்ப கருமே
கோலமுறு செந்திநகர் மேவுகும ரன்சரண
கோகனத மன்பொடுவ ணங்கு மயிலே.

## 20. கொலு வகுப்பு

அருமறை யவன்முத லரியரன் மகபதி
யநங்க னிமையோ ரினங்க ளொருபால்
அருணனு மதியமு மனலெழு கனலியு
மணங்கி னொடுசூழ் கணங்க ளொருபால்
வருணனு நிருதியும் வழியொடு தனதனு
மகிழ்ந்து மிகவே புகழ்ந்த தொருபால்
வயிரவ ரொடுபட ருவணரு முரகரும்
வரங்க்ள் பெறவே யிரங்க வொருபால்

இருடிக ளெவர்களு மினியகி னரர்களு
மிணங்கி யெதிரே வணங்க வொருபால்
இபமுக வனுமெழி லிளவல்க ளனைவரு
மியன்ற நெறியே முயன்ற தொருபால்

உருமலி குறளின மொடுவசு முசுமுக
னுறைந்து பரிவாய் நிறைந்த தொருபால்
உடுவொடு நடவுப னிருவரு முறைமுறை
யுகந்து தொழவே மிகுந்த தொருபால்;

அடல்விடை முகனறை கதையுற வெகுசன
மதுங்கி யருகே யொதுங்க வொருபால்
அயன்முடி திருகிய வயவனு நியமமொ
டடங்கி வலமே தொடங்க வொருபால்

மடல்புனை புகரொடு வருபதி னொருவரு
மருங்கி னுறவே நெருங்க வொருபால்
மருவொடு துவரிரு வருமிசை வலமொடு
வசிந்து மனமே கசிந்த தொருபால்

மிடலிறை விறலரி விமலர்க ளருள்சுதன்
வியந்து விரைவாய் நயந்த தொருபால்
வெயில்விரி சுடரவன் மகனொடு மதிமகன்
விளம்பு முறையே கிளம்ப வொருபால்

உடலொளி மவுனிக ளுடனுப னிடதரு
முளங்கு ளிரவே விளங்க வொருபால்
உமைதிரு மகணில மகள்கலை மகளொடு
முகந்தெ வருமே தொகுந்த தொருபால்;

அதிபகி ரதிபயி ரவிபக வதிசசி
யரம்பை யருமே நிரம்ப வொருபால்
அழகிய கவுரியொ டிலகிய வலவையு
மடைந்து தயவாய் மிடைந்த தொருபால்

மதியர சருநிரை வசியரும் வினைஞரு
மலிந்து முகமே பொலிந்த தொருபால்
வருசிவ னடியவ ரரகர வெனமுறை
வழங்கு கடல்போன் முழங்க வொருபால்

விதிமுறை கருதியை வகைபுரி கருவிகள்
விளைந்த வொலிவா னளைந்த தொருபால்
விதமுட னபிநய வனிதையர் சதிமுறை
விரிந்த நடமே புரிந்த தொருபால்

உதிர்தரு மலர்விரை யுறுபகை ம்ருகமத
முமிழ்ந்த மணமே கமழ்ந்த தொருபால்
ஒழுகிய கிரிதொடு பணிதம தடுசுட
ருவந்த வொளியே நிவந்த தொருபால்;

அரியக டெனமுக டளவிய வொருகுடை
யமர்ந்த நிழலே சமைந்த தொருபால்
அருமட வனமென விருபுடை கவரிக
ளசைந்த வழகே யிசைந்த தொருபால்

வரிசைசெய் துயலொடு வனமயில் சிவிறியின்
வயங்கு சிறுகா லியங்க வொருபால்
மறுகட லினிலெழு நிறைமதி யமுதென
வரிந்து பனிநீர் சொரிந்த தொருபால்

விரியிருள் வலிதரு கிரணம தெனநல
மிகுஞ்சு ழலில்வீ சுகுஞ்ச மொருபால்
வியன்மர கதமணி மிளிர்தரு களசெதிர்
விரைந்து நிரையாய் நிரைந்த தொருபால்

உரியவெ ளிலையுட னுயரிய கமுகினி
லுகுந்த கனியே பகுந்த தொருபால்
உலகுள வனிதைய ரவரவர் விரதமொ
டுணர்ந்து கனியே கொணர்ந்த தொருபால்;

அறுகதி ரவரென அறுமணி மவுலிக
ளடர்ந்து வெயிலே படர்ந்த தொருபால்
அறுமதி யெனவறு திருமுக சததள
அலர்ந்த மலரே மலர்ந்த தொருபால்

மறுவறு கடலென மருவுப னிருவிழி
வழிந்த அருளே பொழிந்த தொருபால்
வனைதரு மகரமு மணியணி பணிகளும்
வயங்கு குழையே தயங்க வொருபால்

இறுகுபொன் மலையொடு மிடறுப னிருபுய
மிசைந்து நெடுவா னசைந்த தொருபால்
எழிலியை யனையப னிருகையி லயின்முத
லிலங்கு படையே! துலங்க வொருபால்

உறுவரை யருவியை நிகர்தரு முரமிசை
யுடன்கொள் புரிநூல் கிடந்த தொருபால்
உருமென விகலிமு னெதிர்பொரு மவுணரு
ளுடைந்த வுடைவாள் சிறந்த தொருபால்;

அநவர தமுமறை முறையிடு பரிபுர
மலங்கு மிருதாள் குலுங்க வொருபால்
அளவறு கலவியின் முழுகிய குறமக
ளமர்ந்து ளொயிலாய் நிமிர்ந்த தொருபால்

வனதரு வினிலுறை சதமக னருண்மகள்
வதிந்து மணமே பொதிந்த தொருபால்
வருமடி யவரிடம் வலியச நதம்வர
வளர்ந்த சபையே கிளர்ந்த தொருபால்

நினைவொடு பணிபவர் வினைதுகள் படவெதிர்
நினைந்து திருநீ றணிந்த தொருபால்
நிறைமல ரொடுநல கலவையு முயர்குரு
நினைந்து தூரவே புனைந்த தொருபால்

தினகர னுலவுச நிதியினி லிரவலர்
தெளிந்த தமிழே பொழிந்த தொருபால்
சிவபர கிரியினி லொருசிவன் வடிவொடு
திருந்த முருகோ னிருந்த கொலுவே.

## 21. வீரவாள் வகுப்பு

பூவுளோ னுக்குமுயர் தேவர்கோ னுக்குமெழு
பூவில்யா வர்க்கும்வரு துன்புதீர்த் திடுமே
பூதசே னைக்குளொரு கோடிசூர் யப்பிரபை
போலமா யக்கரிய கங்குனீக் கிடுமே
பூதிபூ சிப்பரமர் தோலைமே லிட்டதொரு
போர்வைபோ னெட்டுறைம ருங்குசேர்த் திடுமே
போரிலே நிர்த்தமிடு வீரமா லக்ஷ்மிமகிழ்
பூசைநே சித்துமலர் தும்பைசாத் திடுமே;

பாவரூ பக்கொடிய சூரனார் பெற்றபல
பாலர்மா ளத்தசைக ளுண்டுதேக் கிடுமே
பாநுகோ பப்பகைஞன் மேனிசோ ரக்குருதி
பாயவே வெட்டியிரு துண்டமாக் கிடுமே
பாடுசேர் யுத்தகள மீதிலே சுற்றுநரி
பாறுபேய் துய்த்திடநி ணங்களூட் டிடுமே
பாடியா டிப்பொருத போரிலே பத்திரக
பாலிசூ லப்படையை வென்றுதாக் கிடுமே;

ஆவலா கத்துதிசெய் பாவலோர் மெய்க்கலிக
ளாமகோ ரக்களைக ளைந்துநீக் கிடுமே
யாருமே யற்றவனெ்ன் மீதொரா பத்துறவ
ராமலே சுற்றிலுமி ருந்துகாத் திடுமே
ஆடல்வே ணற்படைக ளாணையா வுக்குமுத
லாணையா வைத்துவலம் வந்துபோற் றிடுமே
ஆலகா லத்தைநிகர் காலசூ லத்தையும
றாதபா சத்தையும ரிந்துபோட் டிடுமே;

மேவலார் முப்புரமு நீறவே சுட்டவொரு
மேருவாம் விற்பரமர் தந்தபாக் கியவான்
வேடர்மா னுக்குமுயர் தேவயா னைக்குமிசை
வேலர்தா ளைத்தொழுது யர்ந்தவாழ்க் கையினான்
வீறுசேர் மிக்ககண நாதனா ரெட்டுவகை
வீரர்நே யத்தமைய னென்றதோட் டுணைவோன்
மேன்மையாம் லக்ஷரத வீரர்பூ சிக்கவரு
வீரவா குத்தலைவன் வென்றவாட் படையே.

## 22. சிவகிரி வகுப்பு

மெத்த மெத்த வக்ர மத்தின்
மெத்த மெத்த விக்ர மத்தின்
மெத்த மெத்த வுக்ர வெற்றி மிகுபாசமே
விட்டு விட்டு றுக்கு றுக்கு
கட்டு கட்டு குத்து குத்து
வெட்டு வெட்டெ னச்சி னத்து நமனாடியே;

சத்த மிட்ட தட்டி நெட்டெ
யிற்றி னைக்க டித்து றுக்கு
தர்க்க மிட்டெ னைப்பி டிக்க வருபோதிலே

தத்த ளிக்கு புத்தி யைத்தி
டப்ப டுத்தி யொத்தி டத்த
ணிப்பு றுத்தி மெய்த்து ணைக்கு வரவேணுமே;
எத்த லத்து மெப்ப திக்கு
மெப்ப டிக்கு மெச்ச ரித்து
நற்ப தத்தை யுச்சரிக்கு நினைவாகியே
இட்டம் வைத்த வர்க்க நுக்ர
கச்ச முத்ர வித்தை யிற்ப்ர
சித்த நித்ய முத்த மிழ்க்கு மருள்போதனே;
அத்ர பத்ர சித்ர மிட்ட
யிற்ப டைத்த யிற்கி ணைத்த
லர்க்க ணுற்ற பொற்கு றத்தி மணவாளனே
அத்த னுக்கு மைக்கி தத்த
புத்ர சித்தி முத்தி யைச்செ
யற்பு தச்சி வக்கி ரிக்குள் முருகேசனே.

## 23. திருச்செந்தில் வகுப்பு

சந்த பந்த முந்து விந்தை செஞ்சொ லின்ப்ர பந்த நந்து
சங்க மங்க லம்பொ ருந்து தமிழ்பாடியே
தஞ்ச மென்று சென்று சென்று நஞ்சு விஞ்சு நெஞ்ச வஞ்சர்
தங்கண் முன்பு நின்று நின்று மெலிவோதியே;

சிந்தை நொந்து நொந்து நைந்து நைந்து வெம்பி வெம்பி யங்கி
சிந்தி யிந்த வெங்கு டம்பை யழிபோதுமா
சிங்க முன்பு குந்த தந்தி யின்கு லங்க லங்கு பண்பொ
சிந்த துன்ப மென்றொ ழிந்து கரையேறுவேன்;

அந்த ரங்க ளண்ட ரண்ட மண்ட லங்கு லுங்க நின்ற
சைந்த சைந்து பந்தெ ழும்ப அசுராதியோர்
அங்க டங்க டுண்ட துண்ட கண்ட பந்தி சண்டை வந்த
லைந்து ருண்டு மண்டை சிந்த அடர்கோபனே;

கந்த சந்த நுங்கு கும்ப கொங்கை யிந்தி ரன்ம டந்தை
கங்க ணம்பு ரந்த வென்றி யணிநேயனே
கம்பு மஞ்ச முந்தி கழ்ந்தி ருந்தி டுந்தி றஞ்செ றிந்து
கஞ்ச நன்ற லர்ந்த செந்தின் முருகேசனே.

## 24. திருப்பழநி வகுப்பு

எந்தவினை யும்பவமு மெந்தவிட மும்படரு
மெந்தவிக லும்பழியு மெந்தவமு வும்பிணியு
மெந்தவிகழ் வுங்கொடிய வெந்தவசி யும்சிறிது
மணுகாமலே

எந்தவிர வுந்தனிமை யெந்தவழி யும்புகுத
வெந்தவிட முஞ்சபையி லெந்தமுக மும்புகலு
மெந்தமொழி யுந்தமிழு மெந்தவிசை யும்பெருமை
சிதறாமலே;

வந்தனைசெய் துன்சரண நம்புதல்பு ரிந்தவருள்
வந்தநுதி னந்தனிலு நெஞ்சினினை வின்படிவ
ரந்தரவு வந்தருளி தம்பெறுவ தன்றிநெடு
வலைவீசியே;

வஞ்சவிழி சண்டனுறு கின்றபொழு துங்குமர
கந்தவென நன்கறைய வுந்தெளிவு தந்துயிர்வ
ருந்துபய முந்தனிமை யுந்தவிர அஞ்சலென
வரவேணுமே;

தந்தனன தந்தனன டிண்டிகுடி டிண்டிகுடி
குண்டமட குண்டமட மண்டமென நின்றுமுர
சந்திமிலை பண்பைதுடி திண்டிமமு ழங்குமொலி
திசைவீறவே

தண்டவமர் மண்டசுரர் மண்டைநிண மென்றலகை
யுண்டுமிழ்தல் கண்டமர ரிந்திரன் வணங்குபத
தண்டைசிறு கிங்கிணி புலம்பிடவ ரும்பவனி
மயில்வாகனா;

செந்தளிரை முந்துபட மென்றுளம ருண்டுநிறை
சந்தனவ னங்குலவு மந்திகுதி கொண்டயல்செ
றிந்தகமு கின்புடைப துங்கிடவ ளைந்துநிமிர்
மடல்சாடவே

சிந்தியவ ரம்பைபல வின்கனியில் வந்துவிழ
மென்கனியு டைந்தசுளை விண்டநறை கொண்டுசிறு
செண்பகவ னங்கள்வளர் தென்பழநி யம்பதியின்
முருகேசனே

## 25. திருப்பரங்கிரி வகுப்பு

சாதியுங்குல மாவதுங்குடி யாவதுஞ்சன மாவதுங்கிளை
தாரமுந்திர பாலரும்பிர தானமும்பெரு காண்மை
யும்பெறு
தானமும்பகு மானமுஞ்சிவ ஞானமும்பல
கோலமும்புரி தொழிலோடுமே

தாழ்வகன்றிடு வாழ்வும் வெம்பிணிநோயுமங்கதி
லாதுரந்தனி
லாவதுந்தளர் சாவொழிந்திடு
யோகமுஞ்சிவபேதுமெந்தநி
தானமுஞ்செய்த ராசுகண்டது போல்வரும்பொது
வாகுமென்றுன திருதாளையே;

ஓதினெஞ்சய ரார்தினந்திரி காலமுந்தொழு வோர்விரும்பிய
தேதுமன்புட னேதருங்க்ருபை யாகவந்தது பூதிதந்துமு
னூல்கடந்திட வேபுரந்தருள் கூருமிங்கித
சேவைநம்பிய படிகாணவே

ஓகைவந்தனை யாய்வணங்கிய வேழைசிந்தையு
ளேநினைந்திடு
வேளைவந்தினி தாய்வரந்தர வேணுமென்றக
மேவருந்தியு
மோதினன்றின நான்விளம்புத னீயறிந்துமி
தேனிரங்கிலை யறிவேனையா;

ஆதியந்தம னாதிவிந்துவு நாதமும்பிரி யாநிறைந்தவ
ரூபவின்பசொ ரூபசுந்தர சோதிமின்பொலி
நீதியம்பொரு
ளாகநின்றப ராபரன்கரு ணாலயன்புல
வோரிறைஞ்சிட வெதிர்காளிவா

தாடலின்செக சேகிணங்கிண சேகுடண்டம டாடமண்டம
தாகிணங்கிண தோதிணங்கின தாதிமிந்திமி தோவெ
னுந்தொனி
யார்சிலம்பொலி தாளமிஞ்சிட வேநடம்புரி பாதநம்பர
னருள்பாலனே!

மாதிரந்திசை யாகவந்திக டாசலந்திரை மாசலம்புவி
மாகமண்டக டாகமும்பொனின்மேருவின்றலை
யேகுலுங்கிட
வாசமொன்றிய கால்பொருந்துகள் வானிரம்பிட
வேவருங்கதிர் வடிவேலனே

வானரங்கதிர் தாவுதண்டலை மேவுகொண்டலை
யூடுநின்றலை
மாவினங்களி கூருநண்பொடு கோகநஞ்செறி
வாவிசிந்திய
பாலருந்திய பேர்சிறந்திரு மூவர்விஞ்சையர்
சூழ்பரங்கிரி முருகேசனே.

திருவகுப்பு முற்றிற்று

உ

# வேல் விருத்தம்

## அருணகிரிநாதர்

மகரமள றிடைபுரள உரககண பணமவுலி
மதியுமிர வியுமலையவே
வளரெழிலி குடருழல இமையவர்கள் தயரகல
மகிழ்வுபெறு மறுசிறையவாஞ்

சிகரவரை மனைமறுகு தொறுநுளைய மகளிர்செழு
செநெல்கனொடு தரளமிடவே
செகசிரப கிரதிமுத னதிகள்கதி பெறவுததி
திடரடைய நுகரும் வடிவேல்

தகரமிரு கமதமென மணமருவு கடகலுழி
தருகவுளு முறுவளெயிறுந்
தழைசெவியு நுதல்விழியு முடையவொரு கடவுள்மகிழ்
தருதுணைவ னமரக் குயிலுங்

குகரமலை யெயினர் குல மடமயிலு மெனவிருவர்
குயமொடமர் புரியுமுருகன்
குமரனறு முகனெதிரும் விருதுநிசி சரரணிகள்
குலையவிடு கொடிய வேலே.

வெங்காள கண்டர்கைச் சூலமுந் திருமாயன்
வெற்றிபெறு சுடராழியும்
விபுதர்பதி குலிசமுஞ் சூரன் குலங்கல்லி
வெல்லா வெனக்கருதியே

சங்க்ராம நீசயித் தருளெனத் தேவருஞ்
சதுர்முகனு நின்றிரப்பச்
சயிலமொடு சூரனுட லொருநொடியி லுருவியே
தனியாண்மை கொண்ட நெடுவேல்

கங்காளி சாமுண்டி வாராகி யிந்த்ராணி
கௌமாரி கமலாசனக்
கன்னிநா ரணிகுமரி த்ரிபுரைபயி ரவியமலை
கௌரிகா மாட்சிசைவ

சிங்காரி யாமளை பவானிகார்த் திகைகொற்றி
த்ரியம்பகி யளித்தசெல்வச்
சிறுவனறு முகன்முருக னிருதர்கள்கு லாந்தகன்
செம்பொற் றிருக்கைவேலே. 2

வேதாள பூதமொடு காளிகா ளாத்ரிகளும்
வெகுளுறு பசாசகணமும்
வெங்கழு குடன்கொடி பருந்துசெம் புவனத்தில்
வெம்பசி யொழிக்கவந்தே

ஆதார கமடமுங் கணபண வியாளமும்
அடக்கிய தடக்கிரியெலாம்
அலையநட மிடுநெடுந் தானவர் நிணத்தசை
யருந்திப் புரந்த வைவேல்

தாதார் மலர்ச்சுனைப் பழநிமலை சோலைமலை
தனிப்பரங் குன்றேரகந்
தணிகைசெந் தூரிடைக் கழியாவி னன்குடி
தடங்கட லிலங்கையதனிற்

போதார் பொழிற்கதிர் காமத் தலத்தினைப்
புகழுமவ ரவர்நாவினிற்
புந்தியி லமர்ந்தவன் கந்தன்முரு கன்குகன்
புங்கவன் செங்கைவேலே. 3

அண்டருல குஞ்சுழல வெண்டிசைக ளுஞ்சுழல
அங்கியு முடன்சுழலவே
அலைகடல்க ளுஞ்சுழல அவுணருயி ருஞ்சுழல
அகிலதல முஞ்சுழலவே

மண்டல நிறைந்தரவி சதகோடி மதியுதிர
மாணப் பிறங்கியணியு
மணியொலியி னிற்சகல தலமுமரு ளச்சிரம
வகைவகையி னிற்சுழலும்வேல்

தண்டமுட னுங்கொடிய பாசமுட னுங்கரிய
சந்தமுட னும்பிறைகள்போற்
றந்தமுட னுந்தழலும் வெங்கணுட னும்பகடு
தன்புறம் வருஞ்சமனையான்

கண்டுகுலை யும்பொழுதி லஞ்சலென மென்சரண
கஞ்சமுத வுங்கருணைவேள்
கந்தன்முரு கன்குமரன் வண்குறவர் தம்புதல்வி
கணவனடல் கொண்ட வேலே.

ஆலமா யவுணருக் கமரருக் கமுதமா
யாதவனின் வெம்மையொளிமீ
தரியதவ முநிவருக் கிந்துவிற் றண்ணென்
றமைந்தன் பருக்கு முற்றா

மூலமாம் வினையறுத் தவர்கள்வெம் பகையினை
முடித்திந்தி ரர்க்குமெட்டா
முடிவிலா நந்தனல் கும்பத மளித்தெந்த
மூதண்ட மும்புகழும் வேல்

ஏலமாம் யானையின் கோடதிற் சொரிமுத்து
மின்பணைக ளுமிழுமுத்து
மினிவாடை மான்மத மகிலோடு சந்தன
மிலவங்க நறவ மாருந்

தாலமா மரமுதற் பொருள்படைத் திடுமெயினர்
தருவநிதை மகிழந னையன்
தனிநடம் புரிசமர முருகனறு முகன்குகன்
சரவணக் குமரன் வேலே. 5

பந்தாட லிற்கழங் காடலிற் சுடரூசல்
பாடலினொ டாடலி னெலாம்
பழந்தெவ்வர் கட்கந் துணித்திந்தி ரற்கரசு
பாலித்த திறல் புகழ்ந்தே

சந்தாரு நாண்மலர்க் குழலரம் பையர்களுஞ்
சசிமங்கை யனையர் தாமுந்
தன்னையன் பொடுபாடி யாடும்ப்ர தாபமுந்
தலைமையும் பெற்ற வைவேல்

மந்தா கிறித்தரங் கச்சடில ருக்கரிய
மந்த்ரவுப தேச நல்கும்
வரதேசி கன்கிஞ்சு கச்சிகா லங்கார
வாரணக் கொடியு யர்த்தோன்

கொந்தார் மலர்கடம் புஞ்செச்சை மாலையுங்
குவளையுஞ் செங்காந்தளுங்
கூதாள மலருந் தொடுத்தணியு மார்பினன்
கோலத் திருக்கை வேலே. 6

அண்டங்க ளொருகோடி யாயினுங் குலகிரி
அநந்தமா யினுமேவினா
லடையவுரு விப்புறம் போவதல் லதுதங்க
லறியாது சூரனுடலைக்

கண்டம் படப்பொருது காலனுங் குலைவுறுங்
கடியகொலை புரியு மதுசெங்
கனகா சலத்தைக் கடந்துமுனை யிட்டுக்
கடக்கின்ற துங்கநெடுவேல்

தண்டந் தநுத்திகிரி சங்குகட் கங்கொண்ட
தானவாந் தகன் மாயவன்
தழல்விழிக் கொடுவரிப் பருவுடற் பஃறலைத்
தமனியச் சுடிகையின் மேல்

வண்டொன்று கமலத்து மங்கையுங் கடலாடை
மங்கையும் பதம்வருடவே
மதுமலர்க் கண்டுயில் முகுந்தன்மரு கன்குகன்
வாகைத் திருக்கை வேலே. 7

மாமுதல் தடிந்துதண் மல்குகிரி யூடுபோய்
வலியதா னவர்மார் பிடம்
வழிகண்டு கமலபவ னத்தனைச் சிறையிட்டு
மகவான் றனைச் சிறைவிடுத்

தோமஇரு டித்தலைவ ராசிபெற் றுயர்வானி
லும்பர்சொற் றுதிபெற்றுநா
வுடையகீ ரன்றனது பாடல்பெற் றுலகுதனி
லொப்பில்புகழ் பெற்றவைவேல்

சோமகல சப்ரபா லங்கார தரஜடா
 சூடிகா லாந்தகாலர்
துங்கரக்ஷ கத்ரோண கட்கசுலி சஞ்சூல
 துரகசுகே சரமாம்பரச்

சேமவட வாம்புயப் பரணசங் காபரண
 திகம்பர த்ரியம்பகமகா
தேவநந் தனகஜா நநசகோ தரகுகன்
 செம்பொற் றிருக்கை வேலே. 8

தேடுதற் கரிதான நவமணி யழுத்தியிடு
 செங்கரனை யமுதம் வாய்கொள்
செயமளித் தருளெனக் கெனவுவப் பொடுவந்து
 சேவடி பிடித்த தெனவும்

நீடுமைக் கடல்சுட்ட தற்கடைந் தெழுகடலு
 நீயெமைக் காக்க வெனவும்
நிபுட முடி நெடியகிரி யெந்தமைக் காவெனவு
 நிகழ்கின்ற துங்க நெடுவேல்

ஆடுமைக் கணபணக் கதிர்முடிப் புடையெயிற்
 றடலெரிக் கொடியவுக்ர
அழல்விழிப் படுகொலைக் கடையகட் செவியினுக்
 கரசினைத் தனியெடுத்தே

சாடுமைப் புயலெனப் பசுநிறச் சிகரியிற்
 றாய்மிதித் துடனடிக்குஞ்
சமரமயில் வாகன னமரர்தொழு நாயகன்
 சண்முகன் றன்கை வேலே. 9

வலாரியல லாகுலமி லாதகல வேகரிய
 மாலறியு நாலு மறைநூல்
வலானலை விலானசி விலான்மலை விலானிவர்
 மநோலய வுலாச முறவே

யுலாவரு கலோலமக ராலய சலங்களு
 முலோகநிலை நீர்நிலையிலா
வொலாவொலி நிசாசர ருலோகம தெலாமழ
 லுலாவிய நிலாவு கொலைவேல்

சிலாவட கலாவிநொத வாசிலிமு காவிலொசு
னாசின சிலாத ணிவிலா
சிலாமல ரெலாமதிய மோதிமதி சேலொழிய
சேவக சராப முகிலாம்

விலாசகலி யாணகலை சேரபசு மேலைமுலை
மேவிய விலாச வகலன்
விலாழியி னிலாழியகல் வானிலன லாரவிடு
வேழமிளை ஞன்கை வேலே. 10

வேல் விருத்தம் முற்றிற்று

உ

# மயில் விருத்தம்

## அருணகிரிநாதர்

### காப்பு

சந்தன பாளித குங்கும புளகித
　　சண்பக கடகபுயச்
சமர சிகாவல குமர சடானன
　　சரவண குரவணியுங்
கொந்தள பாரகி ராதபு ராதநி
　　கொண்க வெனப்பரவுங்
கூதள சீதள பாத மெனக்கருள்
　　குஞ்சரி மஞ்சரிதோய்
கந்தக்ரு பாகர கோமள கும்பக
　　ராதிப மோகரத
கரமுக சாமர கர்ண விசால
　　கபோல விதானமதத்
தெந்த மகோதர மூஷிக வாகன
　　சிந்துர பத்மமுகச்
சிவசுத கணபதி விக்ந விநாயக
　　தெய்வ சகோதரனே.

### நூல்

சந்தான புஷ்பபரி மளகிண் கிணீமுகச்
　　சரணயுக ளமிர்தப்ரபா
　சந்த்ரசே கரமூஷி காரூட வெகுமோக
　　　சத்யப்ரி யாலிங்கனச்

சிந்தா மணிக்கலச கரகட கபோலத்ரி
　　யம்பக விநாயகன்முதற்
　சிவனைவலம் வருமளவி லுலகடைய நொடியில்வரு
　　　சித்ரக் கலாப மயிலாம்

மந்தா கிநிப்பிரப வதரங்க விதரங்க
வனசரோ தயகிர்த்திகா
வரபுத்ர ராஜீவ பரியங்க தந்திய
வராசலன் குலிசாயுதத்

திந்த்ராணி மங்கல்ய தந்துரட் சாபரண
இகல்வேல் விநோத னருள்கூ
ரிமையகிரி குமரிமக னேறுநீ லக்ரீவ
ரத்நக் கலாப மயிலே.

சக்ரப் ரசண்டகிரி முட்டக் கிழிந்துவெளி
பட்டு க்ரவுஞ்ச சயிலந்
தகரப் பெருங்கனக சிகரச் சிலம்புமெழு
தனிவெற்பு மம்புவியுமெண்

டிக்குத் தடங்குவடு மொக்கக் குலுங்கவரு
சித்ரப் பதம் பெயரவே
சேடன்முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சூரர்
திடுக்கிட நடிக்கு மயிலாம்

பக்கத்தி லொன்றுபடு பச்சைப் பசுங்கவுரி
பத்மப் பதங் கமழ்தரும்
பாகீ ரதிச்சடில யோகீ சுரர்க்குரிய
பரம வுபதேச மறிவிக்

கைக்குச் செழுஞ்சரவ ணத்திற் பிறந்தவொரு
கந்தச் சுவாமி தணிகைக்
கல்லார கிரியுருக வருகிரண மரகத
கலாபத்தி விலகு மயிலே. 2

ஆதார பாதளம் பெயரவடி பெயரமூ
தண்டமுக டதுபெயரவே
யாடரவ முடிபெயர எண்டிசைகள் பெயரவெறி
கவுட்கிரி சரம் பெயரவே

வேதாள தாளங்க ளுக்கிசைய ஆடுவார்
மிக்குப் ரியப்படவிடா
விழிபவுரி கவுரிகண் டுளமகிழ விளையாடும்
விஸ்தார நிர்த்த மயிலாம்

மாதாநு பங்கியெனு மாலது சகோதரி
மகீதரி கிராத குலிமா
மறைமுநி குமாரிசா ரங்கனந் தனிவந்த
வள்ளிமணி நூபுர மலர்ப்

பாதார விந்தசே கரனேய மலருமுற்
பலகிரி யமர்ந்த பெருமாள்
படைநிருதர் கடகமுடை படநடவு பச்சைப்
பசுந்தோகை வாகை மயிலே. 3

உககோடி முடிவின்மண் டியசண்ட மாருத
முதித்ததென் றயனஞ்சவே
ஒருகோடி யண்டரண் டங்களும் பாதாள
லோகமும் பொற்குவடுறும்

வெகுகோடி மலைகளு மடியினிற் றகர்ந்திரு
விசும்பிற் பறக்க விரிநீர்
வேலைசுவ றச்சுரர் நடுக்கங் கொளச்சிறகை
வீசிப் பறக்கு மயிலாம்

நககோடி கொண்டவுணர் நெஞ்சம் பிளந்துதர
கேசரி முராரி திருமால்
நாரணன் கேசவன் சீதரன் தேவகீ
நந்தனன் முகுந்தன் மருகன்

முககோடி நதிகரன் குருகோடி யநவரத
முகிலுலவு நீல கிரிவாழ்
முருகனுமை குமரனறு முகனடவு விகடதட
மூரிக் கலாப மயிலே. 4

சோதியிம வேதண்ட கன்னிகையர் தந்தவபி
நயதுல்ய சோம வதன
துங்கத்ரி சூலத்ரி கங்காளி சிவகாம
சுந்தரி பயந்த நிரைசே

ராதிநெடு மூதண்ட அண்டபகி ரண்டங்க
ளியாவுங் கொடுஞ்சிறகினா
லணையுந்த னதுபேடை யண்டங்க ளென்னவே
யணைக்குங் கலாப மயிலாம்

நீதிமறை யோதண்ட முப்பத்து முக்கோடி
நித்தரும் பரவு கிரியாம்
நீலகிரி வேலவ னிராலம்ப நிர்ப்பய
னிர்வியா குலன் சங்குவாள்

மாதிகிரி கோதண்ட தண்டந் தரித்தபுயன்
மாதவன் முராரி திருமால்
மதுகைட வாரிதிரு மருகன்முரு கன்குமரன்
வரமுதவு வாகை மயிலே. 5

சங்கார காலமென அரிபிரமர் வெருவுறச்
சகல லோகமு நடுங்கச்
சந்த்ரசூ ரியரொளித் திந்த்ராதி யமரருஞ்
சஞ்சலப் படவுமையுடன்

கங்காளர் தனிநாட கஞ்செய்த போதந்த
காரம் பிறந்திடநெடுங்
ககனகூ டமுமேலை முகடுமூ டியபசுங்
கற்றைக் கலாப மயிலாஞ்

சிங்கார குங்கும படீரம்ருக மதயுகள
சித்ரப் பயோதரகிரித்
தெய்வவா ரணவநிதை புனிதன் குமாரன்
திருத்தணி மகீதரனிருங்

கெங்கா தரன்கீத மாகிய சுராலய
க்ருபாகரன் கார்த்தி கேயன்
கீர்த்திமா வசுரர்கள் மடியக்ர வுஞ்சகிரி
கிழிபட நடாவு மயிலே. 6

தீரப் பயோததி திக்குமா காயமும்
செகதலமு நின்று சுழலத்
திகழ்கின்ற முடிமவுலி சிதறிவிழ வெஞ்சிகைத்
தீக்கொப் புளிக்க வெருளும்

பாரப் பணாமுடி யநந்தன்முத லரவெலாம்
பதைபதைத் தேநடுங்கப்
படர்சக்ர வாளகிரி துகள்படவை யாளிவரு
பச்சைப்ர வாள மயிலாம்

ஆரப்ர தாபபுள கிதமதன பாடீர
அமிர்தகலசக் கொங்கையாள்
ஆடுமயில் நிகர்வல்லி அபிராம வல்லிபர
மாநந்த வல்லி சிறுவன்

கோரத்ரி சூலத்ரி யம்பக ஜடாதார
குருதரு திருத்தணிகைவேள்
கொடியநிசி சரருதர மெரிபுகுத விபுதர்பதி
குடிபுகுத நடவு மயிலே. 7

செக்கரள கேசசிக ரத்நபுரி ராசிநிரை
சிந்தப் புராரி யமிர்தந்
திரும்பப் பிறந்ததென ஆயிரம் பகுவாய்கள்
தீவிஷங் கொப்புளிப்பச்

சக்ரகிரி சூழவரு மண்டலங் கள்சகல
சங்கார கோர நயனத்
தறுகண்வா சுகிபணா முடியெடுத் துதறுமொரு
சண்டப்ர சண்டமயிலாம்

விக்ரம கிராதகுலி புனமீ துலாவிய
விருத்தன் திருத்தணிகைவாழ்
வேலாயு தன்பழ வினைத்துய ரறுத்தெனை
வெளிப்பட வுணர்த்தி யருளித்

துக்கசுக பேதமற வாழ்வித்த கந்தச்
சுவாமிவா கனமானதோர்
துரககஜ ரதகடக விகடதட நிருதர்குல
துஷ்டர் நிஷ்டூர மயிலே. 8

சிகரதம னியமேரு கிரிரசத கிரிநீல
கிரியெனவு மாயிரமுகத்
தெய்வநதி காளிந்தி யெனநீழ லிட்டுவெண்
திங்கள்சங் கெனவும்ப்ரபா

நிகரெனவு மெழுதரிய நேமியென வுலகடைய
நின்றமா முகிலென்னவே
நெடியமுது ககனமுக டுறவீசி நிமிருமொரு
நீலக்கலாப மயிலாம்

அகருமரு மணம்வீசு தணிகையபி ராமவே
ளடியவர்கள் மிடியகலவே
யடல்வேல் கரத்தசைய ஆறிரு புயங்களி
லலங்கற் குழாமசையவே

மகரகன கோமளக் குண்டலம் பலவசைய
வல்லவுணர் மனமசையமால்
வரையசைய உரகபில மசையவெண் டிசையசைய
வையாளி யேறு மயிலே. 9

நிராசத விராசத வரோதய பராபர
னிராகுல னிராமய பிரா
னிலாதெழு தலாலற மிலானெறி யிலானெறி
நிலாவிய வுலாசவி தயன்

குராமலி விராவுமிழ் பராரை யமராநிழல்
குராநிழல் பராவு தணிகைக்
குலாசல சராசர மெலாமினி துலாவிய
குலாவிய கலாப மயிலாம்

புராரிகும ராகுரு பராவெனும் வரோதய
புராதன முராரி மருகன்
புலோமசை சலாமிடு பலாசன வலாரிபுக
லாகுமயி லாயுதனெடுந்

தராதல கிராதர்கள் குலாதவபி ராமவல
சாதனன் விநோத சமரன்
தடாரி விகடாசுரன் குடாரித படாதிகழ்
சடாநந னடாவு மயிலே. 10

எந்நாளு மொருசுனையி லிந்த்ரநீ லப்போ
திலங்கிய திருத்தணிகைவாழ்
எம்பிரா னிமையவர்கள் தம்பிரா னேறுமொரு
நம்பிரா னான மயிலைப்

பன்னாளு மடிபரவு மருணகிரி நாதன்
பகர்ந்தவதி மதுர சித்ரப்
பாடல்தரு மாசறு விருத்தமொரு பத்தும்
படிப்பவர்க ளாதி மறைநூல்

மன்னான் முகம்பெறுவ ரன்னமே றப்பெறவர்
வாணிதழு வப்பெறுவரால்
மகரால யம்பெறுவ ருவணமே றப்பெறுவர்
வாரிச மங்கையுடன் வாழ்

அந்நாய கம்பெறுவ ரயிராவ தம்பெறுவ
ரமுதா சனம்பெறுவர்மே
லாயிரம் பிறைதொழுவர் சீர்பெறுவர் பேர்பெறுவர்
அழியா வரம்பெறுவரே. 11

மயில் விருத்தம் முற்றிற்று

உ

# சேவல் விருத்தம்

## அருணகிரிநாதர்

### காப்பு

கொந்தார் குழல்வரி வண்டோ லிடுமியல்
கொண்டேழ் இசை மருளக்,
குதலை மொழிந்தருள் கவுரி சுதந்தரி
குமரன் இதம்பெறு பொற்

செந்தா மரைகடம் நந்தா வனமுள
செந்தூர் எங்கு முளான்
திலக மயிலில்வரு குமரன் வரிசைபெறு
சேவல் தனைப் பாட

வந்தே சமர்பொரு மிண்டா கியகய
மாமுக னைக்கோறி
வன்கோ டொன்றை ஒடித்துப் பாரதம்
மாமே ருவிலெழுதிப்

பைந்தார் கொடுபல ராவணன் அன்பொடு
பணிசிவ லிங்கமதைப்
பார்மிசை வைத்த விநாயகன் முக்கட்
பரமன் துணையாமே.

### நூல்

உலகிலநு தினமும்வரும் அடியவர்கள் இடரகல
உரியபர கதிதெரியவே
உரகமணி எனவுழலும் இருவினையும் முறைபடவும்
இருள்கள்மிடி கெட அருளியே

கலகமிடும் அலகைகுறள் மிகுபணிகள் வலிமையொடு
கடினமுற வரில் அவைகளைக்
கண்ணைப் பிடுங்கியுடல் தன்னைப் பிளந்துசிற
கைக்கொட்டி நின்றாடுமாம்

மலைகள்நெறு நெறுநெறென அலைகள்சுவ றிடஅசுரர்
மடியஅயில் கடவு முருகன்
மகுடவட கிரியலைய மலையுமுலை வநிதைகுற
வரிசையின மகளவளுடன்

சிலைகுலிசன் மகள்மருவு புயன்இலகு சரவணச்
சிறுவன் அயன்வெருவ விரகிற்
சிரமிசையில் வெகுசினமொ டடியுதவும் அறுமுகவன்
சேவற் றிருத்துவசமே. 1

எரியனைய வியனவிரம் உளகழுது பலபிரம
ராட்ச தர்கள் மிண்டுகள் செயும்
ஏவற் பசாசுநனி பேயிற் பசாசு கொலை
ஈனப் பசாசுகளையும்

கரிமுருடு பெரியமலை பனையெனவும் முனையின்உயர்
ககனமுற நிமிரும் வெங்கட்
கடிகளையும் மடமடென மறுகியல றிடஉகிர்க்
கரத்தடர்த் துக்கொத்துமாம்

தரணிபல இடமென்வன மதகரிகள் தறிகள்பணி
சமணர்கிடு கிடென நடனம்
தண்டைகள் சிலம்புகள் கலின்கலினெ னச்சிறிய
சரணஅழ கொடுபுரியும் வேள்

திரிபுரம தெரியநகை புரியும்இறை யன்மறைகள்
தெரியும்அரன் உதவுகுமரன்
திமிரதின கரமுருக சரவண பவன்குகன்
சேவற் றிருத்து வசமே. 2

கரிமுரட் டடிவலைக் கயிறெடுத் தெயிறுபற்
களையிறுக் கியு முறைத்துக்
கலகமிட் டியமன்முற் கரமுறத் துடருமக்
காலத்தில் வேலு மயிலும்

குருபரக் குகனுமப் பொழுதில்நட் புடன்வரக்
குரலொலித் தடியரிடரைக்
குலைத்தலறு மூக்கிற் சினப்பேய்க ளைக்கொத்தி
வட்டத்தில் முட்ட வருமாம்

அரியகொற் கையனுடற் கருகும்வெப் பகையையுற்
பனமுறைத் ததமிகவுமே
வமணரைக் கழுவில்வைத் தவருமெய்ப் பொடிதரித்
தவனிமெய்த் திட அருளதார்

சிரபுரத் தவதரித் தவமுதத் தினமணிச்
சிவகைபெற் றினிய தமிழைச்
சிவனயப் புறவிரித் துரைசெய்விற் பனனிகற்
சேவற் றிருத் துவசமே. 3

அச்சப்ப டக்குரல் முழக்கிப் பகட்டியல
றிக்கொட்ட மிட்டமரிடும்
அறிபக் குறப்பலிகள் வெட்டுக்கள் பட்டுகடி
அறுகுழை களைக் கொத்தியே

பிச்சுச் சினத்துதறி எட்டுத்திசைப் பலிகள்
இட்டுக் கொதித்து விறலே
பெற்றுச் சுடர்ச்சிறகு தட்டிக் குதித்தியல்
பெறக்கொக் கரித்து வருமாம்

பொய்ச்சித் திரப்பலவும் உட்கத் திரைச்சலதி
பொற்றைக் கறுத் தயில்விடும்
புத்திப்ரி யத்தன்வெகு வித்தைக் குணக்கடல்
புகழ்ச்செட்டி சுப்ரமணியன்

செச்சைப் புயத்தன்நவ ரத்னக்ரி டத்தன்மொழி
தித்திக்கு முத்தமிழினைத்
தெரியவரு பொதிகைமலை முநிவர்க் குரைத்தவன்
சேவற் றிருத் துவசமே. 4

தானா யிடும்புசெயு மோகினி இடாகினி
தரித்தவே தாளபூதம்
சருவதூ னியமுமங் கிரியினா லுதறித்
தடிந்துசந் தோடமுறவே

கோனாகி மகவானும் வானாள வானாடர்
குலவுசிறை மீள அட்ட
குலகிரிகள் அசுரர்கிளை பொடியாக வெஞ்சிறைகள்
கொட்டியெட் டிக்கூவுமாம்

மானாகம் அக்கறுகு மானுடையன் நிர்த்தமிடு
மாதேவ னற்குருபரன்
வானீரம் அவனியழல் காலாய் நவக்கிரகம்
வாழ்நாள் அனைத்தும் அவனாம்

சேனா பதித்தலைவன் வேதா வினைச்சிறைசெய்
தேவாதி கட்கரசுகட்
டேனான மைக்கடலின்மீனான வற்கினியன்
சேவற் றிருத் துவசமே. 5

பங்கமா கியவிட புயங்கமா படமது
பறித்துச் சிவத்தருந்திப்
பிகிண்ட முழுதும் பறந்துநிர்த் தங்கள்புரி
பச்சைக் கலாப மயிலைத்

துங்கமா யன்புற்று, வன்புற் றடர்ந்துவரு
துடரும் பிரேத பூதத்
தொகுதிகள் பசாசுகள் நிசாசரர் அடங்கலும்
துண்டப் படக் கொத்துமாம்

மங்கையா மளைகுமரி கங்கைமா லினிகவுரி
வஞ்சிநான் முகிவராகி
மலையரையன் உதவமலை திருமுலையில் ஒழுகுபால்
மகிழ அமுதுண்ட பாலன்

/செங்கணன் மதலையிடம் இங்குளான் என்னுநர
சிங்கமாய் இரணியனுடல்
சிந்தஉகி ரிற்கொடு பிளந்தமால் மருமகன்
சேவற் றிருத் துவசமே. 6

வீறான காரிகதி முன்னோடி பின்னோடி
வெங்கட் குறும்புகள் தரும்
விடுபேய்க ளேகழுவன் கொலைசாவு கொள்ளிவாய்
வெம்பேய் களைத் துரத்திப்

பேறான 'சரவண பவா' என்னு மந்திரம்
பேசியுச் சாடனத்தாற்
பிடர்பிடித் துக்கொத்தி நகநுதியி னாலுறப்
பிய்ச்சுக் களித்தாடுமாம்

மாறாத முயலகன் வயிற்றுவலி குன்மம்
மகோதரம் பெருவியாதி
வாதபித் தஞ்சிலேற் பனங்குட்ட முதலான
வல்லபிணி களைமாற்றியே

சீறாத ஓராறு திருமுக மலர்ந்தடியர்
சித்தத் திருக்கு முருகன்
சிலைகள்உரு விடஅயிலை விடுகுமர குருபரன்
சேவற் றிருத் துவசமே. 7

வந்தார்ப் பரிக்குமம் மிண்டுவகை தண்டதரன்
வலியதூ துவர்பில்லி பேய்
வஞ்சினாற்பேதுற மகாபூதம் அஞ்சிட
வாயினும் காலினாலும்

பந்தாடி யேமிதித் துக்கொட்டி வடவைசெம்
பவளமா கதிகாசமாப்
பசுஞ் சிறைத் தலமிசைத் தனியயிற் குமரனைப்
பார்த்தன் புறக்கூவுமாம்

முந்தா கமப்பலகை சங்காக மத்தர்தொழ
முன்பேறுமுத்தி முருகன்
முதுகா னகத்தெயினர் பண்டோ டயிற்கணை
முனிந்தே தொடுத்த் சிறுவன்

சிந்தா குலத்தையடர் கந்தா எனப்பரவு
சித்தர்க் கிரங்கறு முகன்
செயவெற்றி வேள்புநிதன் நளினத்தன் முடிகுற்றி
சேவற் றிருத் துவசமே. 8

உருவாய் எவர்க்குநினை வரிதாய் அனைத்துலகும்
உளதாய் உயிர்க் குயிரதாய்
உணர்வாய் விரிப்பரிய உரைதேர் பரப்பிரம
ஒளியாய் அருட் பொருளதாய்

வருமீச னைக்களப முகனா தரித்திசையை
வலமாய் மதிக்க வருமுன்
வளர்முருகனைக் கொண்டு தரணிவலம் வந்தான்முன்
வைகுமயி லைப்பு கழுமாம்

குருமா மணித்திரள் கொழிக்கும் புனற்கடக்
குன்றுதோ றாடல்பழனம்
குலவுபழ முதிர்சோலை ஆவினன் குடிபரங்
குன்றிடம் திருவேரகம்

திரையாழி முத்தைத் தரங்கக்கை சிந்தித்
தெறித்திடுஞ் செந்தி னகர்வாழ்
திடமுடைய அடியர்தொழு பழையவன் குலவுற்ற
சேவற் றிருத் துவசமே. 9

மகரசல நிதிசுவற உரகபதி முடிபதற
மலைகள்கிடு கிடுகிடெனவே
மகுடகுட வடசிகரி முகடுபட படபடென
மதகரிகள் உயிர்சிதறவே

ககனமுதல் அண்டங்கள் கண்டதுண் டப்படக்
கர்ச்சித் திரைத்தலறியே
காரையா ழிந்நகரர் மாரைப் பிளந்துசிற
கைக்கொட்டி நின்றாடுமாம்

சுகவிமலை அமலைபரை இமயவரை தருகுமரி
துடியிடைய னகையசலையாள்
சுதன் முருகன் மதுரமொழி உழைவநிதை
இபவநிதை துணைவனென திதயநிலையோன்

திருடதிகு டதிதிகுட தகுடதித குடதிகுட
செக்கண செக்கண எனத்
திருநடனம் இடுமயிலில் வருகுமர குருபரன்
சேவற் றிருத் துவசமே. 10

பூவிலயன் வாசவன் முராரிமுநி வோரமரர்
பூசனைசெய் வோர்மகிழவே
பூதரமும் எழுகடலும் ஆட அமுதூறஅநு
போகபதி னாலுலகமும்

தாவுபுகழ் மீறிட நிசாசரர்கள் மாளவரு
தானதவ நூல் தழையவே
தாள்வலிய தானபல பேய்கள் அஞ்சச் சிறகு
கொட்டிக் குரற்பயிலுமாம்

காவுகனி வாழைபுளி மாவொடுயர் தாழைகமு
காடவிகள் பரவுநடனக்
காரணமெய்ஞ் ஞானபரி சீரணவ ராசனக்
கனகமயில் வாகனனடற்

சேவகன் இராசத இலக்கண உமைக்கொரு
சிகாமணி சரோருகமுகச்
சீதள குமாரகிரு பாகர மனோகரன்
சேவற் றிருத் துவசமே. 11

சேவல் விருத்தம் முற்றிற்று

உ

# தொட்டிக்கலை திருத்தணிகைத் திருவிருத்தம்

## சுப்பிரமணிய முனிவர்

ஓங்கார வுருவசின் மயவிமல வொளியாகி
யுலகமுழு வதுநிறைந்த
உண்மைப் பராபர நிராமய நிராலம்ப
உம்பர்கள் சிகாரத்னமே
ஆங்கார நீங்காத தீங்காண வத்தின்வரும்
அலகிலாப் பிறவிதோறும்
அடியேன்செய் கொடுவினை யளக்கருவ ரம்பினை
யளந்திடினு மளவுபடுமோ
வாங்காம லவ்வினை வருத்தலா லுன்றிருமுன்
வந்தபய மபயமென்றேன்
மயிலேறி வந்துதிரு மந்திர சடாக்கர
மருந்தரு டிருந்துமடியார்
தாங்காண முன்னின்ற சண்முகத் தெய்வமே
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே.

பன்னரிய வுன்னற்பு தத்திருப் புகழைப்
பகர்ந்துகொண் டுன்றிருமலைப்
படியேறு மன்பர்வினை பொடியாகு மென்றுநிறை
மொழிமாந்தர் பகருவதுகேட்
டென்னுடைய பொல்லாத சஞ்சிதப் பிணியொழித்
தெனையும்வாழ் வித்தருளுகென்
றிரவுபக லுன்னருட் சந்நிதியில் வந்துமுறை
யிடுவேற்கி ரங்கியருள்வாய்
பொன்னிறக் காந்தளொடு செங்குவளை மலர்களும்
பொற்பமர் கடப்பமலரும்

பூத்தலர் குறிஞ்சியுஞ் சேத்தகூ தளமும்
புனைந்ததிரு மார்பழகனே
தன்னமு மனத்துய ரிலாதமர ரைக்காத்த
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. 2

திருவருள் கொழிக்குமுன் சரவணப் பொய்கைத்
திருத்தந் திளைத்தாடியே
தீராத பழவினை யழுக்கைக் கழீஇவரும்
திருவாள ரைத்தரிசியா
உரிமையுட னடியேனு மச்சர வணப்பொய்கை
யுற்றுவந் தாடியுட்கொண்
டுன்னடிக ளேசரண மென்றோல மிடுமெனக்
குறுகுறை தவிர்த்தருளுவாய்
மருவளரு மலரோன் றருக்கினைக் கண்டுகர
மலர்கொண்டு தாக்கியவனை
வன்சிறை யிருத்தியுல கேழும் படைத்தநின்
வல்லாண்மை சொல்லவசமோ
தருவளரு மமரா வதிக்கரசை வாழ்வித்த
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. 3

கண்டவர் களிக்குமுரு கேசவுன் பெருமையைக்
கடவுட்சுனைக் குள்வளர்செங்
கல்லார முப்போது மலர்தந்து கமழ்தரும்
கந்தமே தூதாயுலாய்
எண்டிசையு ளார்க்குந் தெரித்தலாற் கொண்டாடி
யெல்லாரும் வந்துதொழுதுன்
இன்னருளை மொண்டுண்ண விந்நோயின்
யானொருவன்
இடருற் றிளைப்பதழகோ
அண்டர்க ணடுக்கமுற வாயிரத் தெட்டண்டம்
ஆண்டிடு குரூரசூரன்
ஆண்மைதனை நீறாக்கி யவனையிரு கூறாக்கி
யாட்கொண்ட சயசிங்கமே

தண்டையொடு கிண்கிணிகள் கொஞ்சுசெஞ் சரணனே
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. 4

அத்தான வச்சிங்கன் வெருவச் சிரங்களை
யரிந்தவச் சிரமிருக்க
அக்கிரம மிக்ககிர வுஞ்சமலை பொடியாக்கும்
அயில்வேல் வலத்திருக்கச்
சித்தான வுன்னுடைய வாறக் கரங்களாம்
தெய்வமந் திரமிருக்கத்
தீண்டினும் பூசினும் பாபப் பசாசறத்
தீர்க்கும்வெண் ணீறிருக்க
இத்தார ணிக்குளோன் றறியாக் குழந்தைபோ
லென்னளவு நீயிருந்தால்
என்னாகு லத்தைத் துரத்தியெனை யுய்விக்க
வின்னமொரு தெய்வமுண்டோ
சத்தாகி முத்திக்கு வித்தாகி நின்றசிவ
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. 5

வெங்கன லுறைப்பவரு பானுகோ பப்பதகன்
விட்டமா யைப்பகழிதான்
மிக்கமயல் பூட்டிக் கருங்கடற் கொண்டுபோய்
வீழ்த்திட வழுந்திநின்ற
துங்கவொளி மணிமகுட பாரநவ வீரரொடு
சோர்வரிய பூதர்களையுஞ்
சுடர்விடுங் குடுமியுடை யடலுடம் பிடிகொண்டு
தூக்கிய பராக்கிரமனே
பங்கமுறு கொடுவினைக் கடலிலே நெடுநாட்
படிந்துதடு மாறுமெனையும்
பயப்படே லென்றுநின் பன்னிரு விழிக்கருணை
பாலித் தெடுத்தருளுவாய்
சங்கடம் விலக்குமொரு தந்திமுக வற்கிளைய
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. 6

எண்ணிலுயிர் கட்கெலா மன்றுதொட் டகலாமல்
என்றுமொரு தஞ்சமாயே
இருத்தலாற் கந்தனென வொருநாம முற்றனை
இருண்டமல மோகத்தினாற்
கண்ணிலா ருக்குமெய்க் கோல்கொடுத் தீர்ப்பதுன்
கருணைப் பெருக்கமன்றோ
காங்கேய வுனையன்றி மற்றொருதெய் வத்தைநான்
கனவிலு நினைத்தல்செய்யேன்
மண்ணிலடி யாரிரு வினைக்காடு வேரோடு
மடியவடி வேல்பிடித்து
மாறாத பேரின்ப வாழ்வைக் கொடுத்தருள
வாய்மையாங் கொடிகட்டியே
தண்ணருளின் வரமாரி பொழிகின்ற தெய்வமே
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. 7

அத்தகு சிறப்புடைய க்ருத்திகைத் தையலார்
அறுவர்முலை யமுதவாரி
அருமறை பழுத்தொழுகும் வாயார மொண்டுகொண்
டானந்த மழைபொழிதரும்
வித்தகக் கருணைமா முகிலென்று நம்பியென்
விடாய்தீர வந்தடுத்தேன்
வேறுபுக லில்லையு னடைக்கல மடைக்கலம்
வெட்சிசூ டியவிசாகா
சித்திரக் கலபமர கதநிற மயூரனே
தேவகுஞ் சரிமணாளா
சிங்கார வள்ளியிரு சிற்றடிகள் வருடிச்
சிவந்தபன் னிருகரதலா
சத்துருக் கசமுகத் தசுரசங் காரனே
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. 8

வாலைதிரி புரையான சிவகாம சுந்தரிதன்
மைந்தனே நின்றுவசமா
மதுகையுறு காலாயு தத்தினுக் கேனுநீ
வாகனங் கொடுநடாத்தும்

வேலைநடு வடவையழல் விழிபொழிய வருமொரு
 வியன்றகர் தனக்காயினும்
விடைகொடுத் தென்னுடைய பேரா வினைக்குன்றை
 வேரோ டிடித்தருளுவாய்
கோலமலி தென்பரங் குன்றா வினன்குடி
 குளிர்ந்தசெந் தூரேரகம்
கொடியாடு சோலைமலை குன்றுதோ றாடலும்
 கொண்டருளி நின்றகுகனே
தாலமுழு துண்டடைபைங் கொண்டன்மே னியன்மருக
 சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
 சகலபண் டிதராசனே. 9

நலமருவு மதுரைத் தமிழ்ச்சங்க மேற்புலவர்
 நடுவீற் றிருந்தமுதல்வா
நக்கீரர் சொன்னமுரு காற்றுப் படைத்தமிழும்
 நல்லருண கிரிநாதர்சொற்
புலமையுறு சித்திரச் சந்தப்ரவாகமும்
 புனிதச் செவிக்குளார்த்த
புகழாள குறுமுனிக் காரணத் துட்பொருள்
 புலப்படுத் தியகுரவனே
கொலைகளவு முதலான பாதக மெனக்குவெகு
 கோடிக ளிருந்திடினுமுன்
கூர்மந் திரப்படையி னால்வீட்டி யெனதுளம்
 குடிகொண் டிருந்தருளுவாய்
சலனமறு சருவபரி பூரண தயாநிதே
 சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
 சகலபண் டிதராசனே. 10

**திருத்தணிகைத் திருவிருத்தம் முற்றிற்று**

உ

# திருமயிலை
# சிங்காரவேலன் விருத்தம்

## புலவர் வெ. சா. ஏகாம்பரம்

### காப்பு வெண்பா

நலந்தருங் கல்வி பொருள்தரும் நாளும்
நிலத்திற் புகழை நிறுத்தும்-மலர்கொண்டு
வந்து மயிலை விநாயகரைப் பூசித்து
வந்தால் பெறலாம் வரம். 1

### விருத்தம்

நிலவளஞ் செறிந்திடக் கன்னலொடு செந்நெல்
நெற்குவை இல்லம் நிரப்பும்
நிலமகள் விழைந்திடுந் தொண்டைநன் நாட்டிற்
சீர்மிகு வேளாண் குடியில்
நலந்தருஞ் சிவப்பயிர் தழைக்க புன்சமயங்கள்
நலியவேர் களையெ டுத்த
நால்வரோ டடியவர் சரிதையைக் கூறியிந்
நானிலம் உய்ய வைத்தார்
பலர்புகழ் ஞாயிறு போன்றநம் சேக்கிழார்
நெறியினில் வழாஅது நிற்கும்
பண்புடை யாளர்கள் வாழ்கின்ற மாடமா
மயிலையில் வந்த மர்ந்தாய்
வலக்கரம் மான்மகள் இடக்கரம் வான்மகள்
மகிழ்கின்ற கந்த வேளே
வந்துனைப் பணிபவர் மனக்குறை நீக்கிடும்
வள்ளல் சிங்கார வேளே. 2

நற்றமிழ் கற்றிட குறுமுனி தென்றிசை
நாடியுன் னருள டைந்தார்

நான்மறைப் பொருளாம் சிவனு மோங்கார
நாதத்தைக் கேட்டு ணர்ந்தார்
கற்றவர் வணங்கிடும் ஔவைப் பிராட்டிக்குக்
கனியீந்து பாடல் கொண்டாய்
கனியாத பொய்யா மொழியினை வேடனாய்க்
கனிவித்துப் பாடல் கொண்டாய்
ஒற்றியூர் தியாகனும் வடிவுடை யம்மையும்
உனதரு கிருக்க வெண்ணி
உயர்ந்தோங்கு சோலைசூழ் மாடமா மயிலையை
உறைவிட மாக்கி நின்றாய்
நற்றவர் போற்றிடும் வள்ளிதெய்வ யானையின்
நாதனே கந்த வேளே
நனிவிருப் புடனடி பணிபவர் தமக்கினி
நமபயம் நீக்கு வேளே. 3

அருங்கனி பெற்றிட மஞ்ஞைமே லவனியை
அரைநொடியில் சுற்றி வந்தாய்
ஐங்கர னக்கனி பெற்றிட வெகுண்டுநீ
ஆவினன் குடிய டைந்தாய்
செருக்கள மமைத்துநற் செந்திலம் பதியில்சூர்
சேனையை அழித்தொ ழித்தாய்
தேவர்கள் விண்ணின்று பூமாரி பெய்தனர்
தேவர்கோ னுளம கிழ்ந்து
திருமணஞ் செய்விக்க தெய்வ யானையொடு
திருப்பரங் குன்றில் நின்றாய்
திருமகட் செல்வியாம் வள்ளியை மணந்துபின்
திருத்தணிகை வந்த மர்ந்தாய்
அருணகிரி வாயாற் புகழ்ந்திடும் பெருமைசேர்
ஆறுபடை வீடு கொண்டாய்
அடியவர் தொழுதிட மாடமா மயிலையும்
அமர்ந்தசிங் கார வேளே. 4

தண்மதி நிகர்க்குநின் வதனங்க ளாறும்
சராசரங் களுந்த ழைக்க
சகலபுவ னங்களில் வாழ்கின்ற உயிர்களைத்
தன்குடைக் கீழ்நி றுத்தும்
தண்ணளி சுரக்குநின் ஈராறு கண்களுந் .
தன்னடி யார்க ளிக்க

தறுகணொன் றுற்றிடா வண்ணமே ஈன்றநற்
றாய்போல் விரைந்து காக்கும்
திண்புய மீராறும் செறுநரைத் தேய்த்துபல்
செல்வங் களைய ளிக்கும்
திருப்புகழ் பாடிடு மடியர்க்குத் தஞ்சமாந்
திருவடி காட்டி நிற்கும்
பண்ணளி பாடுநற் சோலைசூழ் மாடமா
மயிலையில் வந்த மர்ந்தாய்
வள்ளி தெய்வயானை மகிழ்மண வாளனே
வள்ளல்சிங் கார வேளே. 5

முன்னம் ஒருநாள்முரு கம்மையார் பிச்சியாய்
முருகனை விளித்த காலை
முனிந்தவள் கணவனார் கைகளைத் துண்டிக்க
முடமான கைகள் தூக்கி
சென்னிமேல் கூப்பிட முன்போற் றிகழ்ந்தது
செந்திலோன் செய்கை யன்றோ!
தினமுனைப் பாடிடும் குருதாசர் முரிந்தகால்
செம்மை செய்ததும் வேலனே
உன்னையே தொழுதிடும் அடியவர்க் கஞ்சலென்
றோடிவந் துதவி செய்வாய்
ஒறுத்திடும் நமன்வருங் காலையில் தண்டித்(து)
உன்னடி அணைத்துக் கொள்வாய்
செந்நெல் வயல்சூழ் தொண்டை நாட்டினைச்
சேர்ந்த மயிலா புரியில்
திருவடி பணிந்திடும் அடியவர்க் கருட்செயுஞ்
சிங்கா ரவடி வேலனே. 6

மறவாத கல்வியும் மனைமக்கள் மாட்சியும்
மற்றுஞ்சுக போக முண்டு
வற்றாத செல்வமும் ஈகையும் வாய்மையும்
மாறா திருப்ப துண்டு
பிறவாத தன்மையும் பிணிமூப்பு சாக்காடு
பெற்றிடா நிலையு முண்டு
பிரியா(து) அடியவர் கூட்டம் நிலைத்திடும்
பேறது வாய்ப்ப துண்டு
குறமகள் நாதனை மாடமா மயிலையுள்
கோயில்குடி கொண்ட வேளை

கொண்டாடி வலம்வந்து கூத்தாடிப் பாடிகை
கூப்பினாற் பெறற்க ரியதோர்
இறவாத புகழுந் திருவருட் பேறும்
இம்மையே வாய்ப்ப துண்டு
எழிலான கந்தனே பார்வதி மைந்தனே
ஈடில்சிங் கார வேளே. 7

கலைகள் பலவுங்கற்று காசினி புகழ்ந்திடக்
கருதினால் கலைய ரசியாம்
கலைமகள் வணங்கிடு, கனதனம் வேண்டில்செங்
கமலத்தில் வீற்றி ருக்கும்
அலைமகள் வணங்கிடு, அகத்தினில் அமைதியும்
அறிவொடு வீரம் வேண்டில்
அரனிடப் பாகத்தை யாட்கொண்ட வல்லியை
ஆதி பராசக் தியாம்
மலைமகட் பொன்னடி வணங்கிடு; இம்மைக்கும்
மறுமைக்கும் வாழ்வ ளிக்கும்
மயிலேறு முருகனை வணங்கிடில் இவையுடன்
பதமுக்தி யும்பெ றுகுவாய்
மலைமீது குடிகொண்ட முருகனே மாடமா
மயிலையில் அமர்ந்த வேளே
வள்ளிதெய்வ யானையைப் போற்றிடு மடியர்க்கு
வரந்தருசிங் கார வேளே. 8

சரவணன் தாள்தலை தாழ்த்திடில் தீவினை
சாராது சேய்மை செல்லும்
சஞ்சித மழிந்திடும் நின்றிடு மாகாம்யம்
சாம்பலாய்ப் போகு மன்றே
சரமொக்கும் நயனங்கொள் முருகனைத் தரிசிக்கில்
சாக்காடு மற்றுப் போகும்
சாலவு மவன்புகழ் செவிகளிற் கேட்டிடச்
சென்ம மழிந்து போகும்
கரங்களாற் கூப்பிநங் கந்தனை வணங்கிடிற்
கவலைக ளற்றுப் போகும்
கால்களால் வலம்வந்து முருகனைப் பணிந்திடிற்
கருதியது முடியு மன்றே
வரந்தரும் மாடமா மயிலை யமர்ந்தவனை
வாயினாற் பாடி வந்தால்

வள்ளி தெய்வ யானையொடு மயின்மீது
வந்தருள்சிங் கார வேளே. 9

கஞ்சனைச் சிறைவைத்து சிவபிரான் காதில்'ஓம்'
கருத்தினை யெடுத்து ரைத்தாய்
கற்கிமுகி பூதம்நக் கீரரைச் சிறைவைக்க
கல்லைப் பிளந்து காத்தாய்
வெஞ்சமர் விளைத்திடச் சூரனை மெய்ஞ்ஞான
வேலினா லேபி ளந்து
விண்ணோங்கு சேவற் பதாகையாய், மயிலாய்
வைத்தருள் செய்த வேலா
தஞ்சமென் றடைந்திடும் அடியரைக் காத்திடச்
சரணார விந்தந் தன்னைத்
தலையினிற் சூட்டியும் நயனங்கள் நோக்கியும்
தண்ணளி புரியும் வேளே
மஞ்சுதவழ் சோலைசூழ் மாடமா மயிலையில்
வந்துகுடி கொண்ட வேளே
வள்ளிதெய்வ யானையைப் போற்றிடு மடியர்க்கு
வாழ்வருள்சிங் கார வேளே. 10

ஒருமுறை 'சரவண பவ'வென் றுரைத்திடில்
உன்பவ மொழிந்து போகும்
உன்னையறி, யாதுதொடர் பாவமொ ழிந்திடும்
ஒருமுறை 'முருகா' வென்னில்
ஒருதரம் 'குமரா நம'வெனக் கூறிடில்
ஒருகோடி புண்ய முண்டு
உலகவர் போற்றிடும் பெரும்புகழ் தந்திடும்
ஒருமு றைகுகா வென்றிடின்
அருமறை முழங்கிடும் மயிலையுள் கற்பக
வம்மையின் அருகி ருந்துள்
ளன்புடன் பூசிக்கு மடியவர் துயர்கெட
ஆலயங் குடிபு குந்தாய்
வருத்திடும் பிணிநீக்கும் வயித்திய நாதனே
மயிலே றும்மா ணிக்கமே
மங்கைய ரிருவரொடு வந்துனது அடியர்க்கு
வரந்தருசிங் கார வேளே. 11

சிங்கார வேலன் விருத்தம் முற்றிற்று

உ

# திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா

## குமரகுருபர அடிகள்

பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறறிய
பாமேவு தெய்வப் பழமறையும்—தேமேவு 1

நாதமு நாதாந்த முடிவும் நவைதீர்ந்த
போதமுங் காணாத போதமாய்—ஆதிநடு 2

அந்தங் கடந்தநித்தி யானந்த போதமாய்ப்
பந்தந் தணந்த பரஞ்சுடராய்—வந்த 3

குறியுங் குணமுமொரு கோலமுமற் றெங்கும்
செறியும் பரம சிவமாய்—அறிவுக்கு 4

அனாதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் அன்றே
மனாதிகளுக் கெட்டா வடிவாய்த்—தனாதருளின் 5

பஞ்சவித ரூப பரசுகமாய் எவ்வுயிர்க்கும்
தஞ்சமென நிற்குந் தனிப்பொருளாய்—எஞ்சாத 6

பூரணமாய் நித்தமாய்ப் போக்குவர வும்புணர்வும்
காரணமு மில்லாக் கதியாகித்—தாரணியில் 7

இந்திரசா லம்புரிவோன் யாவரையுந் தான்மயக்கும்
தந்திரத்திற் சாராது சார்வதுபோல்—முந்தும் 8

கருவின்றி நின்ற கருவாய் அருளே
உருவின்றி நின்ற உருவாய்—திரிகரணம் 9

ஆகவரும் இச்சை அறிவியற்ற லாலிலய
போகஅதி காரப் பொருளாகி—ஏகத்(து) 10

உருவும் அருவும் உருவருவு மாகிப்
பருவ வடிவம் பலவாய்—இருள்மலத்துள் 11

மோகமுறும் பல்லுயிர்க்கு முத்தியளித் தற்குமல
பாகமுற வேகடைக்கண் பாலித்துத்—தேகமுறத் 12

தந்த அருவுருவஞ் சார்ந்தவிந்து மோகினிமான்
பெந்த முறவே பிணிப்பித்து—மந்த்ரமுதல் 13

ஆறத்து வாவுமண்டத் தார்ந்தவத்து வாக்களுமுற்
கூறத் தகுஞ்சிமிழ்ப்பிற் கூட்டுவித்து—மாறிவரும் 14

ஈரிரண்டு தோற்றத் தெழுபிறப்புள் யோனியெண்பான்
ஆரவந்த நான்குநூ றாயிரத்துள்—தீர்வரிய 15

கன்மத்துக் கீடாய்க் கறங்குஞ் சகடம்போற்
சென்மித் துழலத் திரோதித்து—வெந்நிரய 16

சொர்க்காதி போகமெல்லாந் துய்ப்பித்துப் பக்குவத்தால்
நற்கா ரணஞ்சிறிது நண்ணுதலும்—தர்க்கமிடும் 17

தொன்னூற் பரசமயந் தோறும் அதுவதுவே
நன்னூல் எனத்தெரிந்து நாட்டுவித்து—முன்னூல் 18

விரதமுத லாயபல மெய்த்தவத்தி னுண்மைச்
சரியைகிரி யாயோகஞ் சார்வித்(து)—அருள்பெருகு 19

சாலோக சாமீப சாரூப மும்புசிப்பித்து
ஆலோகந் தன்னை அகற்றுவித்து—நால்வகையாம் 20

சத்திநி பாதந் தருதற் கிருவினையும்
ஒத்துவருங் காலம் உளவாகிப்—பெத்த 21

மலபரி பாகம் வருமளவிற் பன்னாள்
அலமருதல் கண்ணுற் றருளி—உலவா 22

தறிவுக் கறிவாகி அவ்வறிவுக் கெட்டா
நெறியிற் செறிந்தநிலை நீங்கிப்—பிறியாக் 23

கருணைத் திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென் றோர்திருப்பேர் கொண்டு—
திருநோக்கால் 24

ஊழ்வினையைப் போக்கி உடலறுபத் தெட்டுநிலம்
ஏழுமத்து வாக்கள் இருமூன்றும்—பாழாக 25

ஆணவ மான படலங் கிழித்துஅறிவிற்
காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டிப்—பூணும் 26

அடிஞானத் தாற்பொருளும் ஆன்மாவுங் காட்டிக்
கடியார் புவனமுற்றுங் காட்டி—முடியாது 27

தேக்கு பரமானந்தத் தெள்ளமுத மாகியெங்கும்
நீக்கமற நின்ற நிலைகாட்டிப்—போக்கும் 28

வரவும் நினைப்பும் மறப்பும் பகலும்
இரவுங் கடந்துலவா இன்பம்—மருவுவித்து 29

கன்மமலத் தார்க்குமலர்க் கண்மூன்றுந் தாழ்சடையும்
வன்மழுவு மானுமுடன் மால்விடைமேல்
மின்னிடத்துப் 30

பூத்த பவளப் பொருப்பொன்று வெள்ளி வெற்பில்
வாய்த்தனைய தெய்வ வடிவாகி—மூத்த 31

கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள் செய்(து)உள்நின்(று)
ஒருமலத்தார்க் கின்பம் உதவிப்—பெருகியெழு 32

மூன்றவத்தை யுங்கழற்றி முத்தருட னேயிருத்தி
ஆன்றபர முத்தி அடைவித்துத்—தோன்றவரும் 33

யானெனதென் றற்ற இடமே திருவடியா
மோனபரா னந்த முடியாக—ஞானம் 34

திருவுருவா இச்சை செயலறிவு கண்ணா
அருளதுவே செங்கை அலரா—இருநிலமே 35

சந்நிதியா நிற்குந் தனிச்சுடரே எவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே—மின்னுருவம் 36

தோய்ந்தநவ ரத்நச் சுடர்மணியாற் செய்தபைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியும்—தேய்ந்தபிறைத் 37

துண்டமிரு மூன்றுநிரை தோன்றப் பதித்தனைய
புண்டரம் பூத்தநுதற் பொட்டழகும்—விண்ட 38

பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்(கு)
அருள்பொழியும் கண்மலர் ஈராறும்—பருதி 39

பலவும் எழுந்துசுடர் பாலித்தாற் போலக்
குலவு மகரக் குழையும்—நிலவுமிழும் 40

புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்
சென்மவிடாய் தீர்க்குந் திருமொழியும்—வின்மலிதோள் 41

வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூர னைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்துந் திருமுகமும்—எவ்வுயிர்க்கும் 42

ஊழ்வினையை மாற்றி உலவாத பேரின்ப
வாழ்வுதருஞ் செய்ய மலர்முகமும்—சூழ்வோர் 43

வடிக்கும் பழமறைக ளாகமங்கள் யாவும்
முடிக்குங் கமல முகமும்—விடுத்தகலாப் 44

பாச விருள்துரந்து பல்கதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமும்—நேசமுடன் 45

போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்
மோக மளிக்கு முகமதியும்—தாகமுடன் 46

வந்தடியிற் சேர்ந்தோர் மகிழ வரம்பலவும்
தந்தருளுந் தெய்வமுகத் தாமரையும்—கொந்தவிழ்ந்த 47

வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டும்—ஆரமுதம் 48

தேவர்க் குதவுந் திருக்கரமுஞ்—சூர்மகளிர்
மேவக் குழைந்தணைந்த மென்கரமும்—ஓவாது 49

மாரி பொழிந்த மலர்க்கரமும்பூந்தொடையல்
சேர அணிந்த திருக்கரமும்—மார்பகத்தில் 50

வைத்த கரதலமும் வாமமருங் கிற்கரமும்
உய்த்த குறங்கி லொருகரமும்—மொய்த்த 51

சிறுதொடிசேர் கையுமணி சேர்ந்த தடங்கையும்
கறுவுசமர் அங்குசஞ்சேர் கையும்—தெறுபோர் 52

அதிர்கே டகஞ்சுழற்றும் அங்கைத் தலமும்
கதிர்வாள் விதிர்க்குங் கரமும்—முதிராத 53

கும்பமுலைச் செவ்வாய்க் கொடியிடையார் வேட்டணைந்த
அம்பொன் மணிப்பூ ணகன்மார்பும்—பைம்பொற் 54

புரிநூலுங் கண்டிகையும் பூம்பட் டுடையும்
அரைஞாணும் கச்சை யழகும்—திருவரையும் 55

நாதக் கழலும் நகுமணிப்பொற் கிண்கிணியும்
பாதத் தணிந்த பரிபுரமும்—சோதி 56

இளம்பருதி நூறா யிரங்கோடி போல
வளந்தரு தெய்வீக வடிவும்—உளந்தனிற்கண்(டு) 57

ஆதரிப்போர்க் காருயிராய் அன்பரகத் தாமரையின்
மீதிருக்கும் தெய்வ விளக்கொளியே—ஓதியஐந்து 58

ஓங்காரத் துள்ளொளிக்கும் உள்ளொளியாய்—ஐந்தொழிற்கும்
நீங்காத பேருருவாய் நின்றோனே—தாங்கரிய 59

மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப்—பந்தனையால் 60

ஒத்த புவனத் துருவே உரோமமாத்
தத்துவங்க ளேசத்த தாதுவா—வைத்த 61

கலையே அவயவமாக் காட்டுமத்து வாவின்
நிலையே வடிவமா நின்றோய்—பலகோடி 62

அண்ட முருவாகி அங்கஞ் சராசரமாய்க்
கண்டசத்தி மூன்றுட் கரணமாய்த்—தொண்டுபடும் 63

ஆவிப் புலனுக் கறிவளிப்ப வைந்தொழிலும்
ஏவித் தனிநடத்தும் எங்கோவே—மேவ 64

வருமட்ட மூர்த்தமாம் வாழ்வேமெய்ஞ் ஞானம்
தருமட்ட யோகத் தவமே—பருவத்(து) 65

அகலாத பேரன் படைந்தோ ரகத்துட்
புகலாகும் இன்பப் பொருப்பும்—சுகலளிதப் 66

பேரின்ப வெள்ளப் பெருக்காறும் மீதானம்
தேரின்ப நல்குந் திருநாடும்—பாரின்பம் 67

எல்லாங் கடந்த இருநிலத்துட் போக்குவர
வல்லா துயர்ந்த அணிநகரும்—தொல்லுலகில் 68

ஈறு முதலுமகன் றெங்குநிறைந் தைந்தெழுத்தைக்
கூறி நடாத்துங் குரகதமும்—ஏறுமதம் 69

தோய்ந்து களித்தோர் துதிக்கையினாற் பஞ்சமலம்
காய்ந்தசிவ ஞானக் கடாக்களிறும்—வாய்ந்தசிவ 70

பூரணத்துட் பூரணமாம் போதம் புதுமலரா
நாரகத்துட் கட்டு நறுந்தொடையும்—காரணத்துள் 71

ஐந்தொழிலும் ஓவா தளித்துயர்ந்த வான்கொடியும்
வந்தநவ நாத மணிமுரசும்—சந்ததமும் 72

நீக்கமின்றி யாடி நிழலசைப்பான் போற்புவனம்
ஆக்கி அசைத்தருளும் ஆணையும்—தேக்கமழ்ந்து 73

வீசும் பனுவல் விபுதர் தனித்தனியே
பேசுந் தசாங்கமெனப் பெற்றோனே—தேசுதிகழ் 74

பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி—ஆங்கொருநாள் 75

வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்து முகத்தோ டதோமுகமும்—தந்து 76

திருமுருகங்க ளாறாகிச் செந்தழற்க ணாறும்
ஒருமுகமாய்த் தீப்பொறியா றுய்ப்ப—விரிபுவனம் 77

எங்கும் பரக்க இமையோர்கண் டஞ்சுதலும்
பொங்குந் தழற்பிழம்பைப் பொற்கரத்தால்—அங்கண் 78

எடுத்தமைத்து வாயுவைக்கொண் டேகுதியென் றெம்மான்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுபோய்—அடுத்ததொரு 79

பூதத் தலைவகொடு போதியெனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப்—போதொருசற் 80

றன்னவளுங் கொண்டமைதற் காற்றாள் சரவணத்திற்
சென்னியிற்கொண் டுய்ப்பத் திருவுருவாய்—முன்னர் 81

அறுமீன் முலையுண் டழுதுவிளை யாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன்—குறுமுறுவற் 82

கன்னியொடுஞ் சென்றவட்குக் காதலுருக் காட்டுதலும்
அன்னவள் கண் டவ்வுருவ மாறினையும்—தன்னிரண்டு 83

கையால் எடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறும் ஒன்றாக மேவுவித்துச்—செய்ய 84

முகத்தில் அணைத்துச்சி மோந்து முலைப்பால்
அகத்துண் மகிழ்பூத் தளித்துச்—சகத்தளந்த 85

வெள்ளை விடைமேல் விமலன் கரத்திலளித்
துள்ள முவப்ப வுயர்ந்தோனே—கிள்ளைமொழி 86

மங்கை சிலம்பின் மணியொன் பதிற்றோன்றும்
துங்க மடவார் துயர்தீர்ந்து—தங்கள் 87

விருப்பால் அளித்தநவ வீரருக்குள் முன்னோன்
மருப்பாயுந் தார்வீர வாகு—நெருப்பிலுதித்(து) 88

அங்கட் புவனம் அனைத்தும் அழித்துலவும்
செங்கட் கிடாயதனைச் சென்றுகொணர்ந்(து)—
எங்கோன் 89

விடுக்குதியென் றுய்ப்பவதன் மீதிவர்ந்தெண் திக்கும்
நடத்தி விளையாடு நாதா—படைப்போன் 90

அகந்தை யுரைப்பமறை யாதி யெழுத்தென்று
உகந்த பிரணவத்தின் உண்மை—புகன்றிலையால் 91

சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ஙன் என்றுமுனம்
குட்டிச் சிறையிருத்துங் கோமானே—மட்டவிழும் 92

பொன்னங் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரம மொழிந்தோனே—கொன்னெடுவேல் 93

தாரகனு மாயத் தடங்கிரியுந் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே—சீரலைவாய்த் 94

தெள்ளு திரைகொழிக்குஞ் செந்தூரிற்
போய்க்கருணை
வெள்ள மெனத்தவிசின் வீற்றிருந்து—வெள்ளைக் 95

கயேந்திரனுக் கஞ்ச லளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்திற் புக்கிமையோர் வாழச்—சயேந்திரனாம் 96

சூரனைச்சோ தித்துவரு கென்றுதடந் தோள்விசய
வீரனைத்தூ தாக விடுத்தோனே—காரவுணன் 97

வானவரை விட்டு வணங்காமை யாற்கொடிய
தானவர்கள் நாற்படையுஞ் சங்கரித்துப்—பானுப் 98

பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய்—சகமுடுத்த 99

வாரி தனிற்புதிய மாவாய்க் கிடந்தநெடுஞ்
சூருடலங் கீண்ட சுடர்வேலோய்—போரவுணன் 100

அங்கமிரு கூறா யடன்மயிலுஞ் சேவலுமாய்த்
துங்கமுட னார்த்தெழுந்து தோன்றுதலும்—
அங்கவற்றுள் 101

சீறுமர வைப்பொருத சித்ரமயில் வாகனமா
ஏறி நடாத்து மிளையோனே—மாறிவரு 102

சேவற் பகையைத் திறல்சேர் பதாகையென
மேவத் தனித்துயர்த்த மேலோனே—மூவர் 103

குறைமுடித்து விண்ணங் குடியேற்றித் தேவர்
சிறைவிடுத்தாட் கொண்டளித்த தேவே—
மறைமுடிவாம் 104

சைவக் கொழுந்தே தவக்கடலே வானுதவும்
தெய்வக் களிற்றைமணஞ் செய்தோனே—பொய்விரவு 105

காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப்—பூமருவு 106

கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போல்
ஏனற் புனங்காத் தினிதிருந்து—மேன்மைபெறத் 107

தெள்ளித் தினைமாவுந் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே—உள்ளமுவந்து 108

ஆறு திருப்பதிகண் டாறெழுத்தும்அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே—நாறுமலர்க் 109

கந்திப் பொதும்பரெழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திற் பதிபுரக்குஞ் செவ்வேளே—சந்ததமும் 110

பல்கோடி சன்மப் பகையும் அவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்—பல்கோடி 111

பாதகமுஞ் செய்வினையும் பாம்பும் பசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையும்—தீதகலா 112

வெவ்விடமும் துட்ட மிருகமுத லாமெவையும்
எவ்விடம்வந் தெம்மை எதிர்ந்தாலும்—அவ்விடத்தில் 113

பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்தோளும்
அச்சம் அகற்றும் அயில்வேலும்—கச்சைத் 114

திருவரையுஞ் சீறடியுஞ் செங்கையும் ஈரா(று)
அருள்விழியும் மாமுகங்கள் ஆறும்—விரிகிரணம் 115

சிந்தப் புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற—வந்து இடுக்கண் 116

எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமுந் தந்துபுகுந்(து)
உல்லாச மாக உளத்திருந்து—பல்விதமாம் 117

ஆசுமுதல் நாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையும்—ஓசை 118

எழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்(து)—ஒழுக்கமுடன் 119

இம்மைப் பிறப்பில் இருவா தனையகற்றி
மும்மைப் பெருமலங்கண் மோசித்துத்—
தம்மைவிடுத்(து) 120

ஆயும் பழைய அடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச்—சேய 121

கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு
அடியேற்கு முன்னின் றருள். 122

திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா முற்றிற்று

உ

# தணிகை வெண்பா

## கந்தப்ப அய்யர்

### காப்பு

காலைவணங் காவிரிஞ்சன் காலில் தளைபூட்டும்
வேலன் திருத்தணிகை வெண்பாவின்—மாலையைஎன்
நாவிரிக்க பேதம்தான் நண்ணாதுஎண் இந்திரன்பூங்
காவிரிக்குஅப் பேதந்தான் காப்பு. 1

### நூல்

கார்அணிமால் வேதனும்முன் காணரும்பே ரின்புஎனக்குஇத்
தாரணியில் ஈயும் தணிகையே — போர்அணிகொள்
அஞ்ஞான சத்திதர னாம்சூ ரனைச்செகுத்த
மெஞ்ஞான சத்திதரன் வீடு. 2

அன்னம் தனிவீடு அடியார்க் குஒருங்குஉதவித்
தன்னந் தனியாம் தணிகையே — பொன்னுலகக்
கைமாப் பிடிக்குஏற்றார், காட்டில்எம்பி ராட்டிஇடும்
கைமாப் பிடிக்குஏற்றார் காப்பு. 3

நீர்அழல்கால் வாள்அரவான் நீள்விலங்கு சோரர்களால்
சாரும்இடர் தீர்க்கும் தணிகையே — போரில்
கழுகுஅணியா கத்தன் கதிர்வேல் எறிந்தான்
புழுகுஅணிஆ கத்தன் பொருப்பு. 4

பேய்ஊமை பங்குவெதிர் பித்தம் குருடுகயம்
சாய்கூனும் நீக்கும் தணிகையே — மாயை
மறப்பாவை காதுஅலின்நான் வாடாமல் காத்தான்
குறப்பாவை காதலினான் குன்று. 5

கண்டவரை விண்டவரை கற்றவரை உற்றவரைத்
தண்டதரன் தீண்டாத் தணிகையே—கொண்டபணம்
காட்டிவரும் பன்னகத்தார் காதலித்தார் புத்திரனார்
ஆட்டுஇவரும் பல்நகத்தார் ஆர்வு. 6

முப்போதும் பைங்குவனை முப்போதும் பூஞ்சுனையில்
தப்பாது பூக்கும் தணிகையே — அப்போது
வேர்அறவே றுஒட்டார் மிகும்தலை,கை, கால்கள்அற,
கூர்அறவேல் தொட்டார் குடி. 7

செஞ்சொல் திருப்புகழைச் செப்பிப் பணிந்தோர்க்குச்
சஞ்சிதத்தைப் போக்கும் தணிகையே — விஞ்சும்
சயம்தன்உற, கங்கள்ஐந்தான் தன்னை வரக்கூவும்
சயந்தன்உறக் கம்களைந்தான் சார்வு. 8

தீவினையும் தீவினையில் சிக்கும் பிறப்பினையும்
சாவினையும் மாற்றும் தணிகையே — பூவுலகை
நீண்டுஅளப்பான் மாமன்எனும் நேயத்தான் மந்திரியாம்
ஆண்டளப்பான் மாமன் அகம். 9

மல்லரியும், சச்சரியும், வானவர்கள் துந்துமியும்,
சல்லரியும் ஆர்க்கும் தணிகையே — வல்அரிசேர்
இந்திரஞா லத்தேரான் ஈறுஇல் அரசுஅழித்த
தந்திரஞா லத்துஏரான் சார்பு. 10

பஞ்சைகள்ஆம் தேவர்களைப் பாடிஉழ லாமல்என்தன்
சஞ்சலத்தைப் பாற்றும் தணிகையே — வஞ்சிவள்ளி
காலைக் கடம்பணிவார் கையினார் திண்புயத்தின்
மாலைக் கடம்புஅணிவார் வைப்பு. 11

சேற்றுஇறால் பாய்பழனம் செந்நெல் வளர்கமுகின்
தாற்றுஇறால் பாயும் தணிகையே — ஆற்றின்எதிர்
அச்ச யிலம்பகத்தான் அள்இலைவே லான்எறிந்தான்
செச்சை இலம்பகத்தான் சேர்வு. 12

வானமிசை எந்நாளும் வந்துஎழும்ஆற் றுஏறியபொன்
தான்உரைகல் ஆகும் தணிகையே — ஞானக்
கலையமுனி வாய்நடந்தான் காட்டினான் நண்ணார்
உலையமுனி வாய்நடந்தான் ஊர். 13

சந்திரனே கல்ஆக, தம்கிளையே கைஆக,
சந்தனங்கள் தேய்க்கும் தணிகையே — இந்திரற்காய்
நீல்தத்துஉ வாஇரவா நெஞ்சுஅவுண ரைத்துணித்தான்,
ஆறுஅத்து வாவிரவான் ஆர்வு. 14

இந்திரவில் ஏர்நுதலார் இந்துமுகம் கண்டு,புனல்
சந்திரகாந் தம்கால் தணிகையே — முந்துஉரத்தில்
வேய்ஐமத லைக்கணியார் வீயா துஅருள்வரத்தை
மாயைமத லைக்குஅணியார் வைப்பு. 15

மாதர்எழு மாடமிசை வந்துஊரும் கன்னிதனைத்
தாதிஎனக் கூவும் தணிகையே — பூதரம்நேர்
அவ்வீர ஆகுவினை அங்குஊர் கரிக்குஇளையோன்
செவ்வீர வாகுவின்ஐ சேர்வு. 16

இந்திரவில் வாசிகையாய் இந்துஇரவில் வெண்குடைஆம்
தந்திரம்உற் றுஓங்கும் தணிகையே — எந்திரம்போல்
ஆங்காரத்து உள்மையினார்க்கு ஆகும் பிறப்புஒழியான்
ஓங்காரத்து உண்மையினான் ஊர். 17

கோள்அரவம் மஞ்ஞைக் கொடிக்குஅஞ்சி கோபுரத்தின்
சாளரம்புக்கு ஓடும் தணிகையே — வாள்அரவம்
வில்லம் பிறைமதித்தார் வேணியன்மேல் ஏவுகழை
வில்அம் புஇறைமதித்தார் வெற்பு. 18

செங்காந்தள் பூத்துடுப்பைத் தீயஅரா என்றுதிங்கள்
தங்காதுஅங் குஓடும் தணிகையே — மங்காது
நீள்தரும பேத நெறிக்குமரன், ஞானியர்க்குத்
தாள்தரும்அ பேதன் தலம். 19

சோதிஉறும் சோதிமரம் துன்னி,எறி வோர்மழுச்செந்
தாதுமயம் ஆக்கும் தணிகையே — நீதி
பராசரன்ஆள் தற்குஇசையாப் பாலரைக் காத்துஆண்டான்
சராசரம்நா டற்குஇசையான் சார்பு. 20

மாத்தூலம் ஆம்குவட்டின் மாடுவரு மேடமிசைச்
சாத்தூலம் பாயும் தணிகையே — ஏத்தும்
அரிமுகன்ஐ யம்குலைத்தார், ஆழ்கடற்குஏ காமுன்
கரிமுகனை அங்குஉலைத்தார் காப்பு. 21

மேகம்அணை யும்கரியை வேறுஅணைந்தது என்றுபிடி
தாகமுடன் ஊடும் தணிகையே — ஆகமம்சொல்
பத்துவிதத் தாரகத்தான் பாவனைக்குஎட் டாதகுகன்
அத்துவிதத் தாரகத்தான் ஆர்வு. 22

சந்தின் குளகுஒடிந்து தாழ்சுளைவீழ் தேன்தோய்த்து
தந்திபிடிக் குஊட்டும் தணிகையே — செந்தினைசேர்
காட்டுஅத்தா ரோதியினார் காதலித்தார் பன்னிரண்டு
நாட்டத்தார் ஓதியினார் நட்பு. 23

பூம்தேற்றி னால்முடிமேல் பூண்டபசும் பொன்கழைகள்
சாந்தாற்றி மானும் தணிகையே — தோம்தோற்றும்
கோத்திரஏ தத்துஇனியான் கூடா துஅருள்முருகன்
சாத்திரவே தத்துஇனியான் சார்பு. 24

வெண்மதியி னால்குறவர் வெண்கமலப் பூஎனவான்
தண்மதியைச் சூடும் தணிகையே — விண்ணுலகத்
தான்அனத்தான் நத்தன் அரன்தமக்குஐ மூஇரட்டி
ஆனனத்தான் அத்தன் அகம். 25

முத்துஉதிர்வேய்த் தேனடையில் மொய்த்தஅளி ஆதுலர்சேர்
சத்திரம்நேர் ஆகும் தணிகையே — அத்தன்
உருகாஎன் அத்தந்தான் ஓம்மொழிக்கு மாயோன்
மருகா! எனத்தந்தான் வாழ்வு. 26

நீலவட்ட வான்கதிரை நேடுஅரவின் குஞ்சரங்கள்
தாலவட்டம் வீசும் தணிகையே — ஞாலவட்டம்
தீமைஊர் அக்கொடியார் தீயநகைத் தான்அருள்
மாமாயூ ரக்கொடியார் வைப்பு. 27

துள்ளும்இர லைக்கோட்டால் சோர்தருகோல் தேன்மணிகள்
தள்ளிஅலைத் துஓடும் தணிகையே — விள்ளுமலர்
தீமையின்மேல் ஏவுஅருவான் தேகம்எரித் தார்க்குஅருள்வான்
மாமயில்மே லேவருவான் வாழ்வு. 28

காய்பறித்துத் தெங்கின் கடுவன்உயர் கற்பகத்தில்
தாய்க்குதித்துஉ லாவும் தணிகையே — தீப்பொறியை
வெல்லார் அலார்பயம்தான் மேவும் பவம்ஒழியான்
நல்ஆர லார்பயந்தான் நாடு. 29

வல்லியத்துக் குஉட்காத வானவர்முள் மெய்விதிர்க்கும்
சல்லியத்துக் குஅஞ்சும் தணிகையே — நல்இயல்சேர்
மாத்துரிய தீதத்தார் மாயைப் பிறப்புஒழித்துக்
காத்துஉரிய தீதுஅதீதத் தார்காப்பு. 30

தட்டைஉறும் கிள்ளைதினைத் தட்டைஉற பூவையர்கைத்
தட்டையின்அ தட்டும் தணிகையே — சிட்டர்
இதையகம லந்தவிர்ந்தார் ஈர்ஆறு தோளார்
சிதைஅகம லம்தவிர்ந்தார் சேர்வு. 31

நீண்டவரை வான்அளக்க நீண்டவரைப் போலமார்த்
தாண்டவரைக் கூடும் தணிகையே — பாண்டவரைச்
சத்தியத்துஅத் துஏதுஅரித்தான் தன்மருகன் மெய்ஞ்ஞான
சத்திஅத்தத் தேதரித்தான் சார்பு. 32

நீளவட்டப் பாறையின்மேல் நின்றுமயில் ஆடமந்தி
தாளவட்டம் தாக்கும் தணிகையே — மாளஅட்ட
நஞ்சுஅரவுஅ ணங்குஒண்தார் நாதர்அழற் கண்பொறியாய்
நம்சரவ ணம்கொண்டார் நாடு. 33

**கந்தமாதனகிரி**

தாழ்வுஆகும் பைங்கிளைகள் சார்பருதிப் பைங்கிளைகள்
தாழ்வுஆக மேல்ஆம் தணிகையே — வாழ்வுஆம்
இருக்குஅந்தம் ஆதனத்தார் என்னையும்ஆட் கொள்ளும்
திருக்கந்த மாதனத்தார் சேர்வு. 34

**தேவகிரி**

வெம்தழலி னால்வெடித்த வேய்முத்தம் விண்மடவார்
தந்தமுலை தாக்கும் தணிகையே — கந்தம்உறும்
மாவகிரின் அம்பின்ஆர் மைக்கண் குறத்தியர்வாழ்
தேவகிரி நம்பினார் சேர்வு. 35

**வேங்கடம்**

விண்உயரும் ஆசினியின் மென்கனியை மந்திபெருந்
தண்ணுமைபோல் கொட்டும் தணிகையே — பண்ணும்உடல்
தீவேம்க டத்தன்மை செப்பினன்மா வேங்கடத்தன்
மாஏரங்குஅ டத்தன் வரை. 36

**பொதியமலை**

கிட்டும் பிறைக்குணிலால் கேவேடர் தம்துடியைத்
தட்டும் ஒலிமல்கும் தணிகையே — அட்டுஉடலம்
சாம்கலகத் தானவர்அஞ் சப்பொருதான் தண்பொதிய
ஓங்கல்அகத் தான்அரசு ஊர். 37

## சிலேடை வெண்பா

### குமரகோட்டம்

### சிவன் திருவுரு சிலேடை (முற்பாதி சிலேடை)

பொங்குஅரவம் கந்தரம்கார் புல்லுமைபஞ் சானனத்தால்
சங்கரனை ஒப்பாம் தணிகையே — தங்கும்
அமரகோட் டத்தானத் துஅம்பொன் முடிசேர்
குமரகோட் டத்தான் குடி. 38

### கச்சிமாவடி

### திருமால் திருமேனி (முற்பாதி சிலேடை)

பூங்கமல உந்திமணி பொன்திகிரி கோடுவனம்
தாங்குதலால் மால்ஆம் தணிகையே — ஓங்குதண்டைச்
சேவடியான் நான்இமலம் சேரா துஅருள்கச்சி
மாவடிஆ னான்நிமலன் வைப்பு. 39

### வள்ளிமலை

### பிரமனுக்குச் சிலேடை

நால்வாய்கா யத்திரிமான் நண்ணமரை மேவுபெருஞ்
சால்பால் விதிஆம் தணிகையே — நூல்வாய்ந்த
வெள்ளிமலை வேங்கைஆன் வீடுஉடைஊர் திச்சிவன்சேய்
வள்ளிமலை வேங்கையான் வாழ்வு. 40

### கதிர்காமம்-அரசனுக்குச் சிலேடை

மந்திரிகூ டத்தலைமை மன்னி மலைஅரசாய்
தந்திரிகூ டம்சேர் தணிகையே — சிந்துமுரசு
எண்திக்கு அதிர்காமன் எண்ணுமுறை மைத்துனன்ஆம்
கண்டிக் கதிர்காமன் காப்பு. 41

### திருச்செங்கோடை

கொங்குஆர் மலர்ச்சுனையும் கோவேடர் கைச்சிலையும்
சங்காரம் செய்யும் தணிகையே — தெங்குஆரும்
செங்கோடைக் கண்யான் சேவிப்ப வீற்றிருக்கும்
செங்கோடைக் கண்ணியான் சேர்வு. 42

### பரங்குன்றும் அலைவாயும் கூடிய திருகு

கோங்குதலை வாய்மலரும் கோதையர்கள் வாய்மலரும்
தாங்குதலை மாறாத் தணிகையே — ஓங்கும்
பரங்குன் றுஅலைவாயான் பாலன்அல்லார் தேக
பரம்குன் றலைவாயான் பற்று. 43

### ஆவினன்குடி

காமமயல் உற்றவரும் காசுஅகலும் பூசுரரும்
சாமமறை கூறும் தணிகையே — தேமருவும்
செய்ஆவி நன்குடிஆன் செல்வம்மணி மாடமும்சேர்
மெய்ஆவி னன்குடியான் வெற்பு. 44

### ஏரகம் இடைக்கழி கூடிய திருகு

கார்அங்க வேடர் கரத்தினும்மீ வானத்தும்
சாரங்கம் தாவும் தணிகையே — சீர்தங்கும்
ஏரகம்இ டைக்கழியான் என்றும்இரு தாள்வணங்கு
வார்அகமி டைக்கழியான் வைப்பு. 45

### குன்றுதோறாடல்

சூழும்முழை யும்சவரர் துன்னும்உழை யும்புத்தேள்
தாழும் தவர்சேர் தணிகையே — நீள்கழலை
ஒன்றுதோ றுஆடலினான் உற்றுஅகலான் தொண்டர்உளம்
குன்றுதோ றுஆடலினான் குன்று. 46

### பழமுதிர்சோலை

வித்தியஏ னல்குரலும் வேடமட வார்குரலும்
தத்தைகவர்ந் துஏகும் தணிகையே — பத்தர்தொழும்
சோலைமலை வாய்நிலையார் தொண்டர்உளத் துஅன்புஅகலுங்
காலைமாலை வாய்நிலையார் காப்பு. 47

### நீலோற்பலத்துக்குத் திரிபு

பங்கயக்கண் மால்விண்டும் பைஞ்சாரல் சூழ்விண்டும்
சங்கமுடன் தாழும் தணிகையே — கொங்குஉலவு
கல்லாரம் பூண்உரத்தான் காழ்வயிரம் மாணிக்கக்
கல்ஆரம் பூண்உரத்தான் காப்பு. 48

சந்தனமும் ஏனல் தனைக்காக்கும் தையலார்
தம்தனமும் வம்புஆர் தணிகையே — முந்தும்
அறுமீன் அருட்குஅளியான் அம்கமலத் தாட்குஅன்பு
அறும்ஈனர் உள்களியான் ஆர்வு. 49

### கிரவுஞ்சகிரி

ஊனத்தை நீக்குநரும் ஊசல்மட வாரும்அன
தானத்தை ஏயும் தணிகையே — வானத்து
இரும்கற் பகமாய்த்தான் ஈவான்கை வேலால்
பெரும்கல் பகமாய்த்தான் பெட்பு. 50

பஞ்சவனத் தையலரும் பஞ்சவனத் துஐஅலரும்
தஞ்சவனம் சாரும் தணிகையே — அஞ்சலிசெய்
தாரதுஇன் னாஇரித்தான் சாற்றஅரும்வே தாந்தம்எலாம்
தாசரதி நாவிரித்தான் சார்பு. 51

### விசாக நட்சத்திரம்

ஏமம் சரிகளினும் எல்ஆர்பைங் காவினும்போ
தாமஞ் சரியார் தணிகையே — வாம்உழைபின்
போய்ஆவி சாகத்தான் பொற்கணைதொட் டான்மருகன்
மாயா விசாகத்தான் வாழ்வு. 52

செந்தினைகள் வித்துநரும் தேவியரோ டுஊடுநரும்
சந்தினைமுன் போக்கும் தணிகையே — தந்துநலம்
வண்டோ தரிக்குஉவந்தான் மைந்தன்முனம் தானவர்செய்
வண்டுஒ துஅரிக்குவந்தான் வாழ்வு. 53

### காட்டிய கோலம் சிவந்தார்

கார்அணிசெய் கொன்றைகளும் கண்டு தொழு வோர்களும்பூத்
தாரணியை ஆளும் தணிகையே — சூரனும்முன்
பூட்டியகோல் அஞ்சிவந்தார் பொன்றாமல் காத்துஅவர்க்குக்
காட்டியகோ லம்சிவந்தார் காப்பு. 54

### மீதான யோகம்

பாமறையோர் அம்மனையும் பாவையர்கை அம்மனையும்
தாமகமே நண்ணும் தணிகையே — தூமதியின்
மீதான யோகத்தார் மெய்யறிவில் காணும்மயில்
மீதான யோகத்தார் வெற்பு. 55

## ஆறு-அக்கரம்

செங்கழுநீர் ஓடையினும் செந்தா மரையிடத்தும்
சங்கமலை வீசும் தணிகையே — பங்கயன்சீர்
மாறக் கரத்தால் மணிமுடிமேல் சூட்டினான்
ஆறுஅக் கரத்தான் அகம். 56

கண்ணமையும் கண்அமையும் கானவர்நீ ளும்தோளும்
தண்ணுமைமே லாகும் தணிகையே — பெண்குறத்தி
தாளில்நல்அம் காட்டில்நான் தாகம்உற்றேன் என்றுஇறைஞ்சி
வேளின்நலம் காட்டினான் வெற்பு. 57

ஓங்குறுவான் எல்லைக்கும் ஒண்தவர்வீட் டுஎல்லைக்கும்
தாங்கறிவே யொன்றும் தணிகையே — ஏங்கிஅழும்
வானவர்கோ பத்தினியார் வாடுதுயர் நீக்குதற்குத்
தானவர்கோ பத்துஇனியார் சார்பு. 58

பூஉதிர்வெங் கானகத்தும் புக்கமட வார்அகத்தும்
தாவுமறி வாழும் தணிகையே — தேவிஉமை
கிண்ணப்பால் ஆர்வாயான் கேடுஅறுபூ நீர்தீகால்
விண்அப்பால் ஆர்வாயான் வெற்பு. 59

மிக்கமட வார்முலைக்கும் வேய்த்தலைத்தேன் கூட்டினுக்கும்
சக்கரவா கம்தாழ் தணிகையே — துக்கம்உறும்
இம்மைஇலான் அம்மைஇலான் ஏனோர்க்குஆம் உம்மைஇலான்
வெம்அயிலான் அம்(ம)மயிலான் வெற்பு. 60

கெண்டைவிழி யார்அடியும் கேதனத்தின் நீள்முடியும்
தண்டை அணிந்துஓங்கும் தணிகையே — தொண்டர்உன்னும்
ஆறுஆதா ரத்தினார் அவ்வொளிஆ னார்குறத்தி
தேறுஆதா ரத்தினார் சேர்வு. 61

ஓவில்அகம் கண்டவர்க்கும் ஊங்குபுறம் கண்டவர்க்கும்
தாவிலண்டர் போற்றும் தணிகையே — மேவியதோள்
வாகுவலை யம்சூழ்ந்தார் மாங்கனிக்காய் ஓர்இமைப்பின்
மாகுவலை யம்சூழ்ந்தார் வைப்பு. 62

முந்திரிகைச் சாரல்களும் மொய்குழலார் மூரல்களும்
சந்திரிகை ஆகும் தணிகையே — கந்தர்
அலங்கார பூதியினார் அன்புடையார் பாவம்
விலங்குஆர · பூதியினார் வெற்பு. 63

சிந்தா மணிக்கொடியும் சேவிக்கும் வந்திகளும்
சந்தானம் எய்தும் தணிகையே — நந்தாத
கானத் துஇருக்குளவன் காலில் தளைபூட்டும்
ஞானத் திருக்குளவன் நாடு. 64

பூமருவும் சாரலினும் பொய்கையிடத் தும்கொடிய
தாமரைகள் தாவும் தணிகையே — காமருவும்
அம்தவள வாரணத்தான் ஆகண் டலன்வாழ்வு
தந்தவள வாரணத்தான் சார்பு. 65

மைக்கணமும் கந்தரமும் வானமதி யங்குலவும்
தக்கவரை மேவும் தணிகையே — கொக்கை
இரண்டாகத் தாக்கியமன் ஏங்கஉயிர் மீட்டும்
திரண்டுஆகத் துஆக்கியமன் சேர்வு. 66

விற்பரவு ஞானியரும் மென்கோட்டுத் திண்கனியும்
தற்பரத்தை நண்ணும் தணிகையே — பொற்பணிலச்
செங்கைஇடை யன்துதித்தான் தேவர்சிறை யும்தொலையக்
கங்கையிடை அன்றுஉதித்தான் காப்பு. 67

சிங்கார மங்கையரும் தேனருவிக் கானாறும்
தங்கா தலையார் தணிகையே — இங்குஆர்
மனத்தின்ஒளித் துப்புஉணர்வார் மால்அறுத்தார் மாதை
வனத்தின்ஒளித் துப்புணர்ந்தார் வைப்பு. 68

மாந்தர் மனங்களினும் மாதர்குடை வாவியினும்
சாந்தம் குலாவும் தணிகையே — பாந்தள்அணி
எட்டுஅம் புயத்தான் இளஞ்சேய்கை கால்முகம்கண்
மட்டுஅம் புயத்தான் வரை. 69

பொற்குறமின் னார்முகம்நேர் போம்கதிரும் வாள்அரவும்
தற்பணம்நேர் காட்டும் தணிகையே — சொல்பொறிகள்
ஐந்துஓகை மால்தான் அசித்தாரை ஆட்கொள்வான்
பைந்தோகை மாறான் பதி. 70

மேதகுவில் வேட்டுவரும் மேன்மைபெறும் சோதிடரும்
சாதகத்தைத் தேடும் தணிகையே — பாதத்து
அடுக்குஆர்த்தி கைஆயார் ஐயறிவிற் குஎட்டார்
உடுக்கார்த்தி கைஆயார் ஊர். 71

வேரல்அரி ஆர்குவட்டும் வெங்கயத்தின் மத்தகத்தும்
சாரலரி வாவும் தணிகையே — பாரில்எழில்
நண்குறிஞ்சிக் கோவிலான் நாரதரை வீணைஎழும்
பண்குறிஞ்சிக் குழவிலான் பற்று. 72

விம்முமுலைப் பேதையரும் வில்வாங்கு மன்மதனும்
தம்மணக்கோ லம்செய் தணிகையே — செம்மலர்சேர்
ஆறு முகமுடியார் ஆறிரண்டு தோள்உடையார்
கூறும் உகம்முடியார் குன்று. 73

மாதவம்செய் வோர்மனமும் மாலைதொடுப் போர்கரமும்
சாதிகுல மாயும் தணிகையே — யாதும்
மலையா துஅலையுடைஆர் வையகத்தில் கோவில்
மலைஆ தலையுடையார் வாழ்வு. 74

கந்தருவர் யாழ்இசையும் கல்அருவித் தாழ்வரையும்
சந்தம் பலவாம் தணிகையே — வெந்து
நடுக்குறத்தி காந்தம்நய னம்திறந்தோன் மைந்தன்
படுக்குறத்தி காந்தன் பதி. 75

தூதுஇறைவர் பால்விடுத்த தோகையரும் பூஞ்சுனையும்
தாதிவரப் பார்க்கும் தணிகையே — நாதமொடு
விந்துகலை அற்றுஅடுத்தார் மெய்ச்சொரூபம் காணஉயிர்
நைந்துகலை யல்தடுத்தார் நாடு. 76

நண்ஈர நெஞ்சினர்வாய் நன்மொழியும் சோலைகளும்
தண்ணீர்மை குன்றாத் தணிகையே — விண்ணோர்
புணர்வுஅரும்சோ தித்தறியார் பூரணர்சேய் ஆனார்
உணர்வரும்சோ தித்துஅறியார் ஊர். 77

ஏர்பெறுவல் லிக்கொடிக்கும் ஏற்றஅறம் செய்குநர்க்கும்
சார்புகழை ஈயும் தணிகையே — பாரில்
அனந்தம் குவட்டுடையார் அன்றுஅரக்கர் போரில்
வனம்தங் குவட்டுடையார் வாழ்வு. 78

வீரமற வோர்உரமும் மெய்த்தவரும் வந்துமுனம்
சாருமெய் முட்டாக்கும் தணிகையே — ஆரணனார்
நீலமணி கோலத்தார் நேடுஅழலா னார்அருளும்
நீலம்அணி கோலத்தார் நேர்பு. 79

காஇலங்கு தென்றலும்நீங் காமகம்செய் பூசுரரும்
தாவிலங்க மோதும் தணிகையே — தேஇலங்கு
வானத்துஅ ரம்பைமக வான்நத்தன் ஏத்தமகிழ்
வான்அத்தர் அம்மைமக வாழ்வு. 80

சேறுபட்ட தண்பணையும் செவ்வாழை யின்கனியும்
தாறுபட்டுஏர் துன்னும் தணிகையே — ஆறுபட்ட
கோணத் தன்இத்துவந்தான் கூடான் குறத்திநலம்
காணத் தனித்துவந்தான் காப்பு. 81

கோலியசெய் கன்னலொடும் கோல்வளையார் கற்பினொடும்
சாலி சமம்காட்டும் தணிகையே — நாலுமுகன்
கேசவன்அங் கம்பரித்தார் கேண்மைஉப தேசிகனார்
வாசவனங் கம்பரித்தார் வைப்பு. 82

வந்தோர்க் குஅருள்குருவும் மாகளிறு மேகலகச்
சந்தேகந் தீர்க்கும் தணிகையே — முந்துஊரும்
அம்சே வலத்தன்நுவல் ஆகமம்எ லாம்உணர்ந்தான்
செஞ்சேவல் அத்தன் சிலம்பு. 83

வேடர்பிழி யும்பிழியும் வெள்அருவி நீரும்முனம்
சாடிஉற வாக்கும் தணிகையே — கூடலர்செய்
வெம்போர் உகம்உகதான் வீயாத கொக்கைஅட்டான்
அம்போ ருகமுகத்தான் ஆர்வு. 84

வேய்அழல்தாக் கும்குரங்கும் வெம்கரியின் கன்றுகளும்
தாய்முலைப்பா லாரும் தணிகையே — வாய்மைதரும்
புந்திமடுத் துஎன்பாலான் போன்றுஅருள்செய் யும்குமரன்
நந்திமடுத் தென்பாலான் நாடு. 85

மையல் மடந்தையரும் மாந்தர்களும் காமர்உடற்
றையலரைச் சேரும் தணிகையே — பொய்அகந்தை
ஆம்கா தரத்தார் அறியாவே தாந்தத்தில்
தேங்குஆ தரத்தார் சிலம்பு. 86

கேகயமும் அந்தணர்தம் கேள்வியும்பல் மாமறைபூஞ்
சாகைஉற வாடும் தணிகையே — நாகுஅலைவாய்
ஐயன்முனம் கைபுநைந்துஆ னாதுமுரு காஎனும்ஓர்
தையல்முனம் கைபுனைந்தான் சார்பு. 87

பூவையரும் தென்றல்தவழ் பூங்காவும் செஞ்செவியைத்
தாவுகுழை பூட்டும் தணிகையே — மேவலர்மேல்
ஐஅம்புஎய் துஏர்என்புஆர் ஆக்கைஅழித் தார்எனக்குஇவ்
வையம்பேய்த் தேர்என்பார் வைப்பு. 88

## முப்பொருள் - சிலேடை

கோபுரம்சேர் கோபுரமும் கோடரம்சேர் கோடரமும்
தாபரமும் மஞ்சுஆர் தணிகையே — நீபம்அணி
வேலா யுதத்துவசன் மெய்யடியா ருக்குஅருளும்
காலாயு தத்துவசன் காப்பு. 89

ஏழு சுனையும் எயிலும் இரும்பொழிலும்
தாழு மரவங்கூர் தணிகையே — வாழுமனை
காட்டும்மறி வென்றுவிண்டான் காதல்மரு கன்வீட்டில்
நாட்டும்அறி வுஎன்று விண்டான் நாடு. 90

தேக்கும்மலர் ஓடைகளும் சீயம்எதிர் பாய்கரியும்
தாக்கணங்கை மன்னும் தணிகையே — வீக்குசடை
ஆறு முடிக்கும்அரன் ஆதரவி னால்அளித்த
ஆறு முடிக்குமரன் ஆர்வு. 91

பண்அடைவில் பாடுநரும் பைந்தருவும் அந்தணரும்
தண்ணடையை ஓவாத் தணிகையே — மண்ணிடம்சேர்
மாலான ஏலான் மலர்த்தா மரைக்கரத்தின்
மேலான வேலான் விழைவு. 92

மெத்துசுனை ஓர்ஏழும் வேட்டுவரும் பாய்அரிமாச்
சத்தமும்கம் பாயும் தணிகையே — மொய்த்தகர
பங்கயக்கன் றுகிளைஆர் பண்மொழியாள் பாகன்அருள்
வெம்கயக்கன் றுக்குஇளையார் வெற்பு. 93

வாரம்உறும் ஐவனமும் மைவேடர் கைவில்லும்
சாரலும்கங் கேசூழ் தணிகையே — ஆருயிர்நோய்
துய்வயா நைத்துஅலைவன் சோகம்உறா துஆள்குமரன்
தெய்வயா னைத்தலைவன் சேர்வு. 94

வானவர்சூழ் ஆலயமும் மங்கையர்கை யும்கரியின்
தானமும்வண் டார்க்கும் தணிகையே — ஈனம்உறும்
நானா பதிதன்ஒரு நன்குஇல் எனைப்புரந்த
சேனா பதிதன் சிலம்பு. 95

தண்டலையும் பங்கயமும் தன்நிழலைப் பாய்கரிபோம்
தண்டமும் கோடுஏந்தும் தணிகையே — தொண்டருக்கு
நாக்குஇரவும் சங்கடம்தான் நண்ணும்மிடி யும்கெடுத்தான்
மாக்கிரவுஞ் சம்கடந்தான் வைப்பு. 96

யாகநிலத் தும்தேற் றிறாலிடத்தும் மேகத்தும்
சாகம் நிலையாகும் தணிகையே — மோகம்அறும்
சாத்துவிதத் தான்அகிலன் தண்காந்தள் வெட்சிமராச்
சாத்துவிதத் தான்அகிலன் சார்பு. 97

வீறுமணி வீதிகளும் மென்கரும்பும் பைங்கமுகும்
சாறுமிகுந் துஓங்கும் தணிகையே — ஏறிஇழி
சாரலைவாய் யாளிதிரி தண்மலைவாய் எங்கும்நின்றான்
சீர்அலைவாய் ஆளி சிலம்பு. 98

## நாற்பொருள் - சிலேடை

பங்கயமும் ஏரிகளும் பாவையர்கை யும்பணியும்
தங்கவளை சூழும் தணிகையே — திங்கள்நுதல்
செந்திலகத் தன்புனிதன் செல்வன் கடற்கரைசேர்
செந்தில்அகத் தன்புனிதன் சேர்வு. 99

ஆலயமும் கல்சுனையும் அம்புயமும் தாழ்வரையும்
சாலவன மல்கும் தணிகையே — காலின்அலர்
கொய்துஇடஅம் குதருவான் கும்பிடவே தன்படைப்பும்
செய்திடஅங் குத்தருவான் சேர்வு. 100

சோலைகளும் பூந்தடமும் தோகையரும் தூயஅறச்
சாலையும்பொன் நீங்காத் தணிகையே — வேலைஎழு
நச்சுஇதாம் நம்தம் நலிபவம்தீர்த் துஆள்முருகன்
சச்சிதா னந்தன் தலம். 101

## சிறப்புப் பாயிரம்

விகற்பநடை யால்தணிகை வெண்பாநாற் பானும்
பகர்ச்சிச் சிலேடை அறுபானும் — அகற்சிபெறும்
ஒன்றுஇரண்டு மூன்றுநான்கு ஒத்தபொருள் தந்துஉரைத்தான்
நன்றுஅறிகந் தப்பமுனி நன்கு 102

தணிகை வெண்பா முற்றிற்று

உ

# கதிரைச் சிலேடை வெண்பா

## க. சோமசுந்தரப் புலவர்

### காப்பு

#### விநாயகர்

கானுயிர்பூஞ் சோலைக் கதிரைச்சி லேடைவெண்பா
நானுரைக்கச் செஞ்சொ னயந்தருமே—வானவர்க்கு
முன்னானை மாமுகவன் முன்னருளு மைந்துகரத்
தன்னானை மாமுகவன் றாள். 1

#### மாணிக்கப் பிள்ளையார்

தேவரு மேத்துங் கதிரைச்சி லேடைவெண்பா
நாவரு மேத்தி நனிபணிந்தாற்—பூவருளு
மாதங்கம் பாதி வளர்வரையீ மாணிக்க
மாதங்கம் பாத மலர். 2

#### நாமகள்

காசிப் பதிநேர் கதிரைச்சி லேடைவெண்பா
பேசிப் பரவப் பெரிதருளும்—ஆசைமுகன்
அம்புயத்தி னாவி லகத்திற் சிரத்தில்வெள்ளை
அம்புயத்தில் வாழு மனம். 3

#### நூல்

பூமருவு தண்டலையும் பொன்னனையார் பூங்கரமுங்
காமருவண் டார்க்குங் கதிரையே—ஓமருவும்
அத்தமறை தந்தா னறியா னனுங்கமுடி
யத்தமறை தந்தா னகம். 4

பாவலருங் கண்டும் பணிமொழியா ருஞ்சுரும்புங்
காவலரைக் கூடுங் கதிரையே—தேவ

னுருக்குளத்து வந்தா னொருமுருகா காவென்
றுருக்குளத்து வந்தா னுறை. 5

பூப்பயிலும் பொன்னன்னார் பொன்புனைவார் பூங்கரத்தைக்
காப்பணியுஞ் செல்வக் கதிரையே—மாப்பிறவி
யாறக் கரத்தா னணைத்தெம்மை யாள்குமரன்
ஆறக் கரத்தா னரண். 6

மங்கலிமார் வாண்முகமும் வண்டலைபூந் தண்டலையுங்
கங்கண மேவுங் கதிரையே—வெங்கலிதீர்
காசரவ ணத்தன் கமலத்தன் கைகுவிக்கு
மாசரவ ணத்தன் மலை. 7

உண்ணேய மிக்கோரு மோங்குமிளங் காவுமலர்க்
கண்ணீர் சொரியுங் கதிரையே—யெண்ணுமறை
பன்னிருகை யாரின்பம் பாவமறுத் தீயுமருட்
பன்னிருகை யாரின் பதி. 8

பாயிருள்சீக் கும்பகலும் பண்ணைவாய்ப் பைங்கூழுங்
காய்கதிரைக் காட்டுங் கதிரையே—மேயசடை
ஆறா னனத்தனவ னத்தற் கிறைமைதரும்
ஆறா னனத்த னகம். 9

விற்கொண்ட காளையர்கண் மெல்லியலார் தோண்மொழியிற்
கற்கண்டங் கூறுங் கதிரையே—அற்பார்
உறுவர்பய முண்டாண் டொருவாவின் பீந்தான்
அறுவர்பய முண்டா னகம். 10

வாசமடத் தேழையரும் வாவியிடைத் தாமரையுங்
காசிலன முண்ணுங் கதிரையே—மோசக்
கருவிளையாட் டம்மாயக் காமருல கெல்லாந்
திருவிளையாட் டம்மான் சிலம்பு. 11

அற்பூரு மன்பர் சிரத்து மலையகத்துங்
கற்பூர மேவுங் கதிரையே—பொற்பூரு
மஞ்சத்தான் றோற்று மறுகவரு வானடியே
மஞ்சத்தான் றோற்று மரண். 12

மேயகொடி மாளிகையு மெய்யடியார் கூட்டமுமா
காயங் கடக்குங் கதிரையே—தீய
மடக்குஞ் சரத்தானை மாமுகனைப் போரின்
மடக்குஞ் சரத்தான் மலை. 13

மிக்க குறத்தியரு மென்புனப்புள் ளோப்புநருங்
கைக்குறி பார்க்குங் கதிரையே—கைக்குங்
கடமலையு மையற் கடமு மழித்துப்
படமலையு மையன் பதி. 14

அஞ்சநடை யார்கதுப்பு மம்மவிணை யுஞ்செயிரில்
கஞ்சனை கடுக்குங் கதிரையே—விஞ்சுபல
மாயத்தா னாடல் வரைபகவை வேல்விடுமு
பாயத்தா னாடற் பதி. 15

வெண்ணகையார் கூந்தலிலும் வேடுவர்கள் காட்டினிலுங்
கண்ணி வளைக்குங் கதிரையே—நண்ணுங்
கருமாயச் சூரறுத்துக் காப்பான்கூர் வேலாற்
கருமாயச் சூரறுத்தான் காப்பு. 16

இந்துவத னத்த ரிளமுலையும் வீரர்களும்
கந்துகத்தே ரோட்டுங் கதிரையே—முந்தும்
பவமா வினையிடித்தான் பாதனலை மேலுற்
பவமா வினையிடித்தான் பற்று. 17

மன்னுகா ரிற்கடம்பு மாமணத்தி லாடவருங்
கன்னிகையை யேற்குங் கதிரையே—முன்னமலை
மாவர சத்தியத்த மால்கொளசுர் மைந்தடக்கு
மாவர சத்தியத்தன் வாழ்வு. 18

சொற்புலவர் தூக்கினிலுந் தூயமலர்ச் சோலையிலுங்
கற்பு மலருங் கதிரையே—வெற்புடனே
மாமூல வேரறுத்து வாழ்வமரர்க் கீந்தவஞ்ச
மாமூல வேரறுப்பான் வைப்பு. 19

நல்லார் மதிமுகத்து நாடு முலைமுகத்துங்
கல்லாரம் பூக்குங் கதிரையே—மல்லாடி
வந்தே விடுந்தேரான் மாயவடி வேற்பணித்த
வந்தே விடுந்தேரான் வாழ்வு. 20

நற்குணமு ளோருமரு ணாடுசிவ யோகியருங்
கற்பங் கடக்குங் கதிரையே—வெற்பரிந்தோன்
தூவியா கத்தற் சுமப்பா னருள்புரிந்த
மாவியா கத்தன் மலை. 21

மாலேறு சோலை மலையருகும் வண்டுகளுங்
காலாறு காட்டுங் கதிரையே—சேலேவை
மாவடுவை வேலைமலை மானோக்கி யார்தழுவு
மாவடுவை வேலை மலை. 22

துப்பிதழி யாரிடையுஞ் சூலுடையார் மென்னடையுங்
கைப்பிடியை யொக்குங் கதிரையே—செப்புமொழி
கண்டடக்குங் கோலம் பகப்பிடிசேர் கற்பகமென்
கண்டடக்குங் கோலனமர் காப்பு. 23

தண்டைக்கால் கண்டவருந் தானேர்ந்து கொண்டவருங்
கண்ட மறுக்குங் கதிரையே—பண்டொருநாள்
மானிடமா னார்க்கு மறைமொழிந்து மானுக்காய்
மானிட மானார் வரை. 24

ஐயர்க் கிகுளை யடைந்தோருக் கில்வாழ்வோர்
கையடை யீயுங் கதிரையே—செய்ய
புலிமரமா னான்சேர் பொருப்பிடத்து முன்னாட்
புலிமரமா னான்சேர் பொருப்பு. 25

வைத்த படைப்பையிலு மாமணிநீர்ப் பாறையிலுங்
கத்தரி மேவுங் கதிரையே—நத்திச்
சிவவேட மாகித் திருந்திழையைச் சேர்ந்த
சிவவேட னாதிச் சிலம்பு. 26

கொண்டுபொருள் விற்போருங் கூறுசெபஞ் செய்வோருங்
கண்டிகையிற் சுற்றுங் கதிரையே—பண்டொருநாண்
மாப்பிடியை யுண்டநடை வள்ளியள்ளி யீந்ததினை
மாப்பிடியை யுண்டான் மலை. 27

சொற்கிளியை யோட்டுபசுந் தோகையரு மாய்ச்சியருங்
கற்கரத்தைச் சுற்றுங் கதிரையே—நற்புனமே
வாசுகமே வென்றவிழி வள்ளியைய டைந்தெனுடன்
வாசுகமே வென்றான் வரை. 28

நல்லார்கள் கந்தரமு நாறுமலர்ப் பூந்தடமுங்
கல்லாரங் காட்டுங் கதிரையே—அல்லல்கெட
மாதேவா வென்றார் வினைதுடைத்து வள்ளிபின்போய்
மாதேவா வென்றார் மலை. 29

மட்டுவிரி தாழைகளும் வாய்த்தநடைத் தொண்டர்களுங்
கட்டுச்சோ றேந்துங் கதிரையே—யுட்டெளிவால்
ஐயவா வென்றார்க் கருளியொரு மான்பிடிக்க
ஐயவா வென்றா ரகம். 30

கும்பமுலை மங்கையருங் கோதிலடி யாருமுருக்
கம்பிடித் தார்க்குங் கதிரையே—இம்பர்
வடக்கோடு வையகத்தன் மைத்துனன்மால் யானை
வடக்கோடு வையகத்தன் வாழ்வு. 31

கொட்டிக் குளத்தலவன் கூறுகற்பி னோர்கணவன்
கட்டளையில் வாழுங் கதிரையே—இட்டிடையாய்!
பூந்தழைசேர் கஞ்சப் புரிகுழலாட் கிவ்வரிய
மாந்தழைசே ரென்றான் வரை. 32

பேசுகா ணிக்கையிடும் பேருமலை வாணர்களுங்
காசறையிற் சேர்க்குங் கதிரையே—தூசங்
கொருகுருந்து கொண்டாண் டொழித்தான் தங்கச்சித்
தருகுருந்து கொண்ட தலம். 33

வேட்டுவனாய்க் கேட்டதுநீர் வேட்டுவினாய் வேண்டியதுங்
காட்டுவா வாகுங் கதிரையே—நாட்டமுடன்
தாமரையா மத்துத் தனித்துவள்ளி யைக்கொளும்பொற்
றாமரையா மத்தர் சரண். 34

செம்பொனளிப் போர்கரமுஞ் சேயிழையார் கந்தரமுங்
கம்பொருவுஞ் சீர்சால் கதிரையே—பம்புவலி
போகத் திருந்தார் புரமழித்தார் வள்ளியுடன்
போகத் திருந்தார் புரம். 35

அச்சங்கத் தாமரைவா யன்பர்மலர்த் தாமரைவாய்க்
கைச்சங்க மூதுங் கதிரையே—மெச்சுதிருக்
கோலங்கை யானமரர் கோனுதவு வாரணத்தின்
கோலங்கை யானமருங் குன்று. 36

பாலனசொல் லாரிடைமுன் பக்கமுமைக் காவுமறு
காலரவங் காட்டுங் கதிரையே—நீலநிற
மானபரங் குன்றத்தான் மன்னுங் கருணைவடி
வானபரங் குன்றத்தான் வாழ்வு. 37

செப்புமறை யோர்சுடர்க்குந் தேறறிஞர் மங்கையர்க்குங்
கைப்பதிகங் காட்டுங் கதிரையே—மெய்ப்பொருளை
ஏரகத்தார்க் கொன்று மிடரிருக்கா தாளுமரு
ளேரகத்தார்க் கொன்று மிடம். 38

பொற்கொடியார் நெஞ்சகமும் புன்னகையுங் கந்தரமுங்
கற்பணியைக் காட்டுங் கதிரையே—வெற்பிற்
பழநிமலை மைந்தன் பணிந்தார்க் கருளும்
பழநிமலை மைந்தன் பதி. 39

செல்வர்களுங் கானடையிற் செல்வோரும் வந்திரவிற்
கல்வீடு சேருங் கதிரையே—வல்லியொரு
பாலாவி னன்குடிலை பன்னுகென முன்பகரும்
பாலாவி னன்குடியான் பற்று. 40

பூண்டவடி யார்சிரத்திற் போர்புரிவோர் செங்கரத்திற்
காண்டீப மேந்துங் கதிரையே—யாண்டுமனக்
கோதணிகை யாளரிடங் கூடாக் குருபரனெங்
கோதணிகை யாளன் குலம். 41

சொற்புலவர் தூக்கினிலே தோழியறத் திற்றலைவி
கற்பனைபா ராட்டுங் கதிரையே—சுற்றுதிரை
தெள்ளிமுத் தங்கொடுக்குஞ் சீரலைவா யானணைத்து
வள்ளிமுத் தங்கொடுத்தான் வாழ்வு. 42

தூயதவத் தார்மனமுந் தோகையர்கள் சேல்விழியுங்
காயம் பழிக்குங் கதிரையே—மாய
மலையு மலைவாயா மாமரமு மாய
மலையுமலை வாயான் மலை. 43

மெய்யன்பர் செய்யுளிலும் வேடுவர்கள் சாணையிலுங்
கையம்பு தீட்டுங் கதிரையே—துய்ய
மழமுதிருஞ் சொல்லமுதம் வள்ளிதா வென்ற
பழமுதிருஞ் சோலையான் பற்று. 44

வித்தார் வயல்வரம்பில் வேடர் சிறுகுடியிற்
கத்தூரி வாழுங் கதிரையே—பத்துடைய
மாவடியார் கந்த மலர்தூவி வாழ்த்துகச்சி
மாவடியார் கந்தன் மலை. 45

தொண்டர் திருவுருவிற் றொல்வீரர் கச்சுடையிற்
கண்டகம் மேவுங் கதிரையே—அண்டுபவங்
குன்றக் குடிமுழுது மாளுங் குமரகுரு
குன்றக் குடிமுருகன் குன்று. 46

சீலமுறு யோகியருஞ் சேவடியைப் பூணுநருங்
காலங் கடக்குங் கதிரையே—நேயமுள
வாச வனத்தன் மடவார் மணவாளன்
வாச வனத்தன் வரை. 47

ஒண்டொடி நல்லா ருரைநடையு நெல்வயலுங்
கண்டனங் காட்டுங் கதிரையே—கண்டபடி
பாவையான் பாடப் பரிந்துகேட் டின்பருளு
மாவையான் பாடன் மலை. 48

சீர்முகம்பூ வன்னார் திருநுதலுந் தாழ்குழலுங்
கார்முகங் காட்டுங் கதிரையே—சேரு
மயில்வாக னத்த னருமருக னேறு
மயில்வா கனத்தன் மலை. 49

தூவியிள மஞ்ஞைகளுந் தொண்டர்களு மாவின்பாற்
காவடிவைத் தாடுங் கதிரையே—தாவுமடல்
அஞ்சே வலத்தனங்கை மாங்கனிக்குப் பூவலஞ்செய்
அஞ்சே வலத்த னகம். 50

ஆராம முல்லை யணிவரையி லாவணத்திற்
காரா மணிசேர் கதிரையே—சேரு
மகரமுதல் வன்னங்க ளாயினான் வாரி
மகரமுதல் வன்னன் வரை. 51

வாய்ச்ச தருநிரையும் வண்டமிழோர் வெண்கவியுங்
காய்ச்சீர் விரவுங் கதிரையே—ஓய்ச்சலிலாப்
பந்தத் திருக்குடையப் பார்த்தெனையாள் பன்னிரண்டு
பந்தத் திருக்குடையான் பற்று. 52

மண்மீ தணிநதியு மாதர்முகத் தாமரையுங்
கண்மீ னுலாவுங் கதிரையே—யுண்ணெகிழ்வாற்
பாற்கா வடியாடும் பத்தர்க் கருளுமறை
பாற்கா வடியான் பதி. 53

முட்செறியுஞ் சாரலிலு மொய்குழலார் வாண்முகத்துங்
கட்செவி யோடுங் கதிரையே—அச்ச
மறுத்தாழாத் தாளார்தம் மாயவஞ் ஞான
மறுத்தாளாத் தாளார்தம் வாழ்வு. 54

நம்பனுறை பேடகமு நல்லாவி னெய்விளக்குங்
கம்பமா வேறுங் கதிரையே—கும்பிடுவோர்
சங்கடம்ப னாளுஞ் சிதைத்தருளைத் தந்தகந்தன்
செங்கடம்ப னாளுஞ் சிலம்பு. 55

தந்தமணிப் பேடகத்திற் சார்புனத்துப் பாத்திகளிற்
கந்தமூ லஞ்சேர் கதிரையே—தந்தமணி
கைக்கும்ப கம்பக் கடகளிற்றை யேறியு
கைக்கும் பகவனுறை காப்பு. 56

பேணிப் பணிகுநரும் பெட்பார் மதவேளுங்
காணிக்கை யேந்துங் கதிரையே—பேணித்
திருவோண தீர்த்தன் றிசைமுகன்சே விக்குந்
திருவோண தீர்த்தன் சிலம்பு. 57

வைத்தமணிப் பந்தர்களு மானமலி வீரர்களுங்
கத்திகை தூக்குங் கதிரையே—குத்திச்
செருப்பா லடித்தானைச் சேர்வித்தான் சூரைச்
செருப்பா லடித்தான் சிலம்பு. 58

நிட்டைபுரி வோர்பிறவி நீர்ப்பெருக்கம் நெற்கழனிக்
கட்டங் கழிக்குங் கதிரையே—உட்டெளியப்
போதமருந் திட்டிப் புருடோத் தமர்க்கன்று
போதமருந் திட்டான் புரம். 59

குட்டமலர் தாமரையுங் கோதிலடி யார்மலமுங்
கட்டவிழக் காலுங் கதிரையே—யுட்டெளிவில்
அஞ்சத்தா னானுன் னடைக்கலமென் றேத்தவருள்
அஞ்சத்தா னானுன் னகம். 60

பொற்பார் கழகத்தும் போகும் வழியகத்துங்
கற்பா ரிருக்குங் கதிரையே—நற்புலவன்
வேன்முட்டை யென்றூழ் மிகுசுரத்துப் பேர்வினவ
நான்முட்டை யென்றா னகம். 61

மாமயல்கூர் காமுகரில் வண்பொருளி லன்பருருக்
காமனம்பு தைக்குங் கதிரையே—தேமருவு
நன்னா வலங்கனி நாவலத் தாட்கீந்த
நன்னா வலங்க னகம். 62

மல்லனீர் மூழ்குநரு மாசிறவ ருங்காவிக்
கல்லுடை தோய்க்குங் கதிரையே—சொல்லிறைவர்
மாவின் பழப்போரில் வண்பழனி போயெவர்க்கு
மாவின் பளப்போன் மலை. 63

பட்டா ரிடையார் பருவிழியு மைம்பாலுங்
கட்டா ரிவருங் கதிரையே—கட்டிளமைக்
கும்பமுனி யத்தனத்துக் கொம்பனையாட் கின்பமருள்
கும்பமுனி யத்தனத்துங் குன்று. 64

பொங்கு மணிநதியும் பூட்கைக் கொடிச்சியருங்
கங்கங் கிடிக்குங் கதிரையே—சங்கப்
பலகையுடை யார்க்குப் பனுவலுரை தேற்றும்
பலகை யுடையார் பதி. 65

மால்விழியார் வாண்முகத்தின் மைந்தர்வலச் செங்கரத்திற்
காலயில் காட்டுங் கதிரையே—சேலறுக்குங்
கண்ணா றிருங்கூந்தற் கண்ணியரோ டாடுமலர்க்
கண்ணா றிரண்டுடையான் காப்பு. 66

கொம்பாற் கொடிச்சியருங் கோபமத யானைகளுங்
கம்ப மிடிக்குங் கதிரையே—கொம்பெருமை
மாட்டானென் பான்வாள் வயவீரர்க் கஞ்சிவர
மாட்டானென் பான்வாள் வரை. 67

செய்யமட வாரணியுஞ் செல்வத் திருவடியுங்
கைவலமே காட்டுங் கதிரையே—செய்ய
கருப்பூரச் சோதிதலைக் காட்டினார் மாட்டு
விருப்பூரச் சோதிதலை வெற்பு. 68

வஞ்சியர்கள் மார்பகத்து மாமலையின் சார்பகத்துங்
கஞ்சுகச்சீர் மேவுங் கதிரையே—கொஞ்சுமொழி
மஞ்சோதி வள்ளி மணவாள னாகியப
ரஞ்சோதி வாழு மரண். 69

எண்ணுநருக் கின்னருளால் ஞாலத்துக் கோர்முகத்தாற்
கண்ணிருள் சீக்குங் கதிரையே—எண்ணி
யுருவேற்று மையர்க் குளமாசு தீர்த்தின்
னுருவேற்று மைய னுறைவு. 70

ஆற்றாச் சிறுவர்களு மம்மான் றிருமகனுங்
காற்றே ருருட்டுங் கதிரையே—போற்றியே
ஓங்குமா ராயநம வென்றார்க் குளந்திருத்து
மோங்குமா ராயனம ரூர். 71

ஓதரக ராவொலியு மொண்டொடியார் கூர்விழியுங்
காதம் பரியுங் கதிரையே—மோதுபவம்
ஏழுமலை யாவா றெமக்கருள்வா னெஞ்ஞான்று
மேழுமலை யாள்வா னிடம். 72

இட்டிடையார் வாய்மொழியி லின்பமலி யும்விழவிற்
கட்டியங் கூறுங் கதிரையே—கட்டமழி
நீற்றுமலை யாளு நியமமலை நீள்பிறவி
யாற்றுமலை யாள னகம். 73

ஆண்டுமலை யேறுநரு மாபரணம் பூணுநருங்
காண்டம தேந்துங் கதிரையே—ஈண்டிவரக்
கோக்குவித்துக் காக்கக் குடைபிடித்த கோன்மருக
னாக்குவித்துக் காப்பா னரண். 74

செய்யு மணத்தினிலுஞ் சேயிழையார் கூடலினுங்
கையாழி கூட்டுங் கதிரையே—மெய்யாகக்
காலையிலா லத்திகொளுங் கன்னியர்கள் வாழுமொளி
காலயிலா லத்திகொள்வான் காப்பு. 75

ஏந்துசிலை வீரர்களு மின்றமிழ்ப்பா வாணர்களுங்
காந்தம் பராவுங் கதிரையே—போந்த
கரும்பனைக்கைக் குஞ்சரத்தான் கண்ணுதித்தா னூருங்
கரும்பனைக்கைக் குஞ்சரத்தான் கண். 76

கொண்டறிய மத்தினருங் கூறுமகா ரின்மொழியுங்
கண்ட மறுக்குங் கதிரையே—தொண்டர்க்
கறமறைந்த சேய னருளிலா வண்டர்க்
கறமறைந்த சேய னகம். 77

ஐயர்புகழ் நாணு மரிவையரும் போதகமுங்
கையமுகங் காட்டுங் கதிரையே—மெய்யன்பர்
செந்தீக் குளமடைந்து தெய்வந் தெரிக்குமிறை
செந்தீக் குளமடைந்தான் சேர்வு. 78

அஞ்சமலி வாவியிலு மன்பர்துதி பாணியிலுங்
கஞ்ச மலியுங் கதிரையே—நஞ்சத்தாற்
கண்டங் கறுப்பாற் குரைத்தான் கடியவினை
கண்டங் கறுப்பான் கடம். 79

அக்கோக் குரவையரு மாறியங்கு மன்பர்களுங்
கைக்கோப்புக் கொள்ளுங் கதிரையே—இக்குவளை
வேளைக் கடைக்கணிப்பால் வென்றவன்சே யஞ்சியமும்
வேளைக் கடைக்கணிப்பான் வெற்பு. 80

மாமயிலன் னார்குழலில் வண்டலைகைத் தண்டிலிசை
காமரம் பாடுங் கதிரையே—மாமயல்செய்
தண்ணவா வென்றா ரகத்தரொரு மாவாக
அண்ணவா வென்றா ரகம். 81

வாரிரும்ப லாவின் மகோததியில் வந்துபயன்
காரினம்வீழ்ந் துண்ணுங் கதிரையே—நேரம்பு
சம்பந்த னுக்குகந்த சந்தமுலை யாள்பயந்த
சம்பந்த னுக்குகந்த சார்பு. 82

பேசுபிறப் பஞ்சுநரும் பீதகவி னையரும்பொற்
காசுபறி யென்னுங் கதிரையே—நேசமுடன்
பாவடியிற் சிந்தினாற் பாடவருள் வோன்பகையைத்
தாவடியிற் சிந்தினான் சார்பு. 83

மாயாவே யான்வடிவு மங்கைநல்லார் மென்றோளுங்
காயாவே யொக்குங் கதிரையே—தூயவுமை
மாதிட மீவான் மகன்மறலிக் கஞ்சாத
மாதிட மீவான் மலை. 84

வேயார் நதிக்கரையும் வெற்பாருஞ் சாரல்களுங்
காயாமா மேவுங் கதிரையே—ஓயாமல்
வேலவா வாவென்று வேண்டிப் பணிகுநர்க்கு
மாலவா வாட்டுவோன் வாழ்வு. 85

நீலாறு காமலரு நீள்வீதிச் சாருமணி
காலாறு பாயுங் கதிரையே—மாலான
நெஞ்ச மறுப்பான் நினையுமன்பர் மூலமல
வஞ்ச மறுப்பான் மலை. 86

மாவிரத மாதவரும் வண்ணமலர் வாவிகளுங்
காவி யணியுங் கதிரையே—தூவி
யணிமயிலான் சேவலா னன்பிலார்க் கென்று
மணிமையிலான் சேவலா னன்பு. 87

போதகங் கொம்பாலும் பூங்கொடியார் வாயாலுங்
காதன்முத் தீயுங் கதிரையே—ஓது
மருவார்க டம்பகையை வாட்டுமணி வைவேன்
மருவார் கடம்பன் வரை. 88

இட்டபாற் சட்டியினி லேந்துகின்ற காவடியிற்
கட்டளை மேவுங் கதிரையே—முட்டியமர்
ஏற்றினான் வாழ விரங்கியடி யீந்துகரை
யேற்றினான் வாழு மிடம். 89

நச்சுமட மின்னாரு நந்துபொரு ளீட்டுநருங்
கச்சவட மேற்கொள் கதிரையே—வச்சிரத்தன்
கைப்பிடிமாக் கொண்டானக் கானக் குறத்திதரு
கைப்பிடிமாக் கொண்டான்றன் காப்பு. 90

மன்னிய தோன்றி மலருமதி நூலினருங்
கன்னியத்தங் காட்டுங் கதிரையே—துன்னுபல
கோட்டுவரி மாவுருவங் கோதினான் கொண்டநெடுங்
கோட்டுவரி மாவுருவன் குன்று. 91

பாற்பாப்பு ளொன்று படைவீர ரோர்நான்கு
காற்பா டலஞ்சேர் கதிரையே—போற்றியருள்
என்னத்தா னென்பா லிடர்களைவா னிக்குவே
ளென்னத்தா னென்பா னிடம். 92

விண்ணுறை சோலை வியன்மலரும் வேண்டினருங்
கண்ணறை போக்குங் கதிரையே—கண்ணருளி
வாகா முருகா வரிமருகா பன்னிரண்டு
வாகா வெனவருவான் வைப்பு. 93

ஆசை மறந்தவரு மண்டிவந்து வேண்டுநருங்
காசை மறுக்குங் கதிரையே—ஆசை
விடக்குஞ் சரிக்கும் வினையுமறுத் தாளுங்
கடக்குஞ் சரிமகிழ்நன் காப்பு. 94

நல்ல தவரு நடந்து வருவோருங்
கல்லறையிற் றங்குங் கதிரையே—அல்லன்மிகு
கண்டூதி வைத்தென் கருமலமுடியக்
கண்டூதி வைப்பான்றன் காப்பு. 95

ஓதுவார் நாவி லுயர்ந்ததே மாமரத்திற்
காதம் பரிவாழ் கதிரையே—போதலரும்
பன்னிரண்டு கண்ணான் பழநிப் பழம்பதியான்
என்னிரண்டு கண்ணா னிடம். 96

பாலமரும் பூங்காவிற் பாலிடையர் முன்றில்வயிற்
காலச மேவுங் கதிரையே—ஏலுமுடற்
போக்கும் வரவும் புரிவினையும் பொல்லாப்பும்
போக்கும் வரதன் புகல். 97

செவ்வைப் புனத்திற் றிருவிழாக் காலத்திற்
கவ்வை மலியுங் கதிரையே—யெவ்வமறப்
பார்ப்பா னமர்ந்துவிழி பன்னிரண்டாற் பார்த்தவற்றைத்
தீர்ப்பா னமருஞ் சிலம்பு. 98

சாந்த நிலைத்தொண்டர் தாலுஞ் சிறுகுடியுங்
காந்தாரம் பாடுங் கதிரையே—ஏந்துமுச்சங்
கத்த னமாதிக் கடவுள் பரமசு
கத்தனமா வென்பான்றன் காப்பு. 99

வாய்ச்ச கணியில் வனவேடர் வாழ்குடியிற்
காய்ச்சுரை மேவுங் கதிரையே—வாய்ச்சமுதன்
மாக்குஞ் சரவணத்தன் மாமனத்தன் மாறிலின்ப
மாக்குஞ் சரவணத்தன் வாழ்வு. 100

முட்டுவழிச் செல்வோரு மூதறிஞ ருந்தலையிற்
கட்டிறக்கி யாறுங் கதிரையே—முட்டு
மிருமலச் சிக்கறுத்தே யென்னையாண் மும்மைக்
கருமலச் சிக்கறுப்பான் காப்பு. 101

மேல்கீழ்ப் பிறவிகளில் வீழ்குநரை வேர்த்தோரைக்
காலாறு தல்செய் கதிரையே—நாலாறு
மேழுமைஞ்சி னீங்கி யினிதருள வெம்பிறவி
நாளுமைஞ்சி நீங்கு நகம். 102

தெய்வப் பணியுந் திருத்தல யாத்திரையுங்
கைவல்லி யஞ்செய் கதிரையே—செய்யதமிழ்
முன்பாட்டுங் கேட்டான் முதிர்வினைகண் மாற்றவுவந்
தென்பாட்டுங் கேட்டா னிடம். 103

**கதிரைச் சிலேடை வெண்பா முற்றிற்று**

# ஆசிரியர் அகராதி

# பாட்டுடைக் கோவில் அகராதி

**கோவில் பெயர் பக்க எண்**

| கோவில் பெயர் | பக்க எண் |
|---|---|

# பாட்டு முதற்குறிப்பு அகராதி